

# श्री शृङ्गेरी जगद्गुरु महासंस्थानं,

## शारदापीठम् ।

शृङ्गेरी — कडूर, मैसूर स्टेट् ॥

**Sri Sringeri Jagadguru Mahasamsthanam,**

**Sarada Pitham.**

SRINGERI—KADUR. (Mysore State)

शिंगेरी ७—४—१९६९

ब्रह्मनिष्ठैः अस्मदाचार्यपादैः विरचितानि स्तोत्राणि बहूनि सन्ति। तानि सर्वाण्यपि भगवद्भक्तिभावोज्जृम्भितानि। तेषां अर्थावबोधसहितेन पाठेन मनसः समुल्लासः प्रसन्नता च भवति। स्तोत्रेष्वेतेषु कतिचन पूर्वं मुद्रापितानि। भक्तजनानां सुलभार्थावबोधाय प्रतिपदं द्राविडभाषया अनूद्य कतिचन स्तोत्राणि अधुना मुद्रापितानि सन्ति। तदिदं अवलोक्य वयं नितरां हृष्यामः। आशास्महे च पुस्तकमिदं भक्तजनपाणिपल्लवालंकरणं भूयादिति ॥

विद्यातीर्थः

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யேத்யாதி

ஸமஸ்த பிருதாவளீ ஸமலங்க்ருத

ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி

ஸ்ரீ ஜகத்குரு

ஸ்ரீ ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள்

அருளிய

# ஸ்ரீமுகம்

ப்ரஹ்மநிஷ்டர்களான எமது ஆசார்ய பாதரவர்களால் அநேகம் ஸ்தோத்திரங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாம் பகவானிடத்தில் பக்தியை வளர்ப்பனவாக உள்ளன. பொருளுணர்ந்து இந்த ஸ்தோத்திரங்களைப் படிப்பதால் மனதிற்கு மலர்ச்சியும் தெளிவும் உண்டாகின்றன. இவைகளில் சில ஸ்தோத்திரங்கள் ஏற்கெனவே அச்சிடப்பட்டுள்ளன. பக்தர்கள ஸுலபமாக இதன் பொருளை அறிந்துகொள்வதற்காக தமிழில் பதவுரை கருத்துரைகளுடன் சில ஸ்தோத்ரங்கள் இப்பொழுது அச்சிடப்பட்டிருக்கின்றன. இதை பார்த்து நாங்கள் மிகவும் ஸந்தோஷமடைகிறோம். இந்நூல் பக்தர்களின் ஹஸ்தங்களில் விளங்கவேண்டுமாக ஆசீர்வதிக்கிறோம்.

7—4—1969
சிருங்கேரி

வித்யாதீர்த்தர்.

# பதிப்புரை

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாளால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட சதுராம்னுய பீடங்களில் முக்யமான தக்ஷிணும்னுய சிருங்ககிரி ஸ்ரீ சாரதாவியாக்யான ஸிம்ஹாஸனத்தில் 34வது ஜகத்குரு பட்டத்தை அலங்கரித்து உலகம் முழுவதற்கும் நல் வழியைக்காட்டி உபதேசித்து பின்னுல் ப்ரஹ்மானந்த ரஸானுபவத்துடன் ஜீவன்முக்தி நிலையில் விளங்கி விதேஹ கைவல்யத்தை அடைந்த ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் சிருங்ககிரியிலும் விஜயயாத்ராஸமயத்திலும் பற்பல ஸ்தோத்ரங்கள் இயற்றியுள்ளார்கள். குருதேவதா ஸ்தோத்ரங்கள் தவிற கவிகளின் பத்ததியை யொட்டி வேடிக்கையான சாடு சுலோகங்களும் செய்துள்ளார்கள். ஸமஸ்யாபூரணமாகவும் ப்ரக்ருதிவர்ணனபரமாகவும் மஹாராஜ ஆசீர்வாதருபமாகவும் பல சுலோகங்கள் உண்டு. முன் ஸங்கல்பமில்லாமல் அந்தந்த சமயங்களில் அவர்களின் வதநாரவிந்தத்திலிருந்து அருள் வாக்காக வெளிவந்தவைபல.

ஸ்ரீரங்கம் குருபக்தசிகாமணி ஸ்ரீ T. K. பாலஸுப்ரமண்ய அய்யர் ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவந்ருஸிம்ஹ பாரதீஸ்வாமிகள் அருளிய ஸ்தோத்ரங்கள் எல்லாவற்றையும் சேர்த்து தமது ஸ்ரீ வாணீவிலாஸம் அச்சகத்தில் அச்சிட்டு "பக்தி ஸுதா தரங்கிணீ" என்ற பெயரில் வெளியிட்டிருப்பது போல இம்மஹானின் ஸ்தோத்ரங்களையும் ஒரே புஸ்தகமாக அச்சிட்டிருக்கிருர். ஆனுல் அச்சிடப்படாத ஸ்தோத்ரங்கள் பல உள்ளன. இவைகள் ஸ்ரீ ஜகத்குருவின் அமிருதஹஸ்தத்தால் நோட் புஸ்தகத்தில் எழுதப்பட்டு அவர்வசமே இருந்ததாலும் இதை யாரிடமும் அவர் கொடுக்காததாலும் இதுவரை அச்சிடமுடியவில்லை. பின்னுல் இப்போதைய மஹாஸந்நிதானம் ஸ்ரீ ஜகத்குரு அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் எங்கள் பிரார்த்தனையின் பேரில் அச்சிட அனுமதி கொடுத்து அவற்றையளித்தார்கள்.

ஸ்ரீ ஜகத்குரு அருளிய ஸ்தோத்திரங்கள் எல்லாவற்றிலும் விளையாட்டாக எழுதிய சாடு சுலோகங்களிலும் கூட குரு தேவதா பக்தியும் வைராக்யாதிஸாதனங்களும் சாஸ்திரார்த்தங்களும் நன்கு எடுத்துக்காட்டியிருப்பதைக்காணலாம்,

இவற்றிலுள்ள அரிய கருத்துக்களையெல்லாம் ஸம்ஸ்கிருத பாஷையில் அதிபரிசயமில்லாதவர்களும் நன்கு புரிந்து கொள்ளவேண்டும் என்ற நோக்கத்துடன் இவற்றிற்கு தமிழில் பதவுரை கருத்துரைகள் தயார் செய்து ஏற்கெனவே அச்சிடப்பட்டவை, அச்சிடப்படாதவை எல்லாவற்றையும் சேர்த்து கொஞ்சம் கொஞ்சமாக "ஸ்ரீ சங்கரகிருபா" மாதப் பத்திரிகையில் வெளியிட்டுவருகிறோம். இவற்றைத்தனிப் புஸ்தகமாகவும் அச்சிட்டுவெளியிட வேண்டும் என்று பல அன்பர்கள் தெரிவித்துக்கொண்டதற்கிணங்க இப்பொழுது அதன் முதல்பாகம் வெளியிடப்படுகிறது மற்ற பாகங்களும் பின்னால் வெளிவரும்.

இந்த முதல் பாகத்தில் கணேச ஸ்தோத்ரங்கள் 2ம் ஸுப்ரமண்யஸ்தோத்ரங்கள் 3ம் தமது குருவான ஸ்ரீந்ருஸிம்ஹ பாரதீஸ்வாமிகள் விஷயமான ஸ்தோத்ரங்கள் 7ம் ஸ்ரீ சங்கரா சார்யஸ்தோத்ரம் 1ம் ஆக 13 ஸ்தோத்ரங்கள் உள்ளன. மற்ற ஸ்தோத்ரங்கள் ஸ்ரீ சங்கரக்ருபா பத்திரிகையில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவைகளும் தனிப்புஸ்தகங்களாக பின்னால் வெளியிடப்படும்.

முதல் பாகத்தில் கணேச விஷயகமாயும் ஸுப்ரமண்ய விஷயகமாயும் அபூர்வமான மானஸ பூஜா ஸ்தோத்ரங்கள் உள்ளன. இந்த ஸ்தோத்ர பாடத்தால் பூஜா பலனும் கிடைக்கும். ஷண்முக புஜங்க ஸ்துதியும் ஷண்முக பஞ்சரத்ன ஸ்துதியும் குன்னக்குடிக்கு விஜயம் செய்து அங்கு கோயில் கொண்டுள்ள ஸுப்ரமண்யரை தர்சித்த சமயம் அருளியது ஸ்ரீந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் திவ்ய மஹிமைகளைப் பற்பல விதமாக நன்கு எடுத்துக்காட்டும் குரு ஸ்தோத்ரங்களில் தோடக விருத்தத்தில் அமைந்த ஸ்தோத்ரமும் நீலகண்ட தீக்ஷிதரின் சிவோத்கர்ஷ மஞ்ஜரியைப்போன்று அமைந்த தேசிகோத்கர்ஷ மஞ்ஜரியும் உள்ளன. இதே ரீதியில் வாண்யுத்கர்ஷ மஞ்ஜரியும் அருளியுள்ளார்கள். குருவின் நாமாவிலும் ஸ்ரீ சங்கராசார்ய நாமாவிலும் உள்ள அக்ஷரங் களை க்ரமமாக முதலெழுத்தாக வைத்து அமைக்கப்பட்ட சுலோகங்கள் அடங்கிய இரண்டு ஸ்தோத்ரங்கள் உள்ளன.

எங்கள் பிரார்த்தனையின்பேரில் இந்த ஸ்தோத்ர புஸ்தகத் திற்கு ஸ்ரீமுகம் தந்து அருளிய ஸ்ரீ ஜகத்குரு அவர்களின்

திவ்ய சரணாரவிந்தங்களில் பக்திவினயத்துடன் ப்ரணாமங்களை ஸமர்ப்பிக்கிறோம்.

இதிலுள்ள ஸ்தோத்ரங்களுக்கு ஸ்ரீ ஞானானந்தபாரதீ ஸ்வாமிகளும் ஸ்ரீ R. மஹாலிங்கம் அய்யரும் ஸ்ரீ K S. வெங்கடராம சாஸ்திரிகளும் பதவுரை கருத்துரை எழுதித்தந்து உதவிசெய்திருக்கிறார்கள். ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் வழக்கம்போல் எல்லாவற்றையும் நன்கு கவனித்து சோதித்து அச்சிடத்தயார் செய்து சிறந்த முறையில் வெளிவர எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகளுக்கு விநயபூர்வகமான வந்தனங்களையும் ஸ்ரீ R. மஹாலிங்கம் அய்யருக்கும் ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கும் எங்கள் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஜீவன்முக்தர் அருளிய இந்த ஸ்தோத்ரங்களை ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் ஸ்ரீ முகத்தில் உபதேசித்த பிரகாரம், பொருளை உணர்ந்து படிப்பதால் குருதேவதா பக்தியைப் பெற்று ஸகல சிரேயஸ்ஸுகளையும் பெறலாம் என்பது நிச்சயம்.

ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி

# விஷய ஸூசி


| | | |
|---|---|---|
| ஸ்ரீ கணேசஸ்துதிமஞ்ஜரி | ... | 1- 16 |
| ஸ்ரீ கணேசமாநஸபூஜாஸ்தோத்ரம் | ... | 17- 24 |
| ஸ்ரீ சரவணபவமாநஸபூஜாஸ்தோத்ரம் | ... | 25- 32 |
| ஸ்ரீ ஷண்முக புஜங்கஸ்துதி | ... | 33- 41 |
| ஷண்முகபஞ்சரத்ன ஸ்துதி | ... | 42- 47 |
| தோடகஸ்தோத்ரம் | ... | 48- 69 |
| பாதாவலம்பனஸ்துதி | ... | 70- 84 |
| தேசிகோத்கர்ஷ மஞ்ஜரி | ... | 85-103 |
| குருப்ரார்த்தனஸ்தோத்ரம் | ... | 104-114 |
| ஸ்ரீ குருஸுவர்ணமாலாஸ்தோத்ரம் | ... | 115-131 |
| ஸ்ரீ மதாசார்யேந்த்ரஸ்தவம் | ... | 131-138 |
| நவரத்னமாலா | ... | 139-147 |
| ஆசார்யபதாவலம்பநஸ்துதி | ... | 148-156 |



ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி
ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள்



ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி

ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள்

॥ श्रीः ॥

# ॥ श्रीगणेशस्तुतिमञ्जरी ॥

## ஸ்ரீ கணேச ஸ்துதி மஞ்ஜரீ

ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி
ஸ்ரீ சந்திர சேகரபாரதீ ஸ்வாமிகள் அருளியது.



सद्गुरुगजास्यवाणीचरणयुगाम्भोरुहेषु मद्धृदयम् ।
सततं द्विरेफलीलां करुणामकरन्दलिप्सया तनुताम् ॥ १ ॥

ஸத்குரு கஜாஸ்ய வாணீ சரண யுகாம்போருஹேஷு
மத்ஹ்ருதயம் ।
ஸததம் த்விரேப லீலாம் கருணா மகரந்த லிப்ஸயா தனுதாம் ॥

**मद्धृदयं**-என்னுடைய மனஸானது, **सद्गुरुगजास्यवाणी**-ஸத்குருநாதர், கணபதி, சாரதா, இவர்களுடைய, **चरण-युगाम्भोरुहेषु**-இருபாதங்களான தாமரைகளில், **करुणामकरन्द-लिप्सया**-கருணையாகிற தேனை அடைவதற்காக, **सततं**-எப்பொழுதும், **द्विरेफलीलां**-வண்டின் லீலையை, **तनुतां**-செய்யட்டும்.

[குருநாதர், கணபதி, சாரதா இம்மூவர்களின் பாதாரவிந்தங்களிலிருந்தும் கருணையாகிற தேன் பெருகிக்கொண்டேயிருக்கிறது. அதை அருந்துவதற்காக என் மனஸ் வண்டுபோல் அவைகளிலேயே ஈடுபட்டிருக்கட்டும். தாமரைப்பூவில் மகரந்தம் இல்லாவிட்டால் அங்கு வண்டு செல்லாது. இங்கேயோ வற்றாமல் கருணாரஸம் எப்பொழுதும் பெருகிக்கொண்டிருப்பதால் எப்பொழுதும் என் மனம் திருவடிகளில் ஈடுபடட்டும்.] (1)

कल्याणं नः क्रियासुः कटतटविगलद्दाननीरप्रवाहो-
न्माद्यद्भृङ्गारवाराविततनिखिलजगन्मण्डलस्येशसूनोः ।

प्रत्यूहध्वान्तराशिप्रमथनशुचिकालीनमध्याह्नभानोः
वामाश्लिष्टप्रियस्य प्रणतदुरितहृद्दन्तिनः सत्कटाक्षाः ॥ २ ॥

கல்யாணம் ந: க்ரியாஸு: கடதட விகலத் தான
நீர ப்ரவாஹோன்-
மாத்யத் ப்ருங்காரவாராவித நிகில ஜகன்
மண்டலஸ்யேஶஸூநோ: ।
ப்ரத்யூஹ த்வாந்த ராஶி ப்ரமதன ஶுசி காலீந
மத்யாஹ்ந பாநோ:
வாமாச்லிஷ்ட ப்ரியஸ்ய ப்ரணத துரிதஹ்ருத்தந்தின:
ஸத்கடாக்ஷா: ॥

कटतटविगलत्-(தனது) நெற்றிக்கன்னப் பிரதேசத்திலிருந்து வழிகிற, दाननीरप्रवाह-மதஜலப் பெருக்கினால், उन्माद्यत्-மதங்கொண்ட, भृङ्गारव-வண்டுகளின் சப்தத்தினால், आरावित-இரைச்சல் உள்ளதாகச் செய்யப்பட்ட, निखिलजगन्मण्डलस्य-எல்லா உலக மண்டலத்தையுமுடையவரும், प्रत्यूहध्वान्तराशि-விக்னங்களாகிற இருட்டுக் கூட்டங்களை, प्रमथन-நாசம் செய்வதில், शुचिकालीन-கோடை காலத்து, मध्याह्नभानोः-மத்தியான ஸூர்யனாக இருப்பவரும் वामाश्लिष्टप्रियस्य-இடது பக்கத்தில் பார்யையை ஆலிங்கனம் செய்துகொண்டிருப்பவரும், प्रणतदुरितहृद्दन्तिनः-வணங்குபவர்களுடைய பாபங்களைப்போக்கடிக்கும் யானை வடிவமாக இருப்பவருமான, ईशसूनोः-பரமசிவன் புத்திரரான கணேசருடைய, सत्कटाक्षाः-மங்களமான கடைக்கண் பார்வைகள், नः-நமக்கு, कल्याणं-க்ஷேமத்தை, क्रियासुः-செய்யட்டும்.

[கணபதியை ஸாதாரணமாக நித்ய பிரஹ்மசாரியாகவே வர்ணிப்பது பிரஸித்தமாயிருந்தபோதிலும், சில அவஸரங்களில் வல்லபை என்ற ஒரு பார்யையுடனும், சில அவஸரங்களில் ருத்தி, ஸித்தி என்ற இரண்டு பார்யைகள் உண்டென்றும் புராணங்களில் காண்கிறது.] (2)

सिन्दूरबन्धुरमुखं सिन्धुरमाद्यं नमामि शिरसाऽहम् ।
वृन्दारकमुनिवृन्दक... ... विघ्नशैलदम्भोलिम् ॥ ३ ॥

ஸிந்தூர பந்துர முகம் ஸிந்துரமாத்யம் நமாமிஶிரஸாऽஹம் ।
ப்ருந்தாரக முனி ப்ருந்தக ... விக்ன ஶைல தம்போளிம் ॥

**सिन्दूरबन्धुरमुखं**-ஸிந்தூரப் பொடியால் அழகிய முகத்தை உடையவரும், **बृन्दारकमुनिवृन्दक** – தேவர்கள் முனிவர்கள் இவர்களின் கூட்டங்கள் ... ... ... **विघ्नशैल**-இடையூறுகளாகிய மலைகளுக்கு, **दम्भोलिं** – வஜ்ராயுதமாயிருப்பவரும், **आद्यं** – முதலாவதான, **सिन्धुरं** – யானையாயிருப்பவருமான கணேசரை, **अहं**–நான், **शिरसा**–தலையினால், **नमामि**–வணங்குகிறேன். (3)

**आधोरणा अंकुशमेत्य हस्ते गजं विशिक्षन्त इति प्रथाऽस्ति ।**
**पञ्चास्यसूनुर्गज एव हस्ते धृत्वाऽङ्कुशं भाति विचित्रमेतत् ॥ ४ ॥**

ஆதோரணா அங்குஶமேத்ய ஹஸ்தே
கஜம் விஶிக்ஷந்த இதி ப்ரதாऽஸ்தி ।
பஞ்சாஸ்யஸூநுர் கஜ ஏவ ஹஸ்தே
த்ருத்வாऽங்குஶம் பாதி விசித்ரமேதத் ॥

**आधोरणाः** - யானைப்பாகர்கள், **हस्ते** - கையில், **अङ्कुशं**–துறட்டியை, **एत्य**-அடைந்து, **गजं**-யானையை, **विशिक्षन्ते**–அடக்குகிறார்கள். **इति**-என்று, **प्रथा**-உலகத்தில் பிரஸித்தி, **अस्ति** – இருக்கிறது. **पञ्चास्यसूनुः**-பரமசிவனின் புத்திரனான (ஸிம்ஹத்திற்கு பிள்ளையான) **गजः एव**–யானையே, **हस्ते**–கையில், **अङ्कुशं**-துறட்டியை, **धृत्वा** - தரித்துக்கொண்டு, **भाति**–பிரகாசிக்கிறது. **एतत्** – இது, **विचित्रं**–மிகவும் ஆச்சர்யமானது.

[ஸிம்ஹத்திற்குப் பிள்ளையாக யானை ஏற்படுவதே விசித்திரம். யானை துறட்டியினால் அடக்கப்படவேண்டியிருக்க, அது தானே தன் கையில் துறட்டியை ஏந்தியிருப்பது இன்னமும் விசித்திரம். இவ்விதம் அங்குசத்தை கணேசர் தன் கையில் வைத்திருப்பதை வர்ணிக்கிறார் ஸ்ரீமத் ஆசார்யாள். இதே விஷயத்தைக் கொஞ்சம் விஸ்தாரமாக வேறு விருத்தத்திலும் சொல்கிறார்.] (4)

लोके हस्ततले समेत्य हि सृणिं शिक्षन्त आधोरणाः
स्तम्बक्रीडमिति प्रथाऽखिलजनैः संश्रूयते दृश्यते ।
धृत्वा स्वीयशयेऽङ्कुशं मदविहीनोऽयं निराधोरणः
चित्रं पश्यत राजतीह विबुधाः पञ्चास्यसूनुर्गजः ॥ ५ ॥

*லோகே ஹஸ்ததலே ஸமேத்ய ஹி ஸ்ருணிம்*
*ஶிக்ஷந்த ஆதோரணா:*
*ஸ்தம்பக்ரீடமிதி ப்ரதாZகிலஜனை: ஸம்ச்ரூயதே த்ருச்யதே ।*
*த்ருத்வா ஸ்வீயஶயேZங்குஶம் மதவிஹீனோZயம்*
*நிராதோரண:*
*சித்ரம் பச்யத ராஜதீஹ விபுதா: பஞ்சாஸ்யஸூனுர்கஜ: ॥*

**लोके**–உலகத்தில், **आधोरणाः**-யானைப்பாகர்கள், **हस्ततले**-கையில், **सृणिं** – அங்குசத்தை, **समेत्य** – நன்கு அடைந்து, **स्तम्बक्रीडं** – யானையை, **शिक्षन्ते हि**–அடக்குகிறார்கள். **इति**–என்று, **प्रथा**–பிரஸித்தியானது, **अखिलजनैः**–எல்லா ஜனங்களாலும், **संश्रूयते**–நன்கு கேட்கப்படுகிறது, **दृश्यते**-பார்க்கவும்படுகிறது. **विबुधाः**–வித்வான்களே! **चित्रं**–இந்த ஆச்சர்யத்தை, **पश्यत** – பாருங்கள். **पञ्चास्यसूनुः** – ஸிம்ஹத்திற்குப் பிள்ளையாக (பரமசிவனின் புத்திரனாக) **गजः**–ஒரு யானை, **इह**–இங்கு, **राजति**–பிரகாசிக்கிறது. மேலும், **अयं**–இது, **स्वीयशये**–தன் கையிலேயே, **अङ्कुशं**–அங்குசத்தை, **धृत्वा**–தரித்துக்கொண்டு, **मदविहीनः**–மதஜலப்பெருக்கன்னியில் (மதமன்னியில்) இருக்கிறது. **निराधोरणः**-இதை அடக்க யானைப்பாகனும் கிடையாது.

[உலகில் சிறந்த யானைகளுக்கு மதம் ஏற்படும். அதை அடக்க மாவுத்தன் தன் கையில் துறட்டியை வைத்துக் கொண்டு இருப்பான். இந்த கணபதி யானைக்கோ மதம் (கர்வம்) கிடையாது. மாவுத்தனும் கிடையாது. துறட்டியைத் தன் கையிலேயே வைத்துக்கொண்டிருக்கிறார். மேலும் இவர் ஸிம்ஹத்தின் (சிவனின்) பிள்ளை. இவற்றில் ஒவ்வொன்றும் ஆச்சர்யமான ஸம்பவம்] (5)

खगपपूजितसच्चरणाम्बुजं खगपशात्रववेष्टिततुन्दकम् ।
कवनसिद्ध्यभिलाष्यहमाश्रये कवनदीक्षितमादिगजाननम् ॥ ६ ॥

ககபபூஜித ஸச்சரணாம்புஜம்
ககபஶாத்ரவ வேஷ்டித துந்தகம் ।
கவன ஸித்த்யபிலாஷ்யஹமாச்ரயே
கவன தீக்ஷிதமாதி கஜானனம் ॥

**खगप**-ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் பக்ஷிகளுக்குப் பதியான கருடனால், **पूजित**-பூஜிக்கப்பட்ட, **सच्चरणाम्बुजं**-மங்களமான பாதபத்மங்களையுடையவரும், **खगप**-பக்ஷிகளுக்கு அரசனை கருடனை, **शात्रव**-சத்துருவாகவுடைய ஸர்ப்பங்களினால், **वेष्टित**-சுற்றப்பட்ட, **तुन्दकं**-வயிற்றை உடையவரும், **कवनदीक्षितं**-கவனம் செய்வதில் ஈடுபட்டவருமான, **आदिगजाननं**-ஆதியானை முகத்தோனை, **कवनसिद्ध्यभिलाषी**-கவனசக்தி ஏற்படவேண்டுமென்ற ஆசையோடுகூடிய, **अहं**-நான், **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

[கணேசருக்கு '**कविं कवीनां**' கவிகளுக்கெல்லாம் கவி என்றபிரஸித்தி வேதத்திலேயே இருப்பதாலும், அர்த்தானுஸந்தானத்துடன் மஹாபாரதம் பூராவும் எழுதியிருப்பதாலும் அவரை ஆசிரயித்தால் கவனசக்தி ஏற்படுவதில் ஸந்தேஹமென்ன என்று தாத்பர்யம்.] (6)

गगनचारिभिरञ्चितपादुकं करधृतांकुशपाशसुमोदकम् ।
जितपतङ्गरुचिं शिवयोर्मुदं ददतमादिगजाननमाश्रये ॥ ७ ॥

ககனசாரிபிரஞ்சிதபாதுகம்
கரத்ருதாங்குஶபாஶஸுமோதகம் ।
ஜிதபதங்கருசிம் ஶிவயோர் முதம்
தததமாதி கஜானனமாச்ரயே ॥

**गगनचारिभिः**-ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் தேவர்களால், **अञ्चित**-பூஜிக்கப்பட்ட, **पादुकं**-பாதுகைகளுடன் கூடியவரும், **करधृत**-கைகளில் ஏந்திய, **अंकुशपाशसुमोदकं**-அங்குசம், பாசம்,

மோதகம் இவைகளோடு கூடியவரும், **जितपतङ्गरुचिं**-ஸூர்ய னுடைய காந்தியை ஜயித்தவரும், **शिवयोः**-பார்வதிக்கும் பரமசிவனுக்கும், **मुदं**-ஸந்தோஷத்தை, **ददत्**-கொடுப்பவரு மான, **आदिगजाननं**-ஆதியானை முகத்தோனை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன். (7)

नागाननस्य जठरे निबद्धोऽयं विराजते ।
विनिर्गतो यथा नागो नाभ्यधोभुवनाद्बहिः ॥ ८ ॥

நாகாநநஸ்ய ஜடரே நிபத்தோZயம் விராஜதே ।
விநிர்கதோ யதா நாகோ நாப்யதோபுவனாத் பஹி: ॥

**नागाननस्य**-கஜானனருடைய, **जठरे**-வயிற்றில், **निबद्धः**-கட்டப்பட்டிருக்கும், **अयं**-இந்த ஸர்ப்பமானது, **नाभ्यधो-भुवनात्**-தொப்புளுக்குக் கீழுள்ள உலகத்திலிருந்து, **बहिः**-வெளியே, **विनिर्गत**-நன்கு வெளிப்பட்ட, **नागः**-ஸர்ப்பம், **यथा**-எப்படியோ அப்படி, **विराजते**-பிரகாசிக்கிறது.

[கணேசருடைய சரீரத்தில் பதிநான்கு உலகங்களும் அடங்கியிருப்பதில் தொப்புளுக்கு பேலே மேல் உலகங்கள் ஏழும், கீழே கீழ் உலகங்கள் ஏழும் உள்ளன. வாஸுகி முதலான ஸர்ப்பங்கள் வஸித்துவருவது கீழ் லோகங் களில்தான். ஆகையால் அவைகளிலிருந்து மேல் கிளம்பி தொப்புள் துவாரத்தின் மூலமாக ஒரு ஸர்ப்பம் வெளியில் வந்து கணேசரை அரைஞாண் மாதிரி சுற்றிக்கொண் டிருக்கலாமோ என்ற கல்பனை] (8)

प्रलम्बारिमुखस्तुत्यं जगदालम्बकारणम् ।
लम्बिमुक्तालताराजल्लम्बोदरमहं भजे ॥ ९ ॥

ப்ரலம்பாரி முக ஸ்துத்யம் ஜகதாலம்ப காரணம் ।
லம்பி முக்தாலதா ராஜத் லம்போதரமஹம் பஜே ॥

**प्रलम्बारि**-பிரலம்பாஸுரனுக்கு சத்துருவான கிருஷ்ணன் (மஹாவிஷ்ணு), **मुख**-முதலானவர்களால், **स्तुत्यं**-ஸ்துதிக்

கத்தகுந்தவராயும், जगदालम्बकारणं-ஜகத்தை தாங்குவதற்குக் காரணமானவராயும், लम्बिमुक्तालता-தொங்குகிற முத்துமாலையினால், राजत्-பிரகாசிக்கிற, लम्बोदरं-தொங்கின வயிற்றோடு கூடினவராயுமுள்ள கணேசரை, अहं-நான், भजे-பஜிக்கிறேன். (9)

गजेन्द्रवदनं हरिप्रमुखदेवसंपूजितं
सहस्रकरतेजसं सकललोककामप्रदम् ।
दयारसमदोदकस्रवदुभौ कटौ बिभ्रतं
नमामि शिरसा सदा सृणिविभूषितं विघ्नपम् ॥ १० ॥

கஜேந்த்ர வதநம் ஹரி ப்ரமுகதேவ ஸம்பூஜிதம்
ஸஹஸ்ரகர தேஜஸம் ஸகல லோக காமப்ரதம் ।
தயாரஸ மதோதக ஸ்ரவதுபௌ கடௌ பிப்ரதம்
நமாமி ஶிரஸா ஸதா ஸ்ருணிவிபூஷிதம் விக்னபம் ॥

गजेन्द्रवदनं-சிறந்த யானையின் முகத்தையுடையவரும், हरिप्रमुखदेवसंपूजितं-விஷ்ணு முதலான தேவர்களால் பூஜிக்கப்பட்டவரும், सहस्रकरतेजसं-ஆயிரக்கணக்கான கிரணங்களோடுகூடிய ஸூர்யனுடைய தேஜஸ்ஸையுடையவரும், सकललोककामप्रदं-எல்லா ஜனங்களுக்கும் வேண்டியதை எல்லாம் கொடுப்பவரும், दयारसमदोदकस्रवदुभौ-தயாரஸமாகிற மதஜலத்தை பிரவஹிக்கவிடும் இரண்டு, कटौ-நெற்றிக் கன்னங்களை, बिभ्रतं-தரித்துக்கொண்டிருக்கிறவரும், सृणिविभूषितं-அங்குசத்தினால் அலங்கரிக்கப்பட்டவருமான, विघ्नपं-விக்னேசுவரரை, सदा-எப்பொழுதும், शिरसा-தலையால், नमामि-வணங்குகிறேன். (10)

गण्डस्रवत्स्वच्छमदप्रवाहगङ्गाकटाक्षार्कसुतायुतश्च ।
जिह्वाञ्चले गुप्तवहत्सरस्वतीयुतोऽयमाभाति गजप्रयागः ॥ ११ ॥

கண்ட ஸ்ரவத் ஸ்வச்ச மதப்ரவாஹ
கங்கா கடாக்ஷார்க்க ஸுதா யுதச்ச ।

ஜிஹ்வாஞ்சலே குப்தவஹத் ஸரஸ்வதீ-
யுதோऽயமாபாதி கஜப்ரயாகः ॥

**गण्डस्रवत्स्वच्छमदप्रवाहगङ्गा**-கன்னத்தில் பிரவஹிக்கும் தெளிவான மதஜலப் பெருக்கான கங்கையோடும், **कटाक्षार्कसुता**-கடைக்கண் பார்வையான ஸூர்ய புத்திரியான யமுனையோடும், **युतश्च**-கூடினவராகவும், **जिह्वाञ्चले**-நாக்குப் பிரதேசத்தில், **गुप्तवहत्**-மறைந்து பிரவஹிக்கிற, **सरस्वती**-ஸரஸ்வதீ நதீ (வித்யை)யோடு, **युतः**-கூடினவராகவும் இருக்கிற, **अयं**-இந்த கணேசர், **गजप्रयागः**-யானை ரூபமான பிரயாகையாக, **आभाति**-தோன்றுகிறார்.

[மதஜலம் வெளுப்பானதினால் கங்கையாகவும், கடாக்ஷத்தைக் கருப்பாகவே வர்ணிக்கும் முறையாதலால் யமுனையாகவும், வித்யை யாருக்கும் கண்ணுக்குத் தெரியாததினால் ஸரஸ்வதீ நதியாகவும் கல்பிக்கப்பட்டிருக்கிறது. இம் மூன்றையும் உடைய கணேசர் அம் மூன்று நதிகளை உடைய பிரயாகை என்ற க்ஷேத்திரம்போல் பிரகாசிக்கிறார்]

(அ) ஒரு சமயம் கணபதி உத்ஸவத்தில் முன்னால் போடப்பட்டிருந்த அலங்காரப் பந்தலில் நாட்டியம் ஆடுவது போல் சில பொம்மைகள் வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்து ஸ்ரீமத் ஆசார்யாள் அதன் தாத்பர்யத்தை உத்ப்ரேக்ஷிக்கிறார் —

दन्ती नटः स्वपुरतोऽङ्गणरिङ्गमाण-
पाञ्चालिकेक्षणवतामिति सूचयन् सन् ।
मत्पादतामरसबम्भरमानसानां
जिह्वाङ्गणेऽजगृहिणीं खलु नाटयामि ॥ १२ ॥

தந்தீ நட: ஸ்வபுரதோऽங்கண ரிங்கமாண-
பாஞ்சாலிகேக்ஷணவதாமிதி ஸூசயன் ஸன் ।
மத்பாத தாமரஸ பம்பர மாநஸாநாம்
ஜிஹ்வாங்கணேऽஜக்ருஹிணீம் கலு நாடயாமி ॥

दन्ती-யானை ரூபம் தரித்திருக்கும் கணேசராகிய, नटः-நடன், स्वपुरतः-தனக்கு முன்னால், अङ्गणरिङ्खमाण-அங்கணத்தில் அசையும், पाञ्चालिकेक्षणवतां-பொம்மைகளைப் பார்க்கிறவர்களுக்கு, "मत्पादतामरसचञ्चरमानसानां-"என்னுடைய பாதபத்மங்களில் வண்டுபோல சுற்றிக் கொண்டிருக்கும் மனதை உடையவர்களுடைய, जिह्वाङ्गणे-நாக்குப் பிரதேசத்தில், अजगृहिणीं-பிரஹ்மாவின் பத்தினியான ஸரஸ்வதியை, खलु-அவசியம், नाटयामि-நர்த்தனம் செய்யவைப்பேன்", इति-என்று, सूचयन् सन् குறிப்பிட்டுக் கொண்டு (இருக்கிறார்).

[நாட்டியமாடும் நிலையில் இருப்பதாகக் காணப்படும் பொம்மைகளை ஆட்டிவைக்கும் நடன்போல் கணேசர் விளங்குகிறார். அந்த பொம்மைகளையே பார்த்துக்கொண்டிருப்பவர்களைப்பார்த்து "அவற்றைப் பார்க்காமல் உங்கள் மனதை என் திருவடிகளில் செலுத்தினால் உங்கள் நாக்கில் வாணியை நாட்டியமாடச் செய்வேன். எல்லா வித்யைகளும் மனதில் விளங்கும்" என்று எடுத்துக்காட்டுவது போல் விளங்குகிறார் கணபதி]. (12)

पिनाकिपार्वतीमुखारविन्दभास्करायितं
वराभयांकुशादिमान् प्रफुल्लकंजसंनिभैः ।
करैर्दधानमानमत्सुतीक्ष्णबुद्धिदायकं
समस्तविघ्ननाशकं नमाम्यहं विनायकम् ॥ १३ ॥

பிநாகிபார்வதீ முகாரவிந்த பாஸ்கராயிதம்
வராபயாங்குசாதிமான் ப்ரபுல்ல கஞ்ஜ ஸந்நிபை:|
கரைர் ததாநமாநமத் ஸுதீக்ஷ்ண புத்தி தாயகம்
ஸமஸ்த விக்ன நாசகம் நமாம்யஹம் விநாயகம் ||

पिनाकि-பிநாகமென்ற தனுஸை தரிக்கும் பரமசிவன், पार्वती- பர்வத ராஜபுத்திரியான அம்பிகை இவர்களுடைய, मुखारविन्द-முக பத்மங்களை மலரச்செய்யும், भास्करायितं-ஸூர்யனாக இருப்பவரும், प्रफुल्लकञ्जसंनिभैः-நன்கு மலர்ந்த

தாமரைகளைப்போல் பிரகாசிக்கும், **करैः**-கைகளால், **वराभयाङ्कुशादिमान्**-வரதான முத்திரை, அபயப்பிரதான முத்திரை, அங்குசம் முதலானவைகளை, **दधानं**-தரித்துக் கொண்டிருப்பவரும், **आनमत्**-நன்கு வணங்குகிறவர்களுக்கு **सुतीक्ष्ण**-நல்ல கூர்மையான, **बुद्धि**-புத்தியை, **दायकं**-கொடுப்பவரும், **समस्तविघ्ननाशकं**-எல்லா இடையூறுகளையும் போக்கடிக்கிறவருமான, **विनायकं**-விநாயகரை, **अहं**-நான், **नमामि**-நமஸ்கரிக்கிறேன். (13)

अन्तरायगिरिकृन्तनवज्रं दन्तकान्तिसुविभासितलोकम् ।
चिन्तनीयमनिशं मुनिवृन्दैः चिन्तयामि सततं गणनाथम् ॥

அந்தராய கிரிக்ருந்தன வஜ்ரம்
தந்தகாந்தி ஸுவிபாஸித லோகம் ।
சிந்தனீயமனிசம் முனிப்ருந்தை:
சிந்தயாமி ஸததம் கணநாதம் ॥

**अन्तराय**-இடையூறுகளாகிய, **गिरि**-மலைகளை, **कृन्तन**-உடைப்பதில், **वज्रं**-வஜ்ராயுதமாயிருப்பவரும், **दन्तकान्ति**-தந்தத்தின் சோபையினுல், **सुविभासितलोकं**-நன்கு பிரகாசப் படுத்தப்பட்ட உலகங்களோடு கூடினவரும், **मुनिबृन्दैः**-முனிவர் கூட்டங்களினுல், **अनिशं**-எப்பொழுதும், **चिन्तनीयं**-த்யானம் செய்யப்படவேண்டியவருமான, **गणनाथं**-கணேசரை, **सततं**-இடைவிடாமல், **चिन्तयामि**-சிந்திக்கிறேன்.

मुक्तिवधूवरणोत्सुकलोको रक्तिमशाश्वत आशु विहाय ।
भक्तियुतोऽमरपूजितमूर्ते शक्तिगणेश मुदाऽर्चति हि त्वाम् ॥

முக்தி வதூ வரணோத்ஸுக லோகோ
ரக்திமசாச்வத ஆசு விஹாய ।
பக்தியுதோऽமர பூஜித மூர்த்தே
சக்திகணேச முதாऽர்ச்சதி ஹி த்வாம் ॥

**अमरपूजितमूर्ते**-தேவர்களால் பூஜிக்கப்பட்ட மூர்த்தியை உடையவரே! **शक्तिगणेश**-ஹே சக்தி கணேச! **मुक्तिवधू**-

**वरणोत्सुकलोको**-மோக்ஷமாகிற ஸ்திரீயை வரிப்பதில், ஆவலுள்ள மனிதன், **अशाश्वते**-சாசுவதமில்லாத பதார்த்தங்களில், **रक्तिं**-ஆசையை, **आशु**-சீக்கிரமாக, **विहाय**-விட்டுவிட்டு, **भक्तियुतः**-பக்தியுடன் கூடியவனாக, **मुदा**-ஸந்தோஷமாக, **त्वां**-உன்னை, **अर्चति**-அர்ச்சிக்கிறான், **हि**-என்பது பிரஸித்தம்.

[அழியும் விஷயங்களில் ஆசைகொள்ளாமல் நிஷ்காமமாக பக்தியுடன் கணேசரைப் பூஜித்தால் அழிவற்ற முக்தி ஸுகத்தை அடையலாம்] (15)

यत्पादपङ्कजमतीव सुपुण्यपाकाः
संपूजयन्ति भवसागरतारणार्थम् ।
तं पार्वतीशिवमुखाब्जसहस्रभानुं
वन्दे समस्तविषयाञ्चितमावहन्तम् ॥ १६ ॥

யத்பாத பங்கஜமதீவ ஸுபுண்ய பாகா:
ஸம்பூஜயந்தி பவ ஸாகர தாரணார்த்தம் ।
தம் பார்வதீ ஶிவமுகாப்ஜ ஸஹஸ்ர பானும்
வந்தே ஸமஸ்த விஷயாஞ்சிதமாவஹந்தம் ॥

**यत्पादपङ्कजं**-எவருடைய பாதாரவிந்தத்தை, **अतीव**-மிகவும், **सुपुण्यपाकाः**-நல்ல புண்ணிய பரிபாகமுள்ளவர்கள், **भवसागरतारणार्थं**-ஸம்ஸாரமாகிற கடலைத்தாண்டுவதற்காக, **संपूजयन्ति**-நன்றாக பூஜிக்கிறார்களோ, **तं**-அந்த, **पार्वतीशिवमुखाब्जसहस्रभानुं**-பார்வதீ சிவன் இவர்களுடைய முகபத்மங்களுக்கு ஆயிரக்கணக்கான கிரணங்களோடுகூடிய ஸூர்யனாகவும், **समस्तविषयाञ्चितं**-எல்லா விஷயங்களிலும் வேண்டப்பட்டதையெல்லாம், **आवहन्तं**-கொடுப்பவராகவும் இருக்கிற கணேசரை, **वन्दे**-வணங்குகிறேன். (16)

गण्डप्रदेशविगलन्मदनीरपान-
मत्तद्विरेफमधुरस्वर[1]दत्तकर्णम् ।

1, पूरिताशम् ।

विघ्नाद्रिभेदशतकोटिमुमादिगुर्वोः
वक्त्राब्जभास्करगणेशमहं नमामि ॥ १७ ॥

கண்ட ப்ரதேஶ விகளன் மதநீர பான
மத்த த்விரேப மதுர ஸ்வர தத்த கர்ணம் ।
விக்நாத்ரிபேத ஶதகோடிமுமா திகுர்வோ:
வக்த்ராப்ஜ பாஸ்கர கணேஶமஹம் நமாமி ॥

**गण्डप्रदेश**-கன்னப்பிரதேசத்தில், **विगलत्**-பிரவஹிக்கிற **मदनीर**-மதஜலத்தை, **पान**-பானம் செய்ததால், **मत्त**-மதம் பிடித்த, **द्विरेफ**-வண்டுகளுடைய, **मधुर**-இனிமையான, **स्वर**-நாதத்தில், **दत्तकर्ण**-கொடுக்கப்பட்ட காதுகளை உடையவரும், **विघ्नाद्रि**-இடையூறுகளாகிய மலைகளை, **भेद**-பிளப்பதில், **शतकोटि**-வஜ்ராயுதமாயிருப்பவரும், **उमा**-பார்வதீ, **आदिगुर्वोः**-ஆதிகுருவான பரமசிவன் இவர்களுடைய, **वक्त्राब्ज**-முகாரவிந்தங்களுக்கு, **भास्कर**-ஸூர்யனாயிருக்கிறவருமான, **गणेशं**-கணேசரை, **अहं**-நான், **नमामि**-நமஸ்கரிக்கிறேன்.

[தனது கன்னப்பிரதேசங்களில் வழியும் மத ஜலத்தைப் பருகினதால் லாஹிரிகொண்ட வண்டுகளின் ரீங்காரத்தைக் கேட்பதில் தம் அகன்ற காதுகளைச் செலுத்தி மெய்மறந்து நிற்கிறாரோ என்று தோன்றுகிறது இவ்விதமான குழந்தையைப் பார்த்து தாய் தந்தையர்கள் பரமானந்தம் அடைகின்றனர்]

(17)

(அ) கணபதி ஸபை நடக்கும் அலங்காரப் பந்தலில் குதிரை, தேர், யானை இவைகளின் சித்திரங்கள் இருப்பதைப் பார்த்து ஆசார்யாள் உத்ப்ரேக்ஷிக்கிறார் :—

गणेशोऽयं सूचयति मद्द्रष्टॄणां ददे श्रियम्।
अश्वपूर्वां रथमध्यां हस्तिनादप्रबोधिनीम् ॥ १८ ॥

கணேஶோऽயம் ஸூசயதி மத்த்ரஷ்ட்ருணும் ததே ச்ரியம் ।
அச்வ பூர்வாம் ரத மத்யாம் ஹஸ்திநாத ப்ரபோதினீம் ॥

**मद्द्रष्टॄणां**-என்னை தர்சனம் செய்பவர்களுக்கு (வேதத்தில் சொல்லிய), **अश्वपूर्वां**-குதிரைகளை முதலிலும், **रथमध्यां**-ரதங்களை மத்தியிலும் உள்ளதும், **हस्तिनादप्रबोधिनीं**-யானைகளுடைய சப்தத்தினுல் விளக்கப்படுவதுமான, **श्रियं**-ஸம்பத்தை, **ददे**-தருகிறேன் என்று, **अयं**-இந்த, **गणेशः**-கணேசர், **सूचयति**-குறிப்பிடுகிருர். (18)

पुरेन्दुकोपयुक्तदन्तिसान्त्वनेतःतारकाः
उत स्मितांशुसंचयो दिने दिने विजृम्भितः ।
उतोत्तमाङ्गनिस्सृता नु कुम्भसंभवा इति
गणेशकण्ठतारका भवन्ति संशयास्पदम् ॥ १९ ॥

புரேந்து கோபயுக்த தந்தி ஸாந்த்வனேத தாரகா:
உத ஸ்மிதாம்ஶு ஸஞ்சயோ திநே திநே விஜ்ரும்பித: |
உதோத்தமாங்க நிஸ்ஸ்ருதா நு கும்ப ஸம்பவா இதி
கணேஶ கண்ட தாரகா பவந்தி ஸம்ஶயாஸ்பதம் ||

**गणेशकण्ठतारकाः**-கணேசருடைய கழுத்திலுள்ள மாலையின் முத்துக்கள், **पुरा** முன்னொரு காலத்தில், **इन्दु**-சந்திரனிடத்தில், **कोपयुक्त**-கோபத்தோடு கூடியிருந்த, **दन्ति**-கணேசரை, **सान्त्वन**-ஸமாதானப்படுத்துவதற்காக, **इत**-வந்திருக்கும், **तारकाः**-நக்ஷத்திரங்களா? **उत**-அல்லது, **दिने दिने**-பிரதிதினமும், **विजृम्भितः**-வெளிப்பட்டுச்சேர்ந்த, **स्मितांशु**-புன்சிரிப்பின் கிரணங்களுடைய, **संचयः**-கூட்டமா? **उत**-அல்லது, **उत्तमाङ्ग**-உத்தமமான அங்கத்திலிருந்து, **निस्सृताः**-வெளிவந்திருக்கும், **कुम्भसंभवा नु**-யானையின் சிரஸில் உண்டாகும் முத்துக்களா? **इति**-என்று, **संशयास्पदं**-ஸம்சயத்திற்கு இடமாக, **भवन्ति**-இருக்கின்றன.

[விநாயகருக்கு விசேஷதினமான சுக்லசதுர்த்தீ அன்று பக்தர்களால் கொடுக்கப்பட்ட நிவேதனங்களை உட்கொண்டுவிட்டு அஸ்தமனத்திற்குப் பிறகு கணேசர் தட்டுத் தடுமாறி நடந்துவருவதைப் பார்த்து ஆகாசத்தி

லுள்ள சந்திரன் சிரித்தான். அதனால் மிகக்கோபம்கொண்டு இனி யாரும் சுக்ல சதுர்த்தியில் சந்திரனைப் பார்க்கக்கூடா தென்றும் பார்த்தால் தோஷமுண்டென்றும் சபித்து விட்டார். தங்களுடைய பர்த்தாவான சந்திரனிடம் ஏற்பட்ட கோபத்தைத் தணிப்பதற்காக அவர் பார்யை களான நக்ஷத்திரங்கள் இப்பொழுது முத்து வடிவமாக கணேசரிடம் வந்து அவரை ஆராதித்து வருகிறார்களோ? புன்சிரிப்பை எப்பொழுதும் வெண்மை நிறமுள்ளதாக வர்ணிப்பது வழக்கம். பிரதிதினம் ஏற்படும் புன்சிரிப்பு களின் ஒளிகள்தான் கெட்டியாகி முத்துக்களாகத் தோன்று கின்றனவோ? அல்லது உத்தமமான யானைகளின் சிரஸ்ஸில் முத்துக்கள் ஏற்படுமென்று பிரஸித்திஉண்டு. யானைகளுக்குள் சிரேஷ்டராயிருக்கிற கணேசருடைய சிரஸ்ஸிலிருந்து அடிக்கடி வெளிக்கிளம்பி அம் முத்துக்கள் முத்துமாலையாக தோன்றுகின்றனவோ? என்று பலவித மாக ஸ்ரீமத் ஆசார்யார் உத்பிரேக்ஷை செய்கிறார்] (19)

(அ) ஒரு ஸமயம் கணபதி ஸபையின்போது கணேசருடைய இரண்டு கைகள் முழங்கால்களைத்தொட்டுக் கொண்டிருக்கும்படி அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் தாத்பர்யத்தை ஸ்ரீமத் ஆசார்யார் விளக்குகிறார்:—

मदङ्घ्रयर्चकानां भवेज्जानुदघ्नो
भवाम्भोधिरित्येतमर्थं विवक्षुः ।
करौ जानुयुग्मे निधायाविरास्ते
पुरः श्रीगणेशः कृपावारिराशिः ॥ २० ॥

மதங்க்ர்யர்ச்சகானாம் பவேத் ஜானுதக்னோ
பவாம்போதிரித்யேதமர்த்தம் விவக்ஷு: ||
கரௌ ஜானுயுக்மே நிதாயாவிராஸ்தே
புர: ஸ்ரீகணேச: க்ருபா வாரிராசி: ||

**मदङ्घ्रयर्चकानां**-என் பாதங்களை பூஜிப்பவர்களுக்கு, **भवाम्भोधिः**-ஸம்ஸாரக்கடல், **जानुदघ्नः**-முழங்கால் அளவு

மட்டும் ஆழமுள்ளதாக, **भवेत्**-ஆகும், **इति**-என்ற, **एतं**-இந்த, **अर्थं**-விஷயத்தை, **विवक्षुः**-சொல்வதற்கு இச்சைப் பட்டு, **कृपावारिराशिः**-தயா ஸமுத்திரமான, **श्रीगणेशः**-ஸ்ரீகணேசர், **जानुयुग्मे**-இரண்டு முழங்கால்களிலும், **करौ**-கைகளை, **निधाय**-வைத்துக்கொண்டு, **पुरः**-முன்னால், **आविरास्ते**-தோற்றமளிக்கிறார். (20)

लोके धनाढ्यो धनिनः करोति
स्वपादमूलेतजनान् दरिद्रान् ।
त्वं पाशयुक्तोऽपि पदाब्जनम्रान्
पाशैर्विमुक्तान् किमु युक्तमेतत् ॥ २१ ॥

லோகே தநாட்யோ தநிந: கரோதி
ஸ்வபாத மூலேத ஜநான் தரித்ரான் ।
த்வம் பாஶ யுக்தோऽபி பதாப்ஜ நம்ரான்
பாஶைர் விமுக்தான் கிமு யுக்தமேதத் ॥

**लोके**-உலகத்தில், **धनाढ्यः**-நல்ல பணக்காரன், **दरिद्रान्**-ஏழைகளான, **स्वपादमूलेतजनान्**-தன் காலடியில் வந்த ஜனங்களை, **धनिनः**-பணக்காரர்களாக, **करोति**-செய்கிறான். **त्वं**-நீயோ, **पाशयुक्तोऽपि**-பாசத்தோடு கூடினவராயிருந்தும் (பாசத்தைக் கையில் ஏந்தியும்), **पदाब्जनम्रान्**-உன் பாதாரவிந்தத்தில் வணங்குபவர்களை, **पाशैः**-பாசங்களிலிருந்து (எல்லாவித ஸம்ஸாரபந்தத்திலிருந்தும்), **विमुक्तान्**-விடுபட்டவர்களாகச் செய்கிறாய். **एतत्**-இது, **युक्तं किमु**-உசிதமா ?

[உலகத்தில் அவனவனிடம் உள்ள பொருளைத் தனக்கு வேண்டியவர்களுக்குக் கொடுப்பது வழக்கம். பணக்காரன் பணத்தைக் கொடுப்பான். இதுபோல நிலமுள்ளவன் பிறருக்கு நிலத்தையும், கல்வியறிவுள்ளவன் பிறருக்குக் கல்வியையும் கொடுப்பான். உன்னிடமோ உலகத்தி லில்லாத எதிரிடையான ஓர் புதுமை காணப்படுகிறது நீ கையில் பாசத்தை வைத்துக் கொண்டிருந்தபோதிலும் உன்

பக்தர்களைப் பாசமுள்ளவர்களாகச் செய்வதில்லை. பாச மற்றவர்களாகச் செய்கிறாய் துஷ்டர்களைத்தான் பாசத்தால் கட்டுகிறாய் பக்தர்களை ஸம்ஸாரக்கட்டிலிருந்து விடுவித்து முக்தி பதவியைக் கொடுக்கிறாய் என்று கருத்து]. (21)

हे हेरम्ब मदीयचित्तहरिणं ह्यत्यन्तलोलं मुधा
धावन्तं विषयाख्यदुःखफलदारण्येऽनुधावन्नहम् ।
श्रान्तो नास्ति बलं ममास्य हनने ग्राहेऽपि वा तद्भवान्
कृत्वाऽस्मिन् परिपातु मां करुणया शार्दूलविक्रीडितम् ॥

ஹே ஹேரம்ப மதீய சித்த ஹரிணம்
ஹ்யத்யந்த லோலம் முதா
தாவந்தம் விஷயாக்ய துக்க
பலதாரண்யேऽநுதாவன்னஹம் ।
ச்ராந்தோ நாஸ்தி பலம் மமாஸ்ய ஹநநே
க்ராஹேऽபி வா தத் பவான்
க்ருத்வாऽஸ்மின் பரிபாது மாம் கருணயா
சார்தூல விக்ரீடிதம் ॥

हे हेरम्ब-ஹே கணேச! विषयाख्य-விஷயங்கள் என்ற, दुःखफलद-துக்கத்தையே பலனகக்கொடுக்கும், अरण्ये-காட்டில், मुधा-எவ்விதப்பிரயோஜனமுமில்லாமல், धावन्तं-ஓடுகிற, अत्यन्तलोलं-மிகவும் சஞ்சலமான, मदीयचित्तहरिणं-என்னுடைய மனஸாகிற மானை, अनुधावन्-பின் துயர்ந்து ஓடி, अहं-நான், श्रान्तो हि-மிகவும் களைப்படைந்துவிட்டேன். मम-எனக்கு, अस्य-இந்த மானை, हनने-கொல்லவோ, ग्राहेऽपि वा-பிடித்து விடுவதில்தானே, बलं-பலம், नास्ति-இல்லை. तत्-ஆகையால், भवान्-தாங்கள்தான், अस्मिन्-இந்த மான் விஷயத்தில், शार्दूलविक्रीडितं-புலி செய்யும் விளையாட்டை, कृत्वा-செய்து, मां-என்னை, करुणया-தயவுடன், परिपातु-காப்பாற்றிக்கொடுக்கவேண்டும். (22)

ஸ்ரீ கணேச ஸ்துதி மஞ்ஜரி முற்றும்.

## ॥ श्रीगणेशमानसपूजास्तोत्रम् ॥

## ஸ்ரீ கணேச மானஸபூஜா ஸ்தோத்திரம்

*ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் அருளியது.*

वात्सल्यभाजनमगाधिपकन्यकाया
मात्सर्यशून्यहृदयैर्भुवि भावनीयम् ।
प्रत्यूहजातविनिपातनलब्धवर्ण-
मत्यूर्जितं हृदि भजामि गणाधिनाथम् ॥ १ ॥

*வாத்ஸல்ய பாஜனமகாதிப கந்யகாயா*
*மாத்ஸர்ய ஶூந்ய ஹ்ருதயைர் புவி பாவனீயம் ।*
*ப்ரத்யூஹ ஜாத விநிபாதன லப்தவர்ணம்*
*அத்யூர்ஜிதம் ஹ்ருதி பஜாமி கணாதிநாதம் ॥*

**अगाधिपकन्यकायाः**-மலைகளின் அதிபன் ஹிமவானின் பெண்ணான பார்வதியின், **वात्सल्यभाजनं**-ப்ரீதிக்கு இருப்பிடமானவரும், **भुवि**-உலகில், **मात्सर्यशून्यहृदयैः**-பொறாமையற்ற மனமுள்ளவர்களால், **भावनीयं**-தியானிக்கத்தக்கவரும், **प्रत्यूहजातविनिपातनलब्धवर्णं**-இடையூறுகளின் கூட்டங்களை விலக்குவதில் திறமையுள்ளவரும், **अत्यूर्जितं**-மிகுந்த பலமுள்ளவருமான, **गणाधिनाथं**-கணநாதரை, **हृदि**-மனத்தில், **भजामि**- தியானம் செய்கிறேன். (1)

आवाहयामि गणनाथमुमामहेशसर्वस्वभूतमपनीतदुरन्तरायम् ।
योगीन्द्रमानससरोरुहसंविकासलीलाविशेषचतुरं निगमान्तनिष्ठम् ॥

*ஆவாஹயாமி கணநாதமுமா மஹேஶ-*
*ஸர்வஸ்வ பூதமபநீத துரந்தராயம் ।*
*யோகீந்த்ர மானஸ ஸரோருஹ ஸம்விகாஸ*
*லீலாவிஶேஷ சதுரம் நிகமாந்த நிஷ்டம் ॥*

**उमामहेशसर्वस्वभूतं**-பார்வதி, பரமசிவன் இவர்களின் எல்லாவித ஐசுவர்யமாக இருப்பவரும், **अपनीतदुरन्तरायं**-கெட்ட விக்னங்களைப் போக்கடித்தவரும், **योगीन्द्रमानससरोरुहसंविकासलीलाविशेषचतुरं**-யோகி சிரேஷ்டர்களின் மனமாகிய தாமரையை மலரச்செய்வது என்னும் சிறந்த விளையாட்டைச் செய்வதில் திறமைசாலியும், **निगमान्तनिष्ठं**-வேதாந்தங்களின் தாத்பர்யமாக இருப்பவருமான, **गणनाथं**-கணநாதரை, **आवाहयामि**-ஆவாஹனம் செய்கிறேன். (2)

माणिक्यमञ्जुलमरीचिमनोज्ञपार्श्वं
सान्द्रीभवन्मरकतावलिमेचकाभम् ।
मुक्तामणिप्रकरमेदुरितान्तरालं
रत्नासनं तव हृदा परिकल्पयामि ॥ ३ ॥

மாணிக்ய மஞ்ஜுள மரீசி மனோஜ்ஞ பார்ச்வம்
ஸாந்த்ரீபவன் மரகதாவளிமேசகாபம் ।
முக்தாமணி ப்ரகர மேதுரிதாந்தராளம்
ரத்னாஸநம் தவ ஹ்ருதா பரிகல்பயாமி ॥

**माणिक्यमञ्जुलमरीचिमनोज्ञपार्श्वं**-மாணிக்கங்களின் சிறந்த ஒளிகளால் அழகிய இருபக்கங்களை உடையதும், **सान्द्रीभवन्मरकतावलिमेचकाभं**-நெருக்கமாக இருக்கும் மரகத வரிசைகளால் பச்சையான ஒளியுள்ளதும், **मुक्तामणिप्रकर**-நல்முத்துக் கூட்டங்களால், **मेदुरितान्तरालं**-நெருக்கமாகச் செய்யப்பட்ட நடுபாகத்தை உடையதுமான, **रत्नासनं**-ரத்ன ஸிம்ஹாஸனத்தை **तव**-உமக்கு, **हृदा**-மனதால், **परिकल्पयामि**-செய்து வைக்கிறேன். (3)

गङ्गादिपुण्यसरितां परिपूततीर्थैः पाद्यं तवाद्यवधिशून्य समर्पयामि ।
अर्घ्यं ददाम्यहमनर्घगुणाभिराम प्रत्यूहवारण सुवारणवक्त्र तुभ्यम् ॥

கங்காதி புண்யஸரிதாம் பரிபூத தீர்த்தை:
பாத்யம் தவாத்யவதி சூன்ய ஸமர்பயாமி ।

அர்க்யம் ததாம்யஹமநர்க குணாபிராம
ப்ரத்யூஹ வாரண ஸுவாரண வக்த்ர துப்யம் ॥

**आद्यवधिशून्य**–ஆதியும் அந்தமுமற்றவரே! **गङ्गादिपुण्यसरितां**–கங்கை முதலான புண்ய நதிகளின், **परिपूततीर्थैः**-பரிசுத்தமான தீர்த்தங்களால், **तव**-உமக்கு, **पाद्यं**-பாத்யத்தை **समर्पयामि**-அர்ப்பணம் செய்கிறேன். **अनर्घगुणाभिराम**–சிறந்த குணங்களால் அழகியவரே! **प्रत्यूहवारण**-இடையூறுகளைப் போக்கடிப்பவரே! **सुवारणवक्त्र**–அழகிய யானைமுகமுள்ளவரே! **अहं**–நான், **तुभ्यं**–உமக்கு, **अर्घ्यं**– அர்க்யத்தை, **ददामि**-கொடுக்கிறேன். (4)

प्रत्याहृतैरखिलपुण्यसरिद्वराभ्यस्तीर्थैर्ददाम्यमलमाचमनं च तुभ्यम् ।
सूक्तादिमन्त्रनिवहैरभिमन्त्रितैश्च पुण्योदकैस्तव शिरः स्नपयाम्यजस्रम् ॥

ப்ரத்யாஹ்ருதைரகில புண்ய ஸரித்வராப்ய-
ஸ்தீர்த்தைர் ததாம்யமலமாசமனம் ச துப்யம் ।
ஸூக்தாதி மந்த்ர நிவஹைரபிமந்த்ரிதைச்ச
புண்யோதகைஸ்தவ ஶிர: ஸ்நபயாம்யஜஸ்ரம் ॥

**अखिलपुण्यसरिद्वराभ्यः**–பாவனமான சிறந்த எல்லா நதிகளிலிருந்தும், **प्रत्याहृतैः**–கொண்டுவரப்பட்ட, **तीर्थैः**–தீர்த்தங்களால், **तुभ्यं**-உமக்கு, **अमलं**-பரிசுத்தமான, **आचमनं च**-ஆசமனத்தையும், **ददामि**–கொடுக்கிறேன். **सूक्तादि**–ஸூக்தம் முதலான, **मन्त्रनिवहैः**-மந்திர ஸமூஹங்களால், **अभिमन्त्रितैः**-ஜபிக்கப்பட்ட, **पुण्योदकैश्च**–புண்யதீர்த்தங்களாலும், **अजस्रं**-இடைவிடாமல், **तव**-உம்முடைய, **शिरः**-சிரஸ்ஸை, **स्नपयामि**-ஸ்நானம் செய்விக்கிறேன். (5)

आचूडमाचरणमप्यभिषिच्य तीर्थैः
आलोकयन्नखिलमङ्गलमाननं ते ।
आनन्दनिर्भरमनाश्चुलुकीकृताक्षः
किं वा भवामि सफलीकृतपुण्यजन्मा ॥ ६ ॥

ஸுவர்ண தீர்த்தத்தை, ते-உமக்கு, ननु आदर्शयामि-நிச்சயம் காண்பிக்கிறேன். (9)

चोष्यैश्च भक्ष्यनिवहैश्च करम्बितं ते
भोज्यं ददामि गणनायक दिव्यमन्नम् ।
आमोदकं च गिरिजासुत मोदकानां
स्वामिन् परश्शतमपि प्रतिपादयामि ॥ १० ॥

சோஷ்யைச்ச பக்ஷ்ய நிவஹைச்ச கரம்பிதம் தே
போஜ்யம் ததாமி கணநாயக திவ்யமந்நம் ।
ஆமோதகம் ச கிரிஜாஸுத மோதகாநாம்
ஸ்வாமின் பரச்சதமபி ப்ரதிபாதயாமி ॥

गणनायक-கணங்களின் தலைவனே! चोष्यैश्च-சோஷ்யங்களோடும், भक्ष्यनिवहैश्च-பல பக்ஷ்யங்களோடும், करम्बितं-சேர்ந்த, भोज्यं-போஜ்யமான, दिव्यं अन्नं-சிறந்த அன்னத்தை ते-உமக்கு, ददामि-கொடுக்கிறேன். स्वामिन्-ஸ்வாமியே! गिरिजासुत-பார்வதி மைந்தனே, आमोदकं-ப்ரீதியைக் கொடுக்கும், मोदकानां परश्शतमपि च-நூற்றுக்கு மேல்பட்ட மோதகங்களையும், प्रतिपादयामि-கொடுக்கிறேன். (10)

आनम्रनाकिगणमञ्जुलमौलिमाला-
नीराज्यमानचरणद्वय विघ्नहन्तः ।
कर्पूरदीपनिवहैस्तव पादपद्मं
नीराजयामि ननु मां परिपाहि भक्तम् ॥ ११ ॥

ஆநம்ர நாகிகண மஞ்ஜுள மௌளிமாலா
நீராஜ்யமாந சரணத்வய விக்நஹந்த: ।
கர்பூர தீப நிவஹைஸ்தவ பாதபத்மம்
நீராஜயாமி நநு மாம் பரிபாஹி பக்தம் ॥

आनम्र-வணங்கிய, नाकिगण-தேவர் கூட்டங்களின், मञ्जुल-அழகிய, मौलिमाला-சிரஸ்ஸுகளின் வரிசைகளால்,

**नीराज्यमान**-நீராஜனம் செய்விக்கப்படுகிற, **चरणद्वय**-இரு திருவடிகளை உடையவரே! **विघ्नहन्तः**-இடையூறுகளை அழிப்பவரே! **कर्पूरदीपनिवहैः**-அநேகம் கர்பூர தீபங்களால், **तव**-உம்முடைய, **पादपद्मं**-திருவடித் தாமரையை, **नीराजयामि ननु**-நீராஜனம் செய்விக்கிறேன். **भक्तं**-பக்தனை, **मां**-என்னை, **परिपाहि**-காப்பாற்றும். (11)

पुष्पाञ्जलिं प्रचुरयामि सुवर्णपुष्पैः
सन्मन्त्रपुष्पमपि च प्रतिपादयामि ।
सर्वोपचारनिवहांश्च समर्पयामि
स्वामिन् गणाधिप समुद्धर मां भवाब्धेः ॥ १२ ॥

புஷ்பாஞ்ஜலிம் ப்ரசுரயாமி ஸுவர்ண புஷ்பைঃ
ஸன்மந்த்ர புஷ்பமபி ச ப்ரதிபாதயாமி ।
ஸர்வோபசார நிவஹாம்ச்ச ஸமர்பயாமி
ஸ்வாமின் கணாதிப ஸமுத்தர மாம் பவாப்தே: ॥

**सुवर्णपुष्पैः** தங்கமலர்களால், **पुष्पाञ्जलिं**-புஷ்பாஞ்ஜலியை, **प्रचुरयामि**-மிகுதியாகச் செய்கிறேன், **सन्मन्त्रपुष्पमपि च**-சிறந்த மந்திர புஷ்பத்தையும், **प्रतिपादयामि**-ஸமர்ப்பிக்கிறேன், **सर्वोपचारनिवहांश्च**-எல்லா உபசாரங்களையும், **समर्पयामि**-ஸமர்ப்பணம் செய்கிறேன், **स्वामिन्**-ஸ்வாமியே, **गणाधिप**-கணாதிபரே! **भवाब्धेः**-ஸம்ஸாரக்கடலிலிருந்து, **मां**-என்னை, **समुद्धर**-கைதூக்கிவிடும். (12)

नारोग्यमद्य कलये न च भोग्यजातं
भाग्यं न वा विषयलम्पटतानिदानम् ।
वैराग्यमेव सुतरामुपलम्भयन् मां
स्वामिन् समुद्धर भवाम्बुनिधेर्दुरन्तात् ॥ १३ ॥

நாரோக்யமத்ய கலயே நச போக்ய ஜாதம்
பாக்யம் ந வா விஷய லம்படதா நிதானம் ।

வைராக்யமேவ ஸுதராமுபலம்பயன் மாம்
ஸ்வாமின் ஸமுத்தர பவாம்புநிதேர் துரந்தாத் ॥

**अद्य**-இப்பொழுது, **आरोग्यं**-ஆரோக்யத்தை, **न कलये**-விரும்பவில்லை, **भोग्यजातं च**-போக வஸ்துக்களையும், **न**-விரும்பவில்லை. **विषयलम्पटतानिदानं**-விஷயங்களிலேயே மிகவும் ஆசையுடன் ஈடுபடுவதற்கு மூலகாரணமான, **भाग्यं वा**-பாக்கியத்தையும், **न**-விரும்பவில்லை. **मां**-என்னை, **वैराग्यमेव**-வைராக்யத்தையே, **सुतरां**-மிகுந்ததாக, **उपलम्भयन्**-அடையும்படிசெய்து, **स्वामिन्**-ஸ்வாமியே! **दुरन्तात्**-மிகவும் கஷ்டப்பட்டுப் போக்கக்கூடிய, **भवाम्बुनिधेः**-பவஸாகரத்திலிருந்து, **समुद्धर**-கைதூக்கிவிடும். (13)

इत्थं गणाधिपतिमानसपूजनं यः
कैवल्यदं सुललितं पठतीह भक्त्या ।
नागामिजन्मभयमस्ति हि तस्य पुंसः
कैवल्यसौधमचिरादनुवीक्षते सः ॥ १४ ॥

இத்தம் கணாதிபதி மாநஸ பூஜநம் ய:
கைவல்யதம் ஸுலலிதம் படதீஹ பக்த்யா ।
நாகாமி ஜன்ம பயமஸ்தி ஹி தஸ்ய பும்ஸ:
கைவல்ய ஸௌதமசிராதநுவீக்ஷதே ஸ: ॥

**इत्थं**-இவ்வாறான, **कैवल्यदं**-மோக்ஷத்தைத்தருகின்றதும் **सुललितं**-மிகவும் ஸரளமானதுமான, **गणाधिपतिमानसपूजनं**-கணபதி மானஸபூஜா ஸ்தோத்ரத்தை, **इह**-இவ்வுலகில், **यः**-எவன், **भक्त्या**-பக்தியுடன், **पठति**-படிக்கிறானோ, **तस्य पुंसः**-அந்தப்புருஷனுக்கு, **आगामिजन्मभयं**-மறுபிறவி பயம், **नास्ति**-கிடையாது. **सः**-அவன், **अचिरात्**-விரைவில், **कैवल्यसौधं**-கைவல்யமென்னும் அரண்மனையை, **अनुवीक्षते**-பார்க்கிறான்.

ஸ்ரீ கணேச மானஸபூஜா ஸ்தோத்திரம்
முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ श्रीशरवणभवमानसपूजास्तोत्रम् ॥

# ஸ்ரீ சரவணபவ மானஸபூஜா ஸ்தோத்ரம்

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள்
அருளியது

गुकारो ह्याख्याति प्रबलमनिवार्यं किल तमो
हकारो हानिं च प्रथयतितरामेव जगति ।
अतो मोहान्धत्वं शिथिलयति यन्नाम गुह इ-
त्यमुं देवं ध्यायाम्यभिलषितसन्धाननिपुणम् ॥ १ ॥

குகாரோ ஹ்யாக்யாதி ப்ரபலமநிவார்யம் கில தமோ
ஹகாரோ ஹானிம் ச ப்ரதயதிதராமேவ ஜகதி ।
அதோ மோஹாந்தத்வம் ஶிதிலயதி யந்நாம குஹ இ-
த்யமும் தேவம் த்யாயாம்யபிலஷித ஸந்தான நிபுணம் ॥

**गुकारः**-'கு' என்ற எழுத்தானது, **प्रबलं**-மிகுந்த வலிமை யுள்ளதும், **अनिवार्यं**-தடுக்கமுடியாததுமான, **तमः**-இருளை, **आख्याति किल**-சொல்கிறது அல்லவா. **जगति**-உலகில், **हकारः**-'ஹ' என்ற எழுத்தானது, **हानिं**-நாசத்தை, **प्रथयतितरामेव**-நன்கு பிரஸித்தமாக்குகிறது. **अतः**-ஆகையால், **गुह इति**-குஹன் என்ற, **यन्नाम**-எவருடைய பெயர் **मोहान्धत्वं**-அக்ஞானம் என்னும் இருளை, **शिथिलयति**-சிதறும்படி செய்கிறதோ, **अमुं**-இந்த, **अभिलषितसन्धाननिपुणं**-விரும்பிய பொருளைச் சேர்த்துவைப்பதில் திறமையுள்ள, **देवं**-தேவனை **ध्यायामि**-தியானிக்கிறேன். (1)

समाश्लिष्टं वल्ल्या समुपघटितं बाहुविटपैः
स्वमूलायातानां समुचितफलप्रापणचणम् ।
स्वसेवानिष्ठानां सततमपि सौख्योपगमकं
सदा ध्यायाम्येनं कमपि तु गुहाख्यं विटपिनम् ॥ २ ॥

ஸமாச்லிஷ்டம் வல்யா ஸமுபகடிதம் பாஹு விடபை:
ஸ்வமூலாயாதாநாம் ஸமுசித பலப்ராபண சணம் ।
ஸ்வஸேவா நிஷ்டாநாம் ஸததமபி ஸௌக்யோபகமகம்
ஸதா த்யாயாம்யேநம் கமபி து குஹாக்யம் விடபிநம் ॥

**वल्या**–வள்ளியென்ற கொடியால், **समाश्लिष्टं** - தழுவிக் கொள்ளப்பட்டதும், **बाहुविटपैः** - கைகளாகிற கிளைகளுடன், **समुपघटितं** - நன்கு சேர்ந்துள்ளதும், **स्वमूलायातानां**–தன் அடியில் வந்தவர்களுக்கு, **समुचितफलप्रापणचणम्**–வேண்டிய பலனை அடையும்படி செய்வதில் திறமையுள்ளதும், **स्वसेवा-निष्ठानां**-தனக்கு ஸேவை செய்வதில் நிலைத்து இருப்பவர்களுக்கு. **सततमपि**–எப்பொழுதும், **सौख्योपगमकं**–இன்பத்தை அடைவிப்பதும், **गुहाख्यं**–குஹன் என்று பெயருள்ளதுமான, **कमपि**–ஏதோ ஒரு, **एनं**-இந்த, **विटपिनं**–விருக்ஷத்தை, **सदा**-எப்பொழுதும், **ध्यायामि**–த்யானம் செய்கிறேன். (2)

सुराणां संघातैस्समभुपगतैः सान्द्रकुतुकैः
समाराध्य स्वामिन् भज विहितमावाहनमिदम् ।
समन्तात्सद्रत्नैः समुपहितसोपानसरणि-
स्फुरन्नानाशोभं रचितमपि सिंहासनमिदम् ॥ ३ ॥

ஸுராணும் ஸங்காதை: ஸமுபகதை: ஸாந்த்ர குதுகை:
ஸமாராத்ய ஸ்வாமின் பஜ விஹிதமாவாஹனமிதம் ।
ஸமந்தாத் ஸத்ரத்னை: ஸமுபஹித ஸோபான ஸரணி
ஸ்புரந்நாநாசோபம் ரசிதமபி ஸிம்ஹாஸனமிதம் ॥

**समभुपगतैः**–சேர்ந்துவந்தவர்களும், **सान्द्रकुतुकैः**–ஆவல் நிறைந்தவர்களுமான, **सुराणां संघातैः**-தேவர் கூட்டங்களால் **समाराध्य**–ஆராதிக்கத் தகுந்த, **स्वामिन्**–ஸ்வாமியே, **विहितं**–செய்யப்பட்ட, **इदं**-இந்த, **आवाहनं**-ஆவாஹனத்தை, **भज**–அடைவீராக. **समन्तात्**–நான்கு பக்கங்களிலும், **सद्रत्नैः**–சிறந்த ரத்னங்களால், **समुपहित**–செய்யப்பட்ட, **सोपानसरणि**-படிக்கட்டுகளால், **स्फुरत्**–விளங்குகிற, **नानाशोभं** - பலவித

காந்தி உள்ளதாக, **रचितं**-கல்பிக்கப்பட்ட, **इदं** - இந்த, **सिंहासनमपि**-ஸிம்ஹாஸனத்தையும், **भज**-அடைவீராக. (3)

**हृतं गङ्गातुङ्गाद्यखिलतटिनीभ्योऽतिविमलं**
**सुतीर्थं पाद्यार्थं तव निहितमङ्गीकुरु विभो ।**
**तथा पुण्यैस्तीर्थैर्विहितमिदमर्घ्याचमनकं**
**दयार्द्रां दृष्टिं मे दिश दिश दयाब्धे हरसुत ॥ ४ ॥**

ஹ்ருதம் கங்காதுங்காத்யகில தடினீப்யோऽதிவிமலம்
ஸுதீர்த்தம் பாத்யார்த்தே தவ நிஹிதமங்கீகுரு விபோ ।
ததா புண்யைஸ் தீர்த்தைர் விஹிதமிதமர்க்யாசமநகம்
தயார்த்ராம் த்ருஷ்டிம் மே திஶதிஶ தயாப்தே ஹர ஸுத ॥

**विभो**-ப்ரபுவே, **गङ्गातुङ्गाद्यखिलतटिनीभ्यः**-கங்கை, துங்கை முதலிய எல்லா நதிகளிலிருந்தும், **हृतं**-கொண்டுவரப்பட்டதும், **अतिविमलं**-மாசற்றதும், **तव**-உமக்கு, **पाद्यार्थं**-பாத்யத்திற்காக, **निहितं**-வைக்கப்பட்டதுமான, **सुतीर्थं**-நல்ல தீர்த்தத்தை, **अङ्गीकुरु**-ஏற்றுக்கொள்ள வேணும். **तथा**-அவ்விதமே, **पुण्यैः**-பரிசுத்தமான, **तीर्थैः**-தீர்த்தங்களால், **विहितं** - கல்பிக்கப்பட்ட, **इदं** - இந்த, **अर्घ्याचमनकं**-அர்க்யத்தையும் ஆசமனத்தையும் ஏற்றுக்கொள்ளவேணும். **दयाब्धे**-கருணைக்கடலே! **हरसुत** - பரமசிவன் மைந்தனே! **दयार्द्रां**-தயையால் நனைந்த, **दृष्टिं**-பார்வையை, **मे**-எனக்கு, **दिश दिश**-எப்பொழுதும் செலுத்தவேணும் (4)

**समन्तात्स्नानीयैः परिमलगुणोत्कर्षभरितैः**
**स्फुरन्माणिक्यादिप्रतिखचितसद्रत्नफलके ।**
**समासीनं हि त्वां सुचिरमभिषिञ्चन्नसुलभं**
**परानन्दं यास्याम्यनुपधिकृपाब्धे हरसुत ॥ ५ ॥**

ஸமந்தாத் ஸ்நாநீயை: பரிமள குணோத்கர்ஷ பரிதை:
ஸ்புரன் மாணிக்யாதி ப்ரதிகசித ஸத்ரத்னபலகே ।

ஸமாஸீநம் ஹி த்வாம் ஸுசிரமபிஷிஞ்சந்நஸுலபம்
பராநந்தம் யாஸ்யாம்யநுபதி க்ருபாப்தே ஹரஸுத ||

**अनुपधिकृपाब्धे** - அவ்யாஜமான கருணையின் கடலே! **हरसुत**-சிவகுமாரா! **समन्तात्**-சுற்றிலும், **परिमलगुणोत्कर्षभरितैः**-வாஸனை குணத்தின் சிறப்புக்கள் நிறைந்த, **स्नानीयैः**-தீர்த்தங்களால், **स्फुरन्माणिक्यादिप्रतिखचितसद्रत्नफलके** - காந்தியுடன் கூடிய மாணிக்கம் முதலியவைகள் இழைத்த ரத்னப் பலகையில், **समासीनं**-உட்கார்ந்திருக்கும், **त्वां**-உம்மை, **सुचिरं**-வெகுநேரம், **अभिषिंचन्**-அபிஷேகம் செய்துகொண்டு **असुलभं**-அடையமுடியாத, **परानन्दं**-பேராநந்தத்தை, **यास्यामि**-அடைவேன். (5)

सुवासोभिश्चाङ्गं तव किल समाच्छाद्य सपदि
प्रसाध्यांसे शुभ्रं विमलमुपवीतं नवगुणम् ।
प्रभूतांस्ते गन्धान् गिरिशसुत सन्धाय निटिले
सुखासीनं हि त्वां ननु खलु दिदृक्षे चपलधीः ॥ ६ ॥

ஸுவாஸோபிச்சாங்கம் தவ கில ஸமாச்சாத்ய ஸபதி
ப்ரஸாத்யாம்ஸே ஶுப்ரம் விமலமுபவீதம் நவகுணம் ।
ப்ரபூதாம்ஸ்தே கந்தான் கிரிஶஸுத ஸந்தாய நிடிலே
ஸுகாஸீநம் ஹி த்வாம் நநு கலு தித்ருக்ஷே சபலதீ: ||

**गिरिशसुत**-சிவனின் புத்திரனே! **तव**-உன்னுடைய, **अङ्गं**-சரீரத்தை, **सुवासोभिः**-நல்ல ஆடைகளால், **समाच्छाद्य**-மறைத்து (அலங்கரித்து) **सपदि**-உடனே, **अंसे**-தோளில், **शुभ्रं** - வெளுப்பானதும், **विमलं**-மாசு அற்றதும், **नवगुणं**-ஒன்பது வடமுள்ளதுமான, **उपवीतं**-பூணூலை, **प्रसाध्य**-அணிவித்து, **ते**-உன்னுடைய, **निटिले**-நெற்றியில், **प्रभूतान्-गन्धान्**-நிறைய சந்தனத்தை, **सन्धाय**-இட்டு, **चपलधीः**-சபலபுத்தியுள்ள நான், **सुखासीनं**-ஸுகமாக அமர்ந்துள்ள, **त्वां**-உம்மை, **ननु खलु दिदृक्षे**-பார்க்க ஆசைப்படுகிறேன். (6)

किरीटानां षट्कं तव हि कलयन् षण्मुख शिर-
स्स्वथ ग्रीवायां ते समनुघटयन् हारलतिकाम् ।
ललाटेष्वातन्वन् तिलकमथ ते कुण्डलगणं
समर्घं श्रोत्रेषु क्षणमपि दिदृक्षे भवसुत ॥ ७ ॥

கிரீடானும் ஷட்கம் தவ ஹி கலயன் ஷண்முகஶிரஸ்
ஸ்வத க்ரீவாயாம் தே ஸமனுகடயன் ஹாரலதிகாம் |
லலாடேஷ்வாதன்வன் திலகமத தே குண்டலகணம்
ஸமர்கம் ச்ரோத்ரேஷு க்ஷணமபி தித்ருக்ஷே பவஸுத ||

षण्मुख-ஆறுமுகா! तव-உன், शिरस्सु-(ஆறு) சிரஸ்ஸுகளில், किरीटानां षट्कं ஆறு கிரீடங்களை, कलयन्-அணிவித்துக் கொண்டு, अथ-பிறகு, ते ग्रीवायां-உன் கழுத்தில், हारलतिकां-கொடிபோன்ற ஹாரத்தை, समनुघटयन् - அணிவித்துக் கொண்டு, ललाटेषु -நெற்றிகளில், तिलकं-திலகத்தையும், अथ-பிறகு, ते-உன், श्रोत्रेषु-காதுகளில், समर्घं விலை உயர்ந்த कुण्डलगणं-அநேகம் குண்டலங்களையும், आतन्वन्-அணிவித்து भवसुत-சிவதனயா! क्षणमपि-ஒரு நிமிஷமாவது, दिदृक्षे-பார்க்க ஆசைப்படுகிறேன். (7)

अमन्दैर्मन्दारद्रुमकुसुमसंघैः सुरभिलैः
समर्चन् सामोदं तव हि सुकुमाराङ्गमखिलम् ।
समन्तात्संप्लाव्यं तव वदनसौन्दर्यलहरीं
सदा स्मारं स्मारं सफलयितुमीशे जनिमिमाम् ॥ ८ ॥

அமந்தைர் மந்தார த்ரும குஸும ஸங்கை: ஸுரபிலை:
ஸமர்ச்சன் ஸாமோதம் தவ ஹி ஸுகுமாராங்கமகிலம் |
ஸமந்தாத் ஸம்ப்லாவ்யம் தவ வதந ஸௌந்தர்ய லஹரீம்
ஸதா ஸ்மாரம் ஸ்மாரம் ஸபலயிதுமீஶே ஜனிமிமாம் ||

अमन्दैः-அதிகமான, सुरभिलैः-நறுமணமுள்ள, मन्दारद्रुम-कुसुमसंघैः-மந்தார மரத்திலுள்ள புஷ்பக் கூட்டங்களால்,

**तव**-உன், **सुकुमाराङ्गं अखिलं**-மென்மையான மேனி முழுவதும், **सामोदं**-ஆனந்தத்துடன், **समर्चन्**-அர்ச்சித்துக் கொண்டு, **समन्तात्**-நான்கு பக்கங்களிலும், **संप्लावां**-பெருகி ஓடுகிற, **तव**-உன், **वदनसौन्दर्यलहरीं**-முகத்தின் லாவண்ய பிரவாஹத்தை, **सदा**-எப்பொழுதும், **स्मारं स्मारं**-நினைத்து நினைத்து, **इमां**-இந்த, **जनिं**-பிறவியை, **सफलयितुं**-பயன் உள்ளதாகச் செய்ய, **ईशे**-ஆசைப்படுகிறேன்.' (8)

**समाजिघ्र स्वामिन्नगरुयुतधूपं करुणया**
**जिघृक्षस्वापीमानमलघृतदीपानुपहृतान् ।**
**गृहाणाज्यप्लावान् मृदुलतरभक्ष्याणि विविधा-**
**न्युपादत्स्वाप्यन्नं विविधमथ पञ्चामृतमपि ॥ ९ ॥**

ஸமாஜிக்ர ஸ்வாமின் அகருயுத தூபம் கருணயா
ஜிக்ருக்ஷஸ்வாபீமானமல க்ருத தீபானுபஹ்ருதான் ।
க்ருஹாணாஜ்ய ப்லாவான் ம்ருதுளதர பக்ஷ்யாணி விவிதான்
யுபாதத்ஸ்வாப்யன்னம் விவிதமத பஞ்சாம்ருதமபி ॥

**स्वामिन्** - ஸ்வாமியே! **अगरुयुतधूपं** - அகிலுடன்கூடிய தூபத்தை, **करुणया**- தயவுடன், **समाजिघ्र**-முகர்ந்துகொள்ளும் **उपहृतान्**-ஸமர்ப்பிக்கப்பட்ட, **इमान्**-இந்த, **अमलघृतदीपानपि**-பரிசுத்தமான நெய் தீபங்களையும், **जिघृक्षस्व**-ஏற்றுக் கொள்ளும். **आज्यप्लावान्**-நெய்யில் மிதக்கின்ற, **विविधानि**-பலவிதமான **मृदुलतरभक्ष्याणि**-மிகவும் மென்மையான பக்ஷ்யங்களை **गृहाण**-பெற்றுக்கொள்ளும். **अथ**-மேலும் **विविधं**-பலவிதமான **अन्नमपि**-அன்னத்தையும் **पञ्चामृतमपि**-பஞ்சாமிருதத்தையும் **उपादत्स्व**-ஏற்றுக்கொள்ளும். (9)

**सुकर्पूरस्वादुक्रमुकयुतमेलादिकलितं**
**सुताम्बूलं स्वामिन् सदयमुपगृह्णीष्व मृदुलम् ।**
**ततस्ते कर्पूरैस्सुरभितरनीराजनविधिं**
**प्रकुर्वन्नाधास्ये तव शिरसि पुष्पाञ्जलिमपि ॥ १० ॥**

ஸுகர்பூர ஸ்வாது க்ரமுக யுதமேலாதி கலிதம்
ஸுதாம்பூலம் ஸ்வாமின் ஸதயமுபக்ருஹ்ணீஷ்வ ம்ருதுளம் |
ததஸ்தே கர்பூரை: ஸுரபிதர நீராஜன விதிம்
ப்ரகுர்வன்னுதாஸ்யே தவ ஶிரஸி புஷ்பாஞ்ஜலிமபி ||

**स्वामिन्**-ஸ்வாமியே, **सुकर्पूरस्वादुक्रमुकयुतं**–நல்ல பச்சைக் கர்பூரம் இனிமையான பாக்குஇவற்றுடன் கூடியதும் **एलादि कलितं**- ஏலம் முதலியவற்றுடன் கலந்ததும் **मृदुलं**-மிருதுவானதுமான **सुताम्बूलं**-சிறந்த தாம்பூலத்தை **सदयं**-தயவுடன் **उपगृह्णीष्व**–ஏற்றுக்கொள்வாயாக. **ततः**-பிறகு **कर्पूरैः**-கர்பூரங்களால் **ते**–உமக்கு **सुरभितरनीराजनविधिं**-மிகுந்த வாசனையுள்ள நீராஜனவிதியை **प्रकुर्वन्**–செய்துகொண்டு **तव शिरसि**-உம் சிரஸ்ஸில் **पुष्पाञ्जलिमपि**-புஷ்பாஞ்ஜலியையும் **आधास्ये**- ஸமர்ப்பணம் செய்கிறேன். (10)

करोमि स्वामिंस्ते निखिलमुपचारं प्रवणधीः
दयार्द्रास्ते दृष्टीर्विकिर गिरिजानन्दन मयि ।
समन्तात्संसारव्यसनकलुषीभूतहृदयं
परित्रायस्वाशापरवशितमापन्नमपि माम् ॥ ११ ॥

கரோமி ஸ்வாமிம்ஸ்தே நிகிலமுபசாரம் ப்ரவண தீ:
தயார்த்ராஸ்தே த்ருஷ்டீர் விகிர கிரிஜா நந்தன மயி |
ஸமந்தாத் ஸம்ஸார வ்யஸன கலுஷீபூத ஹ்ருதயம்
பரித்ராயஸ்வாஶா பரவஶிதமாபந்நமபி மாம் ||

**स्वामिन्**-ஸ்வாமியே, **प्रवणधीः**-ஈடுபட்ட மனத்துடன் **ते**–உமக்கு **निखिलं उपचारं**- எல்லா உபசாரத்தையும் **करोमि**-செய்கிறேன். **गिरिजानन्दन**–மலைமகளை மகிழ்விப்பவனே ! **दयार्द्राः**-கருணாரஸத்தால் நனைந்த **ते**–உம்முடைய **दृष्टीः**-கடாக்ஷங்களை **मयि**–என்மேல் **विकिर**–செலுத்தும். **समन्तात्**-எங்கும் **संसारव्यसनकलुषीभूतहृदयं**–ஸம்ஸார துக்கங்களால்

கலக்கமடைந்த மனமுள்ளவனும் **आशापरवशितं**–ஆசைக்குக் கட்டுப்பட்டவனும் **आपन्नं**–துன்பப்பட்டவனுமான **मामपि**–என்னையும் **परित्रायस्व**–காப்பாற்றும். (11)

**इमां चेतःपूजां शरवणभुवो यः किल पठेत्**
**सकृद्वाऽन्यैर्गीतं सपदि शृणुयाद्भक्तिभरितः ।**
**न तं संसाराशा परवशयते नापि विषयाः**
**क्रमात्पुण्यात्माऽयं ननु भजति कैवल्यपदवीम् ॥ १२ ॥**

இமாம் சேத:பூஜாம் ஶரவணபுவோ ய: கில படேத்
ஸக்ருத்வாऽந்யைர் கீதம் ஸபதி ச்ருணுயாத் பக்தி பரித: ।
ந தம் ஸம்ஸாராஶா பரவஶயதே நாபி விஷயா:
க்ரமாத் புண்யாத்மாऽயம் நநு பஜதி கைவல்ய பதவீம் ॥

**शरवणभुवः**–ஸுப்ரஹ்மண்யருடைய **इमां**–இந்த **चेतःपूजां**–மானஸபூஜா ஸ்தோத்ரத்தை **यः**–எவன் **सकृत्**–ஒருதடவை **पठेत् किल**–படிக்கிறனே **वा**–அல்லது **अन्यैः**–மற்றவர்களால் **गीतं**–பாடப்பட்டதை **सपदि**–உடனே **भक्तिभरितः**–பக்தி நிரம்பியவனாக **शृणुयात्**–கேட்பானே **तं**–அவனை **संसाराशा**–ப்ரபஞ்சத்தின் ஆசையானது **न परवशयते**–கட்டுப்படுத்தாது. **विषयाः अपि**–விஷயங்களும் **न**–கட்டுப்படுத்தாது. **पुण्यात्मा**–புண்யஸ்வரூபியான **अयं**–இவன் **क्रमात्**–முறையாக **कैवल्यपदवीं**–கைவல்யபதத்தை **ननु भजति**–நிச்சயம் அடைகிறான்.

ஸ்ரீ சரவணபவ மானஸ பூஜா ஸ்தோத்ரம்

முற்றும்.

|| श्रीः ||

# ॥ श्रीषण्मुखभुजङ्गस्तुतिः ॥

## ஸ்ரீ ஷண்முக புஜங்க ஸ்துதி

*ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் அருளியது*

(ஸ்ரீ R. மஹாலிங்க அய்யரின் தமிழ் உரையுடன் கூடியது)

*[குன்னக்குடி என்பது ராமநாதபுரம் ஜில்லாவில் ஓர் பிரஸித்திபெற்ற ஸுப்ரஹ்மண்ய க்ஷேத்திரம். பகவான் அவ்விடத்தில் ஒரு மலைமேலே பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். இந்த மூர்த்தி ஒரு வரப்ரஸாதி. அவ்விடத்திற்கு ஆசார்ய பாதாள் 1925-ம் வருஷம் விஜயம் செய்தார்கள். அச்சமயம் அவர்கள் வதனாரவிந்தத்திலிருந்து வெளிவந்த ஸ்தோத்திரங் களில் இது ஒன்று.]*

*(அ) ஸ்வாமி வீற்றிருக்கும் மலையை தரிசனம் செய்த உடனேயே மனதில் பிரகாசித்த சில தத்வங்களை முதல் சுலோகத்தில் உத்ப்ரேக்ஷித்திருக்கிறார்கள் :—*

ह्रिया लक्ष्म्या वल्ल्या सुरपृतनयाऽऽलिङ्गिततनुः
मयूरारूढोऽयं शिववदनपङ्केरुहरविः ।
षडास्यो भक्तानामचलहृदि वासं प्रतनवा
इतीमां बुद्धिं द्रागचलनिलयः संजनयति ॥ १ ॥

*ஹ்ரியா லக்ஷ்ம்யா வல்ல்யா ஸுரப்ருதநயாऽऽலிங்கிததனு:*
*மயூராரூடோऽயம் ஶிவவதந பங்கேருஹரவி: ।*
*ஷடாஸ்யோ பக்தானாமசலஹ்ருதி வாஸம் ப்ரதநவா*
*இதீமாம் புத்திம் த்ராகசலநிலய: ஸஞ்ஜநயதி ॥*

**ह्रिया**-லஜ்ஜையோடு, **लक्ष्म्या**-அழகுடன், **वल्ल्या**-வள்ளியினாலும், **सुरपृतनया**-தேவஸேனையினாலும், **आलिङ्गिततनुः**-ஆலிங்கனம் செய்யப்பட்ட சரீரத்தையுடையவரும், **मयूरारूढः**-மயில் வாஹனத்தில் வீற்றிருப்பவரும், **शिववदनपङ्केरुहरविः**-சிவனுடைய முகமாகிற தாமரைப் புஷ்பத்திற்கு ஸூர்யனாக விளங்குகிறவரும், **षडास्यः**-ஆறுமுகங்களை

உடையவரும், **अचलनिलय:**-அசைவற்ற மலையில் குடிகொண் டிருப்பவருமான, **अयं**-இவர், **भक्तानां**-பக்தர்களுடைய, **अचलहृदि**-ஸ்திரமான ஹிருதயத்தில், **वासं**-வாஸத்தை, **प्रतनवै**-செய்வேன், इति-என்ற, **इमां बुद्धिं**-இந்தஎண்ணத்தை, **द्राक्**-உடனே, **संजनयति**-உண்டாக்குகிறார்.

[ இந்த சுலோகம் '**ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ**' என்ற வேத வாக்யத்தை ஞாபகப்படுத்துகிறது. மனது ஒரு சஞ்சல மான பதார்த்தம். கீதையிலும் இது விளக்கப்பட்டிருக் கிறது அப்யாஸத்தாலும் வைராக்யத்தாலும் சஞ்சலமா யுள்ள மனதை ஏகாக்ரமாகச் செய்தால் பகவான் அதில் சீக்கிரம் பிரகாசிப்பார். அவ்விதம் செய்ய முக்யமான ஸாதனம் பக்தி. ஆகையால் "பக்தர்களுடைய" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மலைபோல் அசைவற்றதும், பக்தியினால் பரிசுத்தப்படுத்தப்பட்டதுமான சித்தத்தில் பகவான் வஸிக்கிறார் என்பது தாத்பர்யம்.] (1)

**स्मितन्यक्कृतेन्दुप्रभाकुन्दपुष्पं सिताभ्रागरुप्रष्ठगन्धानुलिप्तम् ।**
**श्रिताशेषलोकेष्टदानामरद्रुं सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ २ ॥**

ஸ்மிதந்யக்க்ருதேந்து ப்ரபா குந்த புஷ்பம்
ஸிதாப்ராகரு ப்ரஷ்ட கந்தானுலிப்தம் ।
ச்ரிதாசேஷ லோகேஷ்ட தாநாமரத்ரும்
ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥

**स्मितन्यक्कृतेन्दुप्रभाकुन्दपुष्पं**-சந்திரனுடைய காந்தி, குந்த புஷ்பம் இவைகளின் அழகைத்தோற்கடிக்கிற மந்தஹாஸத் தோடு கூடியவரும், **सिताभ्रागरुप्रष्ठगन्धानुलिप्तम्** -பச்சைக் கற்பூரம் கலந்து உத்தமமான அகில் சந்தனக்காப்புடன் விளங்குகிறவரும், **श्रिताशेषलोकेष्टदानामरद्रुं**-தன்னை அண்டின எல்லா ஜனங்களின் மனோபீஷ்டங்களையும் பூர்த்தி செய்து வைப்பதில் கல்பகவிருக்ஷமாக விளங்குகிறவருமான, **षण्मुखं**-ஷண்முகரை, **हृत्सरोजे**-என் ஹிருதய கமலத்தில், **सदा**-எப்பொழுதும், **भावये**-தியானம் செய்கிறேன்.

[முதலாவது சுலோகத்தில் தெய்வ வழிபாட்டிற்குப் பக்தியும், சிரத்தையும் பிரதானம் என்று துவக்கி, ஆகர்ஷிக் கக்கூடிய அந்த மூர்த்தியின் வெளித்தோற்றமும், வேண்டு வதைக் கொடுக்கக்கூடிய சக்தியும் இந்த இரண்டாவது சுலோகத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன.] (2)

(அ) பகவான் ஆறுமுகங்களுடன் விளங்குவதை உத்ப்ரேக்ஷிக்கிறார் :-

**शरीरेन्द्रियादावहंभावजातान् षडूर्मीर्विकारांश्च शत्रून्निहन्तुम् ।**
**नतानां दधे यस्तमास्याब्जषट्कं सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ ३ ॥**

*ஶரீரேந்த்ரியாதாவஹம்பாவ ஜாதான்*
*ஷடூர்மீர் விகாராம்ச்ச ஶத்ரூன் நிஹந்தும் ।*
*நதானாம் தததே யஸ்தமாஸ்யாப்ஜ ஷட்கம்*
*ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥*

**नतानां**–தன்னை வணங்குகிறவர்களுடைய, **शरीरेन्द्रियादौ**-சரீரம், இந்திரியங்கள், முதலியவைகளில், **अहंभावजातान्** –நான் என்னும் தோற்றத்தால் உண்டாயிருக்கிற **षडूर्मीः**–ஆறுவகையான அலைகள்போலுள்ள துக்கங்களையும் **विकारांश्च**–ஆறு வகையான மாறுபாடுகளையும், **शत्रून्** –ஆறு விதமான சத்ருக்களையும், **निहन्तुं**–வெல்வதற்காக, **यः**-எவர், **आस्याब्जषट्कं**–ஆறு முககமலங்களை, **दधे**- தரித்திருக்கிறாரோ, **तं**–அந்த, **षण्मुखं**–ஷண்முகரை, **सदा**–எக்காலமும், **हृत्सरोजे**–ஹிருதய கமலத்தில், **भावये**–தியானம் செய்கிறேன்.

[நமக்கு ஏற்பட்டிருக்கிற அனர்த்தங்கள் எல்லா வற்றிற்கும் மூலகாரணம் ஜடமான சரீரம், இந்திரியங்கள், மனது முதலானவைகளில் "நான்" என்னும் பாவனை கொள்வதுதான். சரீரம் என்பது காரணம், ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என மூவகைப்படும். காரணம் எனப்படுவது கேவலம் அறியாமை ரூபம். ஆகையால் அதில் "நான்" என்னும் அத்யாஸம் கார்யகாரியல்ல, மற்றவைகளில்

செய்யும் அத்யாஸத்தால் ஆறுவகையான அலைபோலுள்ள துக்கங்கள் உண்டாகின்றன. அவைகள் சோகம், மோஹம், பசி, தாகம், ஜன்ம, மிருத்யு என்பவை. அவைகளில் சோகம், மோஹம் என்பவை ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய விக்ஞான மய கோசம், மனோமய கோசம் எனப்படும் அம்சங்களை யொட்டியவை. பசி, தாகம் என்பவை ஸூக்ஷ்ம சரீரத்திலேயே அடங்கிய பிராணமயகோசத்தில் ஸம்பந்தப் பட்டவை ஜன்ம, மரணம் என்பவை ஸ்தூல சரீரத்தை யொட்டியவை. தவிரவும் அநாத்ம பதார்த்தங்களாகிய சரீராதிகளுக்கு ஆறுவித விகாரங்கள் அதாவது மாறுதல்கள் உண்டு. அவையாவன: பிறத்தல், இருத்தல், வளருதல், உருமாறுதல், குறைதல், நாசமடைதல். முன் சொல்லப்பட்ட ஆறும், இவை ஆறும் ஆத்மாவைத் துன்பப்படுத்துவதால் சத்ருக்களேயாகும். மேலும் வெவ்வேருகக் காணப்படுகிற காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் எனப்படும் மனோநிலைகள் ஆறையும் அரிஷட்வர்க்கம் என்பார்கள். அவைகளையும் ஜயித்தால்தான் மனது சாந்தியடையக்கூடும். மனது சாந்தியடைந்தால்தான் சாசுவதமான ஸுகத்தை அடையலாம் என்ற விஷயமும் இந்த சுலோகத்தில் குறிப் பிடப்படுகிறது. अशान्तस्य कुतः सुखम् (அசாந்தஸ்ய குத: ஸுகம்) சாந்தியற்றவனுக்கு ஸுகம் ஏது என்பது கீதா வாக்யம். இவ்விதம் ஆறு ஊர்மிகளையும், ஆறு விகாரங்களையும், ஆறு சத்ருக்களையும் ஜயித்துக்கொடுப்பதற்காகப் பகவான் ஆறு முகங்களைத் தரிக்கிருரோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது] (3)

अपर्णाख्यवल्लीसमाश्लेषयोगात् पुरा स्थाणुतो योऽजनिष्टामरार्थम् ।
विशाखं नगे वल्लिकालिङ्गितं तं सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ ४ ॥

அபர்ணாக்ய வல்லீ ஸமாச்லேஷ யோகாத்
புரா ஸ்தாணுதோ யோऽஜநிஷ்டாமரார்த்தம் ।
விசாகம் நகே வல்லிகாலிங்கிதம் தம்
ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥

**पुरा**-முன் ஒரு காலத்தில், **यः**-எவர், **अमरार्थं**-தேவர்களுக்காக, **स्थाणुतः**-சிவனிடமிருந்து (மரக்கட்டையிலிருந்து) **अपर्णाख्य वल्लीसमाश्लेषयोगात्**-கொடிபோன்ற பார்வதி தேவியின் (இலையில்லாத அபர்ணா என்னும் பெயருள்ள கொடியின்) ஆலிங்கனம் ஏற்பட்டதால், **अजनिष्ट**-பிறந்தாரோ, **तं**-அந்த, **विशाखं**-விசாகநக்ஷத்திரத்திற்குரியவரும், (கிளைகளில்லாதது), **नगे**-மலையில், **वल्लिकालिङ्गितं**-வல்லி தேவியால் (கொடியால்) ஆலிங்கனம் செய்துகொள்ளப் பட்டவருமான **षण्मुखं**-ஷண்முகரை, **सदा**-எப்பொழுதும், **हृत्सरोजे**-ஹிருதயகமலத்தில், **भावये**-த்யானம் செய்கிறேன்.

[அம்பிகையைக் குறிக்கும், "கடன் இல்லாத" (எவ்வித பந்தமுமில்லாத) என்று அர்த்தமுள்ள "**अपर्णा**" (அபர்ணா) என்னும் வார்த்தைக்கு "இலையற்றது" என்றும் ஒரு அர்த்தம் உண்டு. ஒரு கொடி எப்பொழுதும் ஒரு அவலம்பனத்தையே தழுவிக்கொள்ளும் என்பது பிரஸித்தம். பரமசிவனுக்கு **स्थाणुः** (ஸ்தாணு) என்று பெயர். பார்வதி ஸம்பந்தத்தால் பரமசிவனிடம் ஏற்பட்ட வீர்ய ஸ்கலிதத்திலிருந்து பகவான் ஸ்கந்தர் உத்பத்தியாகி தேவஸேனாதிபதியானார் என்பது புராண ரஹஸ்யம். தேவர்களின் ஸைன்யம் என்பது **दैवी संपत्** (தைவஸம்பத்) கீதாசார்யர் உபதேசித்தபடி தைவஸம்பத் மனிதனை ஸம்ஸார துக்கத்திலிருந்து விடுதலையடைய உபயுக்தமாகிறது. அந்த சக்தியை ஆண்டு அஸுரர்களை அதாவது ஆஸுர ஸம்பத்தை விலக்கி ஞானம் அடைய வழிதேடவேண்டுமென்பது ஆத்யாத்மிக தத்வம். அந்த சக்தியை ஆளும் தத்வம்தான் தேவஸேனாபதி எனப்படுகிறது. **विशाखं** (விசாகம்) என்றால் கிளையற்றது என்பதான அர்த்தமும் உண்டு. அதிலிருந்து தியானம் செய்யப்படுகிற பொருள் ஸ்வகதபேதமுமற்றது என்று த்வனிக்கிறது. **नगे** (நகே) என்ற பதத்திற்கு அசையாதது என்று ஒரு அர்த்தம். அசலமாய் சஞ்சலமற்று நிற்கும் மனதில் வாஸம் செய்கிறார் என்னும் அர்த்தமும் த்வனிக்கிறது. **वल्लिका** (வல்லிகா) என்ற வார்த்தை தேவி வள்ளியம்மனையும்,

கொடியையும் குறிக்கும். கொடிதான் கிளையற்ற மரத்தைக் கூடத் தேடிப் படரும். கொடிக்கு அந்த மரம் ஆச்ரயமாக இருப்பதுபோல் பகவான் எல்லாவற்றிற்கும் ஆச்ரயமாக இருக்கிறார். துளிர்க்காத கட்டையும் இலையில்லாத கொடியும் சேர்ந்து பெற்றெடுத்தது, கிளையற்றிருப்பது நியாயமே. அதை அப்படியே விட்டுவிடக்கூடாதென்று எண்ணி வேறு கொடியைத் தேவதைகள் சேர்த்துவிட்டார்கள்போலும்.]

(அ) மேலே மூன்றாவது சுலோகத்தில் விகாரங்கள், துக்கங்கள் ஆகிய சத்ருக்களை அழிக்க ஸஹாயமாக இருப்பவர் பகவான் என்று சொல்லப்பட்டது. அதே சுலோகத்தில் அவைகளுக்கு பீஜபூதமானது "நான்" என்னும் பாவனை என்றும் சொல்லப்பட்டது. "நான்" என்னும் பாவனையும் மற்றொன்றுக்குத் துவாரமாக இருந்து துக்கங்களுக்குக் காரணமாகிறது அதைத்தான் "அஞானம்", "ப்ரமாதம்" என்று சொல்லுகிறோம். ஸனத்ஸுஜாதீயத்தில் சொல்லப்படுவது आस्यादेष निःसरते (ஆஸ்யாதேஷ நி:ஸரதே) இந்த ப்ரமாதம் (அஞானம்) அஹம்காரம் என்னும் வாயிலாக வெளிவருகிறது, காம க்ரோதாதி ரூபமாக. ஆகையால் பீஜம் அஞானம். அந்த அஞான நாசத்திற்குப் பகவான் எவ்விதம் உதவுகிறார் என்பது விளக்கப்படுகிறது :—

गुकारेण वाच्यं तमो बाह्यमन्तः स्वदेहाभया ज्ञानदानेन हन्ति ।
य एनं गुहं वेदशीर्षैकमेयं सदा षण्मुखं भावये हृत्सरोजे ।। ५ ।।

குகாரேண வாச்யம் தமோ பாஹ்யமந்த:
ஸ்வதேஹாபயா ஞானதானேன ஹந்தி ।
ய ஏநம் குஹம் வேதஶீர்ஷைகமேயம்
ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥

**गुकारेण**–"கு" என்னும் அக்ஷரத்தால், **वाच्यं**–சொல்லப்படும், **बाह्यमन्तः**–வெளியிலும் உள்ளும் இருப்பதுமான, **तमः**–இருட்டை, **यः**–எவர் (முறையே), **स्वदेहाभया**–தன் சரீரத்தின் காந்தியினாலும், **ज्ञानदानेन**–ஞானத்தைக் கொடுப்பதாலும்,

**हन्ति**-நாசம் செய்கிருரோ, **एतं**-இந்த, **गुहं**-குஹன் என்ற பெயர்கொண்ட, **वेदशीर्षैकमेयं**-உபநிஷத் வாக்யங்களால் மட்டும் விளங்கக்கூடிய ஸ்வரூபமுடையவரான, **षण्मुखं**-ஷண்முகரை, **सदा**-எப்பொழுதும், **हृत्सरोजे**-ஹிருதய கமலத்தில், **भावये**-தியானம் செய்கிறேன்.

[இந்த சுலோகத்தில் குஹன் என்னும் பெயர் பகவானுக்கு எவ்விதம் ஏற்பட்டது என்னும் தத்வத்தை விளக்குவதன் மூலமாகப் பகவான் ஞானஸ்வரூபி என்றும், அவர் ஸ்வரூபம் வேதங்களிலுள்ள உபநிஷத் பாகங்களில்தான் விளக்கப்படுகிறது என்றும் உபதேசிக்கப்படுகிறது] (5)

(அ) கர்மமார்க்கத்தின் மஹிமையை விளக்குகிருர்:—

**यतः कर्ममार्गो भुवि ख्यापितस्तं स्वनृत्ये निमित्तस्य हेतुं विदित्वा ।**
**वहत्यादरान्मेघनादानुलासी सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ ६ ॥**

யத: கர்மமார்கோ புவி க்யாபிதஸ்தம்
ஸ்வந்ருத்யே நிமித்தஸ்ய ஹேதும் விதித்வா ।
வஹத்யாதரான் மேகநாதானுலாஸீ
ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥

**यतः**-எவரால், **भुवि**-பூலோகத்தில், **कर्ममार्गः**-கர்மமார்க்கம், **ख्यापितः**-பிரஸித்தி அடைந்ததோ, **तं**-அவரையே, **स्वनृत्ये**-தன்னுடைய நடனத்திற்கு, **निमित्तस्य**-காரணத்தின் **हेतुं**-காரணமாக, **विदित्वा**-தெரிந்துகொண்டு, **आदरात्**-ரொம்பவும் குதூஹலத்துடன், **मेघनादानुलासी**-மேக சப்தத்தையனுசரித்து ஆடுகிற மயில், **वहति**-வஹிக்கிறதோ, **तं**-அந்த, **षण्मुखं**-ஷண்முகரை, **सदा**-எக்காலமும், **हृत्सरोजे**-ஹிருதயகமலத்தில், **भावये**-தியானம் செய்கிறேன்.

[பகவான் ஸுப்ரஹ்மண்யரே குமரிலபட்டராகப் பூலோகத்தில் அவதரித்து கர்மமார்க்கத்தைப் பிரதிஷ்டை செய்தார் என்பது பிரஸித்தமான விஷயம். அவர் வாஹனமான மயிலுக்கு **मेघनादानुलासी** (மேகநாதானுலாஸீ) என்னும்

விசேஷணம் பொருத்தமாயிருப்பதோடு சில முக்ய தத்வங்களும் த்வனிக்கின்றன. கர்மமார்க்கம் என்பதை கீதாசார்யார் உபதேசித்திருப்பதில் ஆரம்பத்தில் **सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः** (ஸஹயக்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:) கர்மமார்க்கத்திற்கு அதிகாரியான பிரஜைகளை யக்ஞத்துடனேயே சிருஷ்டித்திருக்கிறார். அதோடு யக்ஞத்தை **इष्टकामधुक्** (இஷ்டகாமதுக்) காமனைகளைப் பூர்த்திசெய்யும் காமதேனு என்று வர்ணித்து **यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः** (யக்ஞாத் பவதி பர்ஜன்யோ யக்ஞ: கர்ம ஸமுத்பவ:) யக்ஞத்திலிருந்து மழை பொழியும் மேகம் உண்டாகிறது. யக்ஞம் கர்மாவில் அடங்கியது என்றும் உபதேசித்திருக்கிறார். அந்தத் தத்வங்களையும் இந்த சுலோகம் ஞாபகப்படுத்துகிறது. மேலும் மயில் தோகையை விரித்தாடுவது ஸந்தோஷத்தால். அதற்குக் காரணம் மேக சப்தம். அந்த மேகம் கர்மாவினால் உண்டாகிறது என்பதை ஞாபகப்படுத்திக்கொண்டால் பகவானுடைய அந்த வாஹனம் அந்த ஸுப்ரஹ்மண்ய மூர்த்தியை ஸந்தோஷத்துடன் சுமந்துகொண்டிருப்பதற்கு காரணம் ஸ்பஷ்டமாகும்.] (6)

(அ) கர்மமார்க்கத்தின் மேன்மையை உபதேசித்து அந்தக் கர்மமார்க்கத்தை அவலம்பிப்பதற்கு அடிப்படையாக ஆஸ்திக்யம் அவசியம் என்பதை அடுத்த சுலோகம் காட்டுகிறது:—

कृपावारिराशिर्नृणामास्तिकत्वं दृढं कर्तुमद्यापि यः कुक्कुटादीन् ।
भृशं पाचितान्जीवयन्राजते तं सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ ७ ॥

க்ருபாவாரிராஶிர் ந்ருணாமாஸ்திகத்வம்
த்ருடம் கர்துமத்யாபி ய: குக்குடாதீன் ।
ப்ருஶம் பாசிதான் ஜீவயன் ராஜதே தம்
ஸதா ஷண்முகம் பாவயே ஹ்ருத்ஸரோஜே ॥

**नृणां**-மனிதர்களுக்கு, **आस्तिकत्वं**-நம்பிக்கையை (கடவுள் இருக்கிறார் என்னும் எண்ணத்தை), **दृढं**-திடமாக, **कर्तुं**-

செய்வதற்காக, **अद्यापि**-இப்பொழுதும்கூட, **कृपावारिराशिः**-கருணாஸமுத்திரமாகிய, **यः**-எவர், **भृशं**-நன்கு, **पाचितान्**-சமைக்கப்பட்ட, **कुक्कुटादीन्** - கோழி முதலியவைகளை, **जीवयन्** - உயிர்ப்பித்துக்கொண்டு, **राजते**-விளங்குகிறாரோ, **तं**-அந்த, **षण्मुखं**-ஷண்முகரை, **सदा**-எப்பொழுதும், **हृत्सरोजे**-ஹிருதய கமலத்தில், **भावये**-தியானிக்கிறேன்.

[கடவுள் வழிபாட்டில் நம்பிக்கை இல்லை என்றால் ஒருவரும் சாஸ்திர முறைப்படி நடந்து கரையேரமாட்டார்கள். அந்த நம்பிக்கை அஸாதாரணமான செயல்களால் சீக்கிரம் பலப்படுகிறது. கருணாஸமுத்திரம் என்னும் விசேஷத்தால் ஜனங்களிடத்திலும் பலிகொடுக்கப்பட்ட ஜந்துக்களிடத்திலும் அவர் கருணை பரவியிருக்கிறது என்று துலங்குகிறது.] (7)

(அ) கடைசி சுலோகம் பலனைக் கூறுகிறது:—

**भुजङ्गप्रयातेन वृत्तेन क्लृप्तां स्तुतिं षण्मुखस्यादराद्ये पठन्ति ।**
**सुपुत्रायुरारोग्यसंपद्विशिष्टान् करोत्येव तान् षण्मुखः सद्विदग्र्यान् ॥**

புஜங்க ப்ரயாதேன வ்ருத்தேன க்லுப்தாம்
ஸ்துதிம் ஷண்முகஸ்யாதராத் யே படந்தி ।
ஸுபுத்ராயுராரோக்ய ஸம்பத் விஶிஷ்டான்
கரோத்யேவ தான் ஷண்முக: ஸத்விதக்ர்யான் ॥

**भुजङ्गप्रयातेन**-புஜங்க ப்ரயாதம் எனப்படும், **वृत्तेन**-விருத்தத்தால், **क्लृप्तां**-இணைக்கப்பட்ட, **षण्मुखस्य**-ஷண்முகருடைய, **स्तुतिं**-இந்த ஸ்தோத்திரத்தை, **आदरात्**-பக்தியுடன், **ये**-எவர்கள், **पठन्ति**-படிக்கிறார்களோ, **तान्**-அவர்களை, **षण्मुखः**-ஷண்முகர், **सुपुत्रायुरारोग्यसंपद्विशिष्टान्**-நல்ல புத்திரன், ஆயுஸ், ஆரோக்யம், செல்வம் இவைகளுடன் கூடினவர்களாயும், **सद्विदग्र्यान्**-ஸத்தை (பிரஹ்மத்தை) அறிந்தவர்களுள் சிரேஷ்டர்களாயும், **करोत्येव**-கட்டாயம் செய்துவைக்கிறார். (8)

ஷண்முக புஜங்க ஸ்துதி முற்றும்.

# ॥ षण्मुखपञ्चरत्नस्तुतिः ॥

## ஷண்முக பஞ்சரத்ன ஸ்துதி.

(ஸ்ரீ சந்திரசேகரபாரதி ஸ்வாமிகள் அருளியது)

[இந்த ஸ்தோத்ரமும் ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ சந்த்ர சேகரபாரதீ ஸ்வாமிகள் அவாகள் 1925ல் மயூராசலம் என்னும் குன்னக்குடிக்கு விஜயம் செய்திருந்த சமயம் அங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய மூர்த்தியின் பேரில் செய்தருளியது. ஐந்து சுலோகங்கள் கொண்ட இந்த பஞ்சரத்ன ஸ்துதியில் பல சாஸ்திர ரஹஸ்யங்கள் பொதிந்துள்ளன]

स्फुरद्विद्युद्वल्लीवलयितमगोत्संगवसतिं
भवाप्पित्तप्लुष्टानमितकरुणाजीवनवशात् ।
अवन्तं भक्तानामुदयकरमम्भोधर इति
प्रमोदादावासं व्यतनुत मयूरोऽस्य सविधे ॥ १ ॥

ஸ்புரத் வித்யுத் வல்லீ வலயிதமகோத்ஸங்கவஸதிம்
பவாப்பித்த ப்லுஷ்டானமித கருணா ஜீவன வசாத் ।
அவந்தம் பக்தாநாமுதயகரமம்போதர இதி
ப்ரமோதாதாவாஸம் வ்யதனுத மயூரோऽஸ்ய ஸவிதே ॥

स्फुरत् - ஒளி வீசுகிற, विद्युत् - மின்னல்போன்ற, वल्ली- வள்ளீதேவியால், वलयितं- ஆலிங்கனம் செய்துகொள்ளப் பட்டவரும், अगोत्सङ्गवसतिं - மலையின்மேல் வாஸம்செய்பவரும், भवाप्पित्तप्लुष्टान् - பிறவி என்னும் நெருப்பினால் தாபமடைந்தவர்களை, अमित-அளவற்ற, करुणाजीवनवशात्- தயை என்னும் தண்ணீரால், अवन्तं-காப்பவரும், भक्तानां-பக்தர்களுக்கு, उदयकरं - எழுச்சியைச் செய்பவருமான ஸுப்ரஹ்மண்யரை, अम्भोधर इति-மேகம் என்று (எண்ணி) मयूरः- மயில், प्रमोदात् - ஸந்தோஷத்தால், अस्य-இவருக்கு, सविधे- அருகில், आवासं-வாஸத்தை, व्यतनुत-செய்தது.

ஷண்முகருக்கு மயில் வாஹனமாக அமைந்துள்ளது. பகவான் மயிலைத் தேடிச்சென்று அதைப் பிடித்து நிர்பந்த

மாகத் தனக்கு வாஹனமாக ஆக்கிக்கொள்ளவில்லை. மயில் தானுகவே ப்ரீதியுடன் இவர் அருகில் வந்து எப்பொழுதும் இங்கேயே வஸிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் வாஹனமாக ஸேவை செய்கிறது. ஏனெனில் மயிலுக்கு மிகவும் ஆனந்தத்தைத் தருவது மேகம்தான். நீருண்ட மேகத்தைக் கண்டதும் ஆனந்தபரவசத்தால் மயில் நர்த்தனம் செய்யும் ஷண்முகரையும் மேகம் என்றே எண்ணித்தான் இவர் அருகில் வாஸம்செய்கிறது. மேகத்தில் மின்னல் இருக்கும். இவரிடத்தில் மின்னல் போன்ற ஒளியுள்ள வள்ளி இருக்கிருள். மேகம் போலவே இவரும் மலையின்மேல் தங்கியிருக்கிருர். ஸூரியனின் வெய்யிலால் தபித்தவர்களுக்கு நீரைப் பொழிந்து தாபத்தைப் போக்குகிறது மேகம். இவரும் கருணையால் ஸம்ஸார தாபத்தைப் போக்குகிருர். அன்னம் ஸஸ்யம் இவைகளின் விருத்தி மேகத்தால் ஏற்படுகிறது. பக்தர்களுக்கு அபிவிருத்தி பகவாஞல் ஏற்படுகிறது. இவ்விதம் எல்லாவிதத்திலும் மேகத்திற்கு ஸமானமாக இருப்பதால்தான் மயில் ஷண்முகரின் அருகில் வாஸம் செய்கிறது. (1)

सुब्रह्मण्यो यो भवेज्ज्ञानशक्त्या सिद्धं तस्मिन्देवसेनापतित्वम् ।
इत्थं शक्तिं देवसेनापतित्वं सुब्रह्मण्यो बिभ्रदेष व्यनक्ति ॥

ஸுப்ரஹ்மண்யோ யோ பவேத் ஞான ஶக்த்யா
ஸித்தம் தஸ்மின் தேவஸேநாபதித்வம் ।
இத்தம் ஶக்திம் தேவஸேனுபதித்வம்
ஸுப்ரஹ்மண்யோ பிப்ரதேஷ வ்யநக்தி ॥

**यः** – எவன், **ज्ञानशक्त्या** – ஞானசக்தியால், **सुब्रह्मण्यः**– ஸுப்ரஹ்மண்யனுக, **भवेत्** –இருப்பாளுே **तस्मिन्** –அவனிடம் **देवसेनापतित्वं** –தேவஸேனுபதித்தன்மை, **सिद्धं** – ஸித்தமாக இருக்கும். **इत्थं**–இவ்வாறு, **शक्तिं**-சக்தியையும், **देवसेनापतित्वं**- தேவஸேனுபதித்தன்மையையும், **बिभ्रत्** – தரிக்கிற, **एष सुब्रह्मण्यः** – இந்த ஸுப்ரஹ்மண்யர், **व्यनक्ति**–வெளியிட்டுக் காட்டுகிருர்.

ஸுப்ரஹ்மண்யர் கையில் சக்தி ஆயுதம் வைத்துக் கொண்டிருக்கிறார். அத்துடன் தேவர்களின் ஸைன்யங்களுக்குத் தலைவனாகவும் இருக்கிறார். தேவஸேனைக்குக் கணவனாகவும் இருக்கிறார். எவன் ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் கூறியுள்ளபடி தத்வவிசாரம் செய்து ஞானத்தைப் பெற்று ஸுப்ரஹ்மண்யனாக ஆகிறானோ, அதாவது சிறந்த ப்ராஹ்மண்யத்தை அடைகிறானோ அவன் தேவஸேனாபதியாக ஆகிறான். ஸுப்ரஹ்மண்யருடைய ஸாயுஜ்யத்தை அடைகிறான். அல்லது தேவர்களென்றால் இந்திரியங்கள், இவைகளின் ஸைன்யம் விருத்திகள், இவைகளுக்குப் பதியாக ஆகிறான். அதாவது இந்திரியங்களைத் தனக்கு ஸ்வாதீனமாகச் செய்து இவைகளின் யஜமானனான ஆத்மஸ்வரூபமாக விளங்குகிறான். (2)

पक्षोऽनिर्वचनीयो दक्षिण इति धियमशेषजनतायाः ।
जनयति बर्ही दक्षिणनिर्वचनायोग्यपक्षयुक्तोऽयम् ॥ ३ ॥

பக்ஷோऽநிர்வசநீயோ தக்ஷிண இதி தியமஶேஷ ஜநதாயா: ।
ஜநயதி பர்ஹீ தக்ஷிண நிர்வசநாயோக்ய பக்ஷ யுக்தோயம் ॥

**दक्षिण** – புத்தியிற்சிறந்தவர்களாலும், **निर्वचनायोग्य** – விளக்கிக்கூறமுடியாத, **पक्षयुक्तः** – இறக்கையுடன்கூடிய, **अयं**–இந்த, **बर्ही**–மயில், **अशेषजनतायाः**–எல்லா ஜனஸமூஹத்திற்கும், **अनिर्वचनीयः पक्षः**–அநிர்வசனீயஸித்தாந்தம், **दक्षिणः** –சிறந்தது, **इति**–என்ற, **धियं**–புத்தியை, **जनयति**–உண்டு பண்ணுகிறது.

பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை ஆராய்ச்சி செய்கின்ற அறிவாளிகள் பற்பலவிதமாகத் தீர்மானித்துள்ளார்கள். சிலர் 'ஸத்' (உண்மை) என்று கூறுகின்றனர். வேறு சிலர் 'அஸத்' (இல்லாதது) என்று சொல்கின்றனர். மற்றும் சிலர் ஸத்தாகவும் அஸத்தாகவும் உள்ளது என்று தீர்மானிக்கின்றனர். அத்வைதிகளோ 'அநிர்வசனீயம்' என்று சொல்கிறார்கள். பிரபஞ்சம்

தான் இருக்கிறது என்பதைத் தீர்மானமாக விளக்கிக்காட்ட முடியாது. பிரபஞ்சம் உண்மைப் பொருளானால் ஞானத்தால் மறைந்துபோகாது. கயிற்றில் தோன்றின பாம்பு 'இது கயிறு' என்று தெரிந்தவுடன் இந்த ஞானம் ஒன்றினாலேயே மறைந்துபோவதுபோல் ஆத்மஸ்வரூப ஞானம் ஒன்றினாலேயே பிரபஞ்சமும் மறைந்துபோவதால் இதை 'ஸத்' என்று கூறமுடியாது. பிரபஞ்சம் அஸத்தாக இருக்குமானால் முற்றிலும் இல்லாத பொருள் ஒருக்காலும் தோன்றாது. பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருப்பதால் அதை அஸத் என்றும் சொல்லமுடியாது. ஒன்றுக்கொன்று விருத்தமானதால் ஒரே பொருள் ஸத்தாகவும் அஸத்தாகவும் இருப்பதாகவும் கூறமுடியாது. இம்மாதிரி இன்னவிதம் தான் என்று பிரபஞ்சத்தை யாராலும் தீர்மானித்துக் கூற முடியாததால் அநிர்வசனீயம் என்று அத்வைதிகள் கூறுகிறார்கள். கயிற்றில் பாம்பு தோன்றுவதுபோல் பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருக்கும். எல்லா வியவஹாரங்களும் நடைபெறும். ஆனாலும் அது உண்மையல்ல. இதுதான் அத்வைதிகளின் ஸித்தாந்தம். மயிலின் இறகிலும் பல நிறங்கள் காணப்படுவதால் இன்ன நிறம் தான் என்று புத்திமான்களாலும் கூறமுடியாமலிருக்கிறது. தன் இறக்கையைப்போல பிரபஞ்சமும் அநிர்வசனீயம்தான் அத்வைதிகள் கூறும் அநிர்வசனீயவாதமே பொருத்தமானது என்பதை மயில் எல்லோருக்கும் அறிவுறுத்துகிறது.

**यः पक्षमनिर्वचनं याति समवलम्ब्य दृश्यते तेन ।**
**ब्रह्म परात्परममलं सुब्रह्मण्याभिधं परं ज्योतिः ॥ ४ ॥**

ய: பக்ஷமநிர்வசநம் யாதி ஸமவலம்ப்ய த்ருச்யதே தேந ।
ப்ரஹ்ம பராத்பரமமலம் ஸுப்ரஹ்மண்யாபிதம்
பரம் ஜ்யோதி: ॥

**यः**-எவன், **अनिर्वचनं पक्षं**-அநிர்வசனீயபக்ஷத்தை, **समवलम्ब्य**-பிடித்துக்கொண்டு, **याति** செல்கிறானோ, **तेन**-அவனால், **परात्परं**-மேலானதிற்கும் மேலானதும், **अमलं**-பரிசுத்தமான

தும், **सुब्रह्मण्याभिधं**-ஸுப்ரஹ்மண்யர் என்று பெயருள்ளதும் **परंज्योतिः**-பரஞ்ஜ்யோதிருபமுமான, **ब्रह्म**-ப்ரஹ்மம், **दृश्यते**-காணப்படுகிறது

_)ன்ன நிறம் என்று கூற முடியாத மயிலின் இறக்கையைப் பிடித்துக்கொண்டு சென்றால் மயில்வாஹன ரான ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யரை தரிசிக்கலாம். இதுபோல் அத்வைதிகள் கூறும் அநிர்வசனீய ஸித்தாந்தத்தை மனதில் நன்கு நிலைநிறுத்திக்கொண்டு பிரபஞ்சத்தைப் பொய் என்று உதறித்தள்ளிப் பார்த்தால் சைதன்யப்ரகாச ஸ்வரூபமான பரப்ரஹ்மதத்வம் நன்கு நேரில் தெரியும். (4)

षण्मुखं हसन्मुखं सुखाम्बुराशिखेलनं
सन्मुनीन्द्रसेव्यमानपादपङ्कजं सदा ।
मन्मथादिशत्रुवर्गनाशकं कृपांबुधिं
मन्महे मुदा हृदि प्रपन्नकल्पभूरुहम् ॥ ५ ॥

ஷண்முகம் ஹஸன்முகம் ஸுகாம்புராஶி கேலனம்
ஸன்முநீந்த்ர ஸேவ்யமான பாதபங்கஜம் ஸதா ।
மன்மதாதி ஶத்ருவர்க்க நாஶகம் க்ருபாம்புதிம்
மன்மஹே முதா ஹ்ருதி ப்ரபன்ன கல்ப பூருஹம் ॥

**हसन्मुखं**-மந்தஹாஸத்துடன்கூடிய வதன முள்ளவரும் **सुखाम्बुराशिखेलनं**-ஆனந்த ஸமுத்திரத்தில் விளையாடுபவரும் **सन्मुनीन्द्र**-சிறந்த முனிசிரேஷ்டர்களால், **सेव्यमान**-ஸேவிக்கப் படுகிற, **पादपंकजं**-தாமரைபோன்ற திருவடிகளை உடைய வரும், **मन्मथादिशत्रुवर्ग**-காமன் முதலான எதிரிக்கூட்டத்தை **नाशकं**-அழிப்பவரும், **कृपाम्बुधिं**-கருணைக்கடலும், **प्रपन्न**-சரணமடைந்தவர்களுக்கு, **कल्पभूरुहं**-(கேட்டதைக் கொடுக்கும்) கல்பவிருக்ஷம்போல் இருப்பவருமான, **षण्मुखं**-ஆறுமுகரை, **हृदि**-மனதில், **मुदा**-ஸந்தோஷத்துடன், **सदा**-எப்பொழுதும், **मन्महे**-தியானிக்கிறோம்.

ஆறுமுகர் சிரித்த முகத்துடன் ஆனந்தஸாகரத்தில் நீந்தி விளையாடிக்கொண்டிருப்பவர் பக்தர்களுக்கும் அந்த ஆனந்தத்தைத் தந்து ஹஸன்முகர்களாகச் செய்வார். சிறந்த முனிவர்களும் அவருடைய திருவடிகளை வணங்குகின்றனர். கருணைக்கடல். சரணமடைந்தவர்களுக்கு வேண்டியதையெல்லாம் கொடுப்பார். நம் மனதை வாட்டும் கொடிய ஆந்தரவைரிகளான காமம், க்ரோதம் முதலியவைகளை அழித்துக் காப்பாற்றுபவர். இவரை எப்பொழுதும் தியானிக்கவேண்டும். (5)

ஸ்ரீ ஷண்முக பஞ்சரத்னஸ்துதி முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ तोटकस्तोत्रम् ॥

## தோடக ஸ்தோத்ரம்

*சிருங்ககிரி ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் அருளியது*

( ஸ்ரீ R. மஹாலிங்க அய்யரின் தமிழ் உரையுடன் கூடியது )

[ஈசுவரன், குரு, ஆத்மா இம்மூவரும் வெவ்வேருகத் தோன்றிய போதிலும் உண்மையில் ஒன்றுதான். அபேத திருஷ்டியோடு ஆத்மானுஸந்தானம் செய்யக்கூடிய மேலதிகாரிகள் குருவை உபாஸிக்கவேண்டிய முறையையும், சுத்த அத்வைதத்தின் அடிப்படையான விஷயங்களையும் தெளிவாக எடுத்துக்காட்டி பகவத்பாதாள் தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம் முதலிய கிரந்தங்களை அருளியிருக்கிருர்கள். ராகத்வேஷாதிகளுக்கு உள்பட்டிருக்கும் ஸாமான்ய பாமரர்களுக்கு அந்த ரீதியில் உபாஸிப்பது சிரம ஸாத்யம். பாமரர்களுக்கும் உபயோகப்படும்படி எவ்விதம் குருவை உபாஸிக்கலாம் என்று தெளிவாகக் காட்டக்கூடியதாக தோடக ஸ்தோத்ரம் அமைந்திருக்கிறது. இது சிருங்ககிரி பரமாசார்யாள் ஜீவன்முக்தராக விளங்கின ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் இயற்றியது. மேலும் குரு பக்திக்கு ப்ராதான்யம் கொடுத்து எந்த விருத்தத்தில் ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் சிஷ்யர் கிரி என்பவர் ஆத்ம தத்வத்தை தன் பக்தியினுல் விளக்கினுரோ அதே விருத்தத்தில் இந்த ஸ்தோத்திரம் அமைக்கப்பட்டிருப்பது ஒரு விசேஷம். இதை அனுஸந்தானம் செய்தால் நாமும் கூடிய சீக்கிரம் குரு பக்தி மூலமாக ஞானமார்க்கத்தில் பயிற்சி அடையலாம் என்பதில் ஸந்தேகமில்லை.]

(அ) குருவினுடைய எந்த விசேஷ அம்சத்தைக் கொண்டு நம் ஹ்ருதயகமலத்தில் நிரந்தரமாக அவர் மூர்த்தியை வாஸம் செய்விக்கலாம் என்று ஆலோசித்து அவருடைய மந்தஹாஸத்தையே ஆரம்பத்தில் வர்ணிக்கிருர் :—

स्मितनिर्जितकुन्दसुमं ह्यसमं मुखधूतसुधांशुमदं शमदम् ।
सुखरूपपरात्मरतं निरतं श्रितकल्पतरुं प्रणमामि गुरुम् ॥

ஸ்மித நிர்ஜித குந்தஸுமம் ஹ்யஸமம்
முக தூத ஸுதாம்ஶுமதம் ஶமதம் |
ஸுகரூப பராத்மரதம் நிரதம்
ச்ரிதகல்பதரும் ப்ரணமாமி குரும் ||

असमं-நிகரற்றவரும், स्मितनिर्जितकुन्दसुमं-அழகில் குந்த புஷ்பத்தை ஜயித்த மந்தஹாஸத்துடன் கூடினவரும், मुखधूतसुधांशुमदं-சந்திரனுடைய (அமிருதம் பொழியும்) கர்வத்தை அடக்கக்கூடிய முகலாவண்யத்தோடு கூடிய வரும், शमदं-மனதுக்கு சாந்தியைக் கொடுப்பவரும், सुखरूपपरात्मरतं-ஸதாகாலமும் ஆனந்தரூபமான பரமாத்மா விடமே ப்ரீதிகொண்டவரும், निरतं-அதிலேயே ஈடுபட்ட வரும், श्रितकल्पतरुं-தன்னை அண்டினவர்களுக்கு கல்ப விருக்ஷம் போன்றவருமான गुरुं-குருவை प्रणमामि-நமஸ்காரம் செய்கிறேன்.

ஸத்யமானதும் சாசுவதமானதுமான நம் ஸ்வரூபம் ஸுகரூபமானது. ஸாக்ஷாத் குருவின் ஸ்வரூபமும் ஸுக ரூபமே. உள்ளேயிருக்கும் ஸுகம் ஆவிர்பவிக்கும்பொழுது வெளியில் அது மந்தஹாஸமாகத்தான் தோற்றமளிக்கும். ஆத்மஸுகத்திற்கும் விஷயஸுகத்திற்கும் வேற்றுமையைக் காண்பிக்கக்கூடியதான அநேக அம்சங்கள் இந்த சுலோகத்தில் தெளிவாகின்றன. முதலாவது லௌகிக திருஷ்டாந்தத்தால் நிரந்தரமான ஸுகத்தின் ஆவிர்பாவ மான மந்தஹாஸம் குந்த புஷ்பத்திற்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது. ஆனுல் அந்த ஸுகம் இணையற்றது என்ற விசேஷணத்தைச் சேர்த்திருக்கிறது. அதேமாதிரி அடுத்த பாதத்தில் ஸந்தோஷ ஜனகமான சந்திரனை திருஷ்டாந்தமாகச் சொல்லி அதுவும் ஸுகமாகாது என்பதைக் காண்பிப்பதற்காக சாந்தியைக் கொடுக்கக் கூடியது என்று சொல்லப்பட்டது. ஆத்மஸுகம் மனதிற்கு எட்டாததால் மனது சமனம் அடைந்தால் தான் அது நன்கு விளங்கும். பரமாத்ம ஸ்வரூபமும் ஸுகரூபமாகையால் அதிலேயே எப்பொழுதும் லயித்திருப்பதாகச்சொல்லப்பட்டு இருக்கிறது. ஆத்மநிஷ்டனுக்கு ஸுகானுபவம் ஸ்வதஸ்

ஸித்தமாக இருந்தால் நமக்கு என்னப் பிரயோஜனம் என்பதற்காக, நமக்கும் அவருக்கும் உள்ள ஸம்பந்தத்தைக் காண்பிப்பதற்கு, சரணமடைந்தவர்களுக்கு கல்பக விருக்ஷம் போல் விளங்குகிருர் என்னும் குணாதிசயத்தையும் எடுத்துக் காட்டியிருக்கிறது. (1)

(அ) ஆத்ம ஸுகத்தை அடைய வேண்டுமானுல் குருவின் அனுக்ரஹம் அவசியம். குருவின் அனுக்ரஹம் வேண்டுமானுல் சரீராதிகளில் ' நான் " " என்னுடையது " என்னும் பாவனைகள் குறையவேண்டும். சரீரத்தில் 'நான்' என்னும் பாவனை குறையவேண்டுமானுல் சரீரத்தின் தோஷங்கள் நன்ருகத் தெரிந்தாகவேண்டும். அதைக் காண்பிப்பதற்காக அடுத்த சுலோகம் :—

जलबुद्बुदवत्क्षणभङ्गयुते मलमूत्रवसासहिते वपुषि ।
कुरुतेऽभिमतिं हृदयं हि मुधा लघु वारय देशिक तां दयया ॥

ஜலபுத்புதவத் க்ஷணபங்கயுதே
மலமூத்ர வஸா ஸஹிதே வபுஷி ।
குருதேऽபிமதிம் ஹ்ருதயம் ஹி முதா
லகு வாரய தேசிக தாம் தயயா ॥

**जलबुद्बुदवत्**-நீர்க்குமிழி போல், **क्षणभङ्गयुते**-ஒரு க்ஷணத்தில் மறையக்கூடிய ஸ்வபாவமுள்ளதும், **मलमूत्रवसासहिते**-மலம், மூத்திரம், கொழுப்பு இந்த துர்கந்தமான பதார்த்தங்களுடன் கூடியதுமான, **वपुषि**-சரீரத்தில், **हृदयं** -(என்) மனது, **मुधा**-அனுவசியமாக, **अभिमतिं**-ஆசையை, **कुरुते हि**-வைக்கிறது **देशिक**-குருமூர்த்தியே ! **तां**-அந்த ஆசையை, **दयया**-தயவுசெய்து, **लघु**-சீக்கிரம், **वारय**-தடுத்துவிடுங்கள்.

நீர்க்குமிழி மாதிரி வெகு சீக்கிரம் மறையக்கூடியதும், மலம், மூத்திரம், கொழுப்பு முதலான வஸ்துக்களோடு கூடினதுமான இந்த சரீரத்தில் (என்) மனது அபிமானத்தைச் செலுத்துகிறதே. ஹே தேசிக ! அதை தயவு செய்து தடுத்துவிடுங்கள்.

ஒரு பொருளில் வைராக்யம் ஏற்பட வேண்டுமானால் இரண்டு காரணங்கள் அவசியம். ஒன்று அது விரைவில் அழியக்கூடியதாக இருக்கவேண்டும். மற்றொன்று அது ஸ்வரூபத்திலேயே வெறுக்கத்தக்கதாக இருக்கவேண்டும். இந்த இரண்டு அம்சங்களும் சரீரத்தில் இருந்தும் நாம் அதில் அபிமானம் செலுத்துகிறோம். இது மாயையின் விலாஸம். ஆகையால் அந்த வைராக்யம் குருகிருபையால் தான் ஏற்படவேண்டும். (2)

(அ) மனது என்பது ஏதாவது ஒரு விஷயத்தை அவலம்பிக்காமல் இருக்கக்கூடியதில்லை. அது ராகத்வேஷங்களுக்கு இருப்பிடம். அப்படியிருக்க அது போகிற வழியிலேயே விட்டுவிட்டால் அக்ஞானத்தினால் அசுபமான பதார்த்தங்களிலேயே சுக ஸாதனம் என்கிற பிராந்தியால் ஈடுபட்டுக் கெடுத்துவிடும். ஆகவே அதற்கு எந்த பதார்த்தத்தை அவலம்பனமாகக் கொடுத்தால் சுத்தமாக ஆகி சுபமான மார்க்கத்தில் போகுமோ அப்பேற்பட்ட திருஷ்டிகோசரமான குருவின் மூர்த்தியை வணங்குகிறார்:—

धृतदण्डकमण्डलुजापसरं सततं हृदये शशिखण्डधरम् ।
दधतं नमतां वृजिनौघहरं ददतं प्रतिभां प्रणमामि गुरुम् ॥

த்ருததண்ட கமண்டலு ஜாபஸரம்
ஸததம் ஹ்ருதயே ஶஶிகண்டதரம் ।
தததம் நமதாம் வ்ருஜிநௌக ஹரம்
தததம் ப்ரதிபாம் ப்ரணமாமி குரும் ॥

**धृतदण्डकमण्डलुजापसरं**-கைகளில் தண்டம், கமண்டலு, ஜபமாலை இவைகளை தரித்துக்கொண்டிருப்பவரும், **सततं**-ஸதாகாலமும், **हृदये**-மனதில், **शशिखण्डधरम्**-சந்திரகலையை தரித்துக்கொண்டிருக்கும் பகவானையே, **दधतं**-தியானம் செய்கிறவரும், **नमतां**-தன்னை வணங்குகிறவர்களுடைய, **वृजिनौघहरं**-பாபக் கூட்டங்களைப் போக்குகிறவரும், **प्रतिभां**-நல்ல மேதையை **ददतं**-கொடுக்கக்கூடியவருமான, **गुरुम्**-குருமூர்த்தியை, **प्रणमामि**-வணங்குகிறேன்,

தண்டம், கமண்டலு, ஜபமாலை இவைகளை தரித்துக் கொண்டும் ஸதாகாலமும் மனதில், சந்திரகலையை தரித்துக்கொண்டிருக்கும் பகவானை தியானம் செய்து கொண்டும் தன்னை வணங்குகிறவர்களின் பாபங்களைப் போக்கி நல்ல மேதையைக் கொடுக்கக்கூடியவருமான குரு மூர்த்தியை நமஸ்காரம் செய்கிறேன்.

ஒருவன் எதை ஸதா த்யானம் செய்கிருனே அதாகவே ஆகிவிடுகிருன் என்பதை ப்ரமரகீட நியாயம் என்று சொல்வார்கள். அந்த ரீதியில் நம் மனது பரிசுத்தமாய்த் தெளிவு படுவதற்காகத் தியானம் செய்யப்படும் மூர்த்தியும் உள்ளும் புறமும் பரிசுத்த ஸ்வரூபமாக இருக்கவேண்டும் என்று கருதி வெளிப்புறத்தில் பரிசுத்தமான பார்வையுடன் மனதிலும் ஸதா ஆத்ம த்யானம் செய்துகொண்டிருக்கும் ஒரு மூர்த்தி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதோடு ஆத்ம ஞானத்திற்கு சித்த சுத்தியும், மேதையும் அவசியம் என்பதற்காக அவைகளைக் கொடுப்பதே தக்ஷிணமூர்த்தி ஸ்வரூபத்தின் முக்கிய கார்யம் என்று காண்பிப்பதற்காக அந்த குணதிசயத்தையும் இந்த சுலோகத்தில் காண்பித்திருக்கிறது. (3)

(அ) நித்யமான ஸுகத்தை அடைய ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தைத் தாண்டவேண்டும். அதற்கு குருவின் அனுக்ரஹம் இல்லாமல் முடியாது. அந்த வழியில் செல்ல முதலாவது இந்திரியங்களை அடக்குவதே முக்கியம். இந்திரியங்கள் அடங்காவிட்டால் ஸுகம் கிடையாது. அதைக் காட்டுகிறது இந்த சுலோகம்:—

करणानि समानि भवन्ति कदा तरणं नु कथं भववारिनिधेः ।
शरणं मम नास्ति गुरो त्वदृते निरुपाधिकृपाजलधेऽव जवात् ॥

கரணானி ஸமானி பவந்தி கதா
தரணம் நு கதம் பவவாரிநிதே: ।
ஶரணம் மம நாஸ்தி குரோ த்வத்ருதே
நிருபாதிக்ருபாஜலதேऽவ ஜவாத் ॥

**कदा**-எப்பொழுது **करणानि**-(என்னுடைய) இந்திரியங்கள் **समानि भवन्ति**-ஸமநிலையை (ராகத்வேஷங்களில்லாத நிலையை) அடையும்? **भववारिनिधेः**-ஸம்ஸாரமாகிய கடலை **तरणं नु कथं**-தாண்டுதல் எப்படி ஸித்திக்கும்? **गुरो**-குரோ **त्वदृते**-உங்களைத்தவிற வேறு **शरणं**-கதி **मम नास्ति**-எனக்குக் கிடையாது. **निरुपाधिकृपाजलधे**-காரணமற்ற கருணைக் கடலே **जवात्**-சீக்கிரமே **अव**-காப்பாற்றுங்கள்.

**अशान्तस्य कुतः सुखं** என்னும் கீதாவாக்கியப்படி மனச் சாந்தியில்லாதவனுக்கு ஸாதாரண ஸுகமே கிடையாது. ஆத்ம ஸுகானுபவத்தைப்பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை. மனது சாந்தியடையவேண்டுமானால் குருவின் ஆக்ஞையை அவசியம் பரிபாலனம் செய்யவேண்டும். அது தான் பிறவிக்கடலைத்தாண்டுவதற்கு முக்ய ஸாதனம். (4)

(அ) மனம் சாந்தியடைவதற்கு பிரதிபந்தகம் எது என்று தெரிந்தால் அதை விலக்க முயற்சிக்கலாம் என்று கருதி அவற்றைக்காட்டுகிறார்:—

चरितं न मयेषदपीह शुभं भरितं जठरं बहुधाऽघचयात् ।
छुरितं हृदयं नितरां तमसा त्वरितं विमलं तनु तद्गुरुराट् ॥

சரிதம் ந மயேஷதபீஹ ஶுபம்
பரிதம் ஜடரம் பஹுதாऽகசயாத் ।
சுரிதம் ஹ்ருதயம் நிதராம் தமஸா
த்வரிதம் விமலம் தநு தத்குருராட் ॥

**मया**-என்னால் **इह**-இங்கு **ईषदपि**-கொஞ்சங்கூட **शुभं**-நல்ல கர்மா **न चरितं**-செய்யப்படவில்லை. **जठरं**-உதரம் **बहुधा**-அநேகவிதமாக **अघचयात्**-பாபம் சேகரிப்பதால் **भरितं**-போஷிக்கப்பட்டுவருகிறது **नितरां**-மிகவும் **हृदयं**-என் மனது **तमसा**-அக்ஞானமாகிற இருட்டால் **छुरितं**-பூசப்பட்டிருக்கிறது. **तत्**-அதை **गुरुराट्**-குருராஜனே **त्वरितं**-சீக்கிரம் **विमलं**-நிர்மலமாக **तनु**-செய்யுங்கள்.

கொஞ்சமாவது ஸத்கர்மா என்றால் அனுஷ்டிக்கப்படவில்லை. பலவிதமான பாபங்களால் நான் வயிற்றை வளர்த்துவருகிறேன். என் மனது அக்ஞானமாகிற இருட்டால் பலமாகப் பீடிக்கப்பட்டிருக்கிறது. குருராஜனே, சீக்கிரமாக அதை நிர்மலமாகச் செய்யுங்கள்.

அக்ஞானம்தான் மூலகாரணம். அதிலிருந்து ஆசையாகிற அழுக்கு ஏறுகிறது அதனால் கர்மா செய்கிறோம். அந்தக் கர்மா இருவிதம். ஒன்று தர்மம். மற்றொன்று அதர்மம். **धर्मेण पापं अपनुदति** - தர்மத்தினால் பாபம் போக்கடிக்கப்படுகிறது. பாபம் போனால் மனது சுத்தியடைகிறது. மனது சுத்தமானால் ஆசை விலகுகிறது. அப்பொழுது ஆத்ம ஸ்வரூபத்தை குரு உபதேசம் செய்தால் தெளிவாய் ஏற்றுக்கொள்கிறது. பாபம் செய்தால் அழுக்குதான் அதிகமாகிறது. மேலும் மேலும் ஆசைதான் பலப்படுகிறது. குருவின் மூர்த்தியைத் தியானம் செய்தால் மனதிலிருக்கும் பாபமும் ஆசைகளும் ஒழியும். (5)

(அ) குருவின் பாதாரவிந்தத் தியானமே பிறவிக் கடலைத் தாண்ட முக்கிய ஸாதனம். அதற்குப் பிரதிபந்தகம் ஆசை. அந்த ஆசையை ஒழிக்க மேலேகண்டபடி தர்மத்தின் ஆசரணையும், அதர்மத்தை விலக்குதலும் அவசியம் என்று சொல்லப்பட்டது. அப்படியில்லாவிட்டால் என்ன ஏற்படும் என்று அடுத்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது,—

गलितेऽपघने पलितेऽपि शिरस्यलितं मम देशिक नैव हृदा ।
तव पादपयोजयुगे नु कदा निरतं निरतं प्रलभेत मुदम् ॥

களிதேऽபகநே பலிதேऽபி ஶிர-
ஸ்யலிதம் மம தேஶிக நைவ ஹ்ருதா ।
தவ பாதபயோஜயுகே நு கதா
நிரதம் நிரதம் ப்ரலபேத முதம் ॥

**गलितेऽपघने**-அங்கங்கள் தளர்ந்துவிட்டபோதிலும் **पलितेऽपि शिरसि**-(வார்த்தக்யத்தினால்) தலை நரைத்தபோதி

லும் देशिक-குருவே, मम हृदा-என் மனதினால் नैव अलितं-போதும் என்னும் எண்ணம் அடையப்பட்டவே இல்லை. कदानु-எப்பொழுதுதான் तव पादपयोजयुगे-உங்களுடைய பாதாரவிந்தங்களில் (என் மனம்) निरतं निरतं-ஸதா காலமும் ஈடுபட்டு मुदं-ஆனந்தத்தை प्रलभेत-அடையும்?

சரீரம் தளர்ச்சியடைந்தும், தலை நரைத்தும், ஹே குரோ, என் மனதில் ஆசை குறையவில்லை. (அப்படி இருக்க) உங்கள் பாதாரவிந்தத் தியானத்தில் ஸதா ஈடுபட்டு எப்பொழுதுதான் (என் மனம்) ஆனந்தத்தை அடையும்?

ஆசைக்கு இடம் கொடுத்து மனதினாலும் சரீரத்தாலும் உலக விஷயங்களில் பிரவிருத்தித்தால் ஒருக்காலும் குருவை வாஸ்தவமாக சரணமடையமுடியாது.

शरीरपोषणार्थी सन् य आत्मानं दिदृक्षते ।
ग्राहं दारुधिया धृत्वा नदीं तर्तुं स इच्छति ॥

ஶரீரபோஷணார்த்தீ ஸன் ய ஆத்மானம் தித்ருக்ஷதே ।
க்ராஹம் தாருதியா த்ருத்வா நதீம் தர்த்தும் ஸ இச்சதி ॥

சரீரத்தைப் போஷிப்பதிலேயே ஈடுபட்டுக்கொண்டு ஆத்மஞானத்தை ஸம்பாதிக்கப் பிரயத்னம் செய்கிறவனை முதலையைக் கட்டையென்று நினைத்துக்கொண்டு நதியைத் தாண்டப் பிரயத்னம் செய்பவனுக்கு ஸமமாகச் சொல்லலாம் என்று ஆசார்யாள் அருளிய தத்வத்தை இது ஞாபகப்படுத்துகிறது. (6)

(அ) குருவின் கிருபை இருந்தால்தான் ஞானம் ஏற்பட்டு சாசுவதமான ஸுகத்தை அடையமுடியும். அந்த கிருபைக்கு நாம் பாத்திரமாகவேண்டுமானால் எவ்வித மான மனநிலை நமக்கு இருக்கவேண்டுமென்பது இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது:—

करुणार्द्रविलोचन मोचय मां भवबन्धनतो बहुधा व्यथितम् ।
क्वथितं प्रतिघादिकृशानुवशात्करुणारससेचनतोऽव गुरो ॥ ७ ॥

கருணார்த்ரவிலோசன மோசய மாம்
பவபந்தனதோ பஹுதா வ்யதிதம் ।
க்வதிதம் ப்ரதிகாதிக்ருசானுவசாத்
கருணாரஸஸேசனதோ(அ)வ குரோ ॥

करुणार्द्रविलोचन-கருணையினால் ஈரமாயிருக்கிற கண்களை உடையவரே बहुधा-பலவிதமாக भवबन्धनतः-ஸம்ஸாரமாகிற கட்டுகளால் व्यथितं-துன்பமடைந்த मां-என்னை मोचय-விடுவியுங்கள். प्रतिघादिकृशानुवशात्-நெருப்புப்போன்ற கோபம் முதலியவற்றால் क्वथितं-தபிக்கும் என்னை गुरो-ஹே குரோ करुणारससेचनतः-உங்களுடைய கருணையாகிற தண்ணீரைத் தெளித்து अव-காப்பாற்றுங்கள்.

ஸம்ஸாரமாகிற பந்தத்தில் அகப்பட்டுக்கொண்டு பலவித கஷ்டங்களுக்குட்பட்டிருக்கும் என்னிடம் கருணா கடாக்ஷத்தை செலுத்தி, விடுவியுங்கள். நெருப்புப்போன்ற கோபம் முதலியவற்றால் தபிக்கும் என்னை தயையாகிற ரஸத்தைத் தெளித்துக் காப்பாற்றவேண்டும்

ஸம்ஸாரத்தில் ஏற்படுகிற ஸுகம் துக்கம் இரண்டையுமே பந்தமாகக் கருதி, காட்டுத்தீயில் அகப்பட்டவன் எப்படி அதிலிருந்து தப்பிக்க மனோவேகம் கொள்வானோ அவ்விதமாக ராகத்வேஷாதிகளிலிருந்து தப்பிக்கவேண்டும் என்கிற மனோநிலை ஏற்பட்டால் குருகடாக்ஷத்திற்குப் பாத்திரமாகலாம் என்று தெரிகிறது (7)

(அ) ஸம்ஸார தாபத்திலிருந்து விடுவிக்க அதில் கட்டுப்படாத பரமேசுவரர் ஒருவரால்தானே முடியும். அப்படியிருக்க குருவைப் பிரார்த்தித்துஎன்ன பிரயோஜனம் என்று தோன்றக்கூடியதே. அந்த ஸந்தேஹத்தை நிவர்த்திக்க அடுத்த சுலோகத்தில் குருவின் தத்வம் விளக்கப்படுகிறது :—

शिव एव भवानिति मे धिषणा ह्युदपद्यत देशिक चेन्न तथा ।
सकलं जगदप्यवभुत्स्यति ते समतां सकलेष्वपि तत्तु कथम् ॥

ஶிவ ஏவ பவாநிதி மே திஷணா
ஹ்யுதபத்யத தேஶிக சேந்ந ததா ।
ஸகலம் ஜகதப்யவபுத்யதி தே
ஸமதாம் ஸகலேஷ்வபி தத்து கதம் ॥

**देशिक**–குருவே, **भवान्**-நீங்கள், **शिव एव**–ஸாக்ஷாத் சிவன்தான் **इति**–என்ற, **धिषणा**–புத்தி, **मे**–எனக்கு, **उदपद्यत**–ஏற்பட்டுவிட்டது **तथा न चेत्**–அப்படி இல்லையானல், **ते**–உங்களுக்கு, **सकलेष्वपि**–எல்லாப்பதார்த்தங்களிலும், **समतां**–ஸமமாயிருக்கும் தன்மையை, **सकलं जगदपि**–லோகம் பூராவும், **अवबुध्यति** – தெரிந்துகொண்டிருக்கிறதே, **तत्तु कथम्**–அது எப்படி?

நீங்கள் ஸாக்ஷாத் சிவன்தான் என்ற நிச்சயம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. நீங்கள் சிவனாக இல்லாவிட்டால் தங்களுக்கு எல்லாப்பொருள்களிலும் ஸமபுத்தி (ப்ரஹ்ம புத்தி) இருப்பதாக உலகம் முழுவதும் தெரிந்து கொண்டிருக்கிறதே, அது எப்படி?

ஈசுவரனுடைய திருஷ்டி ஸமமானது. வைஷம்யமில்லாதது அதே மாதிரி குருவின் திருஷ்டியும் ஸமமானது. ஆகையால் ஈசுவரனுக்கும் குருவிற்கும் பேதம் கிடையாது என்னும் தத்துவத்தை இங்கு விளக்கிக்காட்டியிருக்கிறது. [1] **शिव एव गुरुस्साक्षाद्गुरुरेव शिवस्स्वयम्। उभयोरन्तरं किंचिन्न द्रष्टव्यं मुमुक्षुभिः॥** சிவன்தான் குரு, குருதான் சிவன். இந்த இரண்டு தத்வங்களுக்குள் பேதம் கொஞ்சம் கூட முமுக்ஷுக்களால் பாவிக்கக்கூடாது என்கிற ஆசார்யபாதாள் வாக்யத்தை இது ஞாபகப்படுத்துகிறது. (8)

(அ) ஸமபாவனை ஏற்படுவதற்கு வைராக்யம்தான் முக்ய ஸாதனம் என்பதைக் கூறுகிறார் :—

**विषयेषु सदा रमते हृदयं विषतुल्यधियं दिश तत्र गुरो।**
**लषितत्वदपाङ्गझरी प्रसरत्वचिरान्मयि बन्धविनाशकरी॥ ९॥**

---

1. ஸர்வ வேதாந்தஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம் சு 257.

விஷயேஷு ஸதா ரமதே ஹ்ருதயம் விஷதுல்யதியம் திஶ
தத்ர குரோ ।
லஷிதத்வதபாங்கஜரீ ப்ரஸரத்வசிரான்மயி பந்தவிநாஶகரீ ॥

**हृदयं**–(என்னுடைய) மனது, **सदा**–எப்பொழுதும், **विषयेषु**–விஷயங்களிலேயே, **रमते**–ஈடுபடுகிறது, **तत्र**–அதில், **विषतुल्यधियं**–விஷத்திற்கு ஸமம் என்ற புத்தியை, **गुरो**–குருவே, **दिश**–கொடுக்க வேண்டும். **बन्धविनाशकरी**–ஸம்ஸாரஸுகமாகிற பந்தத்தைப் போக்கக்கூடிய, **लषितत्वदपाङ्गझरी**–எல்லோராலும் விரும்பப்பட்ட உங்கள் கடைக்கண் பார்வையின் அருவி, **मयि**–என்மேல், **अचिरात्**–சீக்கிரம், **प्रसरतु**–விழட்டும்.

வைராக்யம் தான் முக்ய ஸாதனம். வைராக்யம் என்பது விஷயங்களில் ஸுகம் என்னும் ப்ராந்தி விலகுவதே. [1] **तद्वैराग्यं जुगुप्सा या दर्शनश्रवणादिभिः । देहादिब्रह्मपर्यन्ते ह्यनित्ये भोग्यवस्तुनि ॥** இந்த தேகம் முதல் ப்ரஹ்ம சரீரம் வரையுள்ள அநித்யமான அனுபவிக்கும் விஷயங்களில் நேரில் பார்ப்பதாலும் கேள்வியாலும் ஊஹத்தாலும் ஏற்படுகிற அருவருப்பு என்னும் மனோநிலைதான் வைராக்யம். ஆகையால்தான் விஷம் என்னும் பாவனை ஏற்படவேண்டுமென்று சுட்டிக்காட்டப்பட்டது. அந்த பாவனை இருந்தால் மட்டும் அவைகளிடம் நெருங்கமாட்டோம். (9)

(அ) வைராக்யத்தின் காரணத்தைக் காட்டுகிறார் :—

सदसन्मतिरेव न मेऽस्ति गुरो विरतिं प्रति सा करणं गदिता ।
विरतिः क नु मे विषयाशहृदः कथमाप्नुव एव विमुक्तिपथम् ॥

ஸதஸன்மதிரேவ ந மேऽஸ்தி குரோ விரதிம் ப்ரதி ஸா
கரணம் கதிதா ।
விரதி: க்வ நு மே விஷயாஶஹ்ருத: கதமாப்நுவ ஏவ
விமுக்தி பதம் ॥

1. விவேகசூடாமணி சு 2

**गुरो**-குரோ, **मे**-எனக்கு, **सदसन्मतिरेव**-(விஷயங்களில்) ஸத்யம் இது அஸத்யம் என்னும் ஞானம் கூட, **न**-இல்லையே. **विरतिं प्रति**-வைராக்யத்தைக்குறித்து, **सा**-அந்த ஞானம், **करणं**-ஸாதனமாக, **गदिता**-சொல்லப்பட்டிருக்கிறது (அப்படியிருக்க), **विषयाशहृद**: விஷயங்களில் ஆசை கொண்ட மனமுள்ள, **मे**-எனக்கு, **विरतिः क्व**-வைராக்யம் எங்கே?, **विमुक्तिपथमेव**-முக்தி வழியையே **कथं**-எப்படி **आप्नुवे**-அடைவேன்?

ஹே குரோ, எனக்கு ஸத் எது அஸத் எது என்னும் புத்திகூட இல்லையே! வைராக்யத்திற்கு அதுதான் முதல் காரணமாகச் சொல்லப்படுகிறது. வைராக்யம் என்னிடம் எங்கே? விஷயங்களில் ஆசையை வளர்த்திருக்கிற நான் முக்தி மார்கத்தில் எப்படி அடி எடுத்து வைக்கமுடியும்?

விவேகம் என்பது இருவகை: நித்யாநித்யவிவேகம் ஒன்று; அதாவது இது சாச்வதமானது, இது சாசுவதம் இல்லை என்னும் பதார்த்த விவேகம். இரண்டாவது இது ஸத்யம் இது மித்யை என்னும் விவேகம். முதலாவது சொல்லப்பட்ட விவேகம் வைராக்ய ஸாதனமாகாது. அநித்யமாயிருந்தாலும் அது ஸுக ஸாதனம் என்னும் எண்ணமிருக்கும் வரை அதில் ஆசை நீங்காது. அதைக் காண்பிக்கவே இது ஸத்யம், இது மித்யை என்னும் விவேகம் (**सदसन्मतिः**) இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

(அ) ஸத்குரு கிருபை இருந்தால்தான் சாஸ்திரம் மூலம் தெரிந்து கொண்ட விஷயம் அனுபவத்திற்கு வரும் என்பதைக் காட்டுகிறார் :—

**ब्रुवते निगमा बहुवारमिदं जगदभ्रतलादिसदक्षमिति ।**
**मम तादृशधीः समुदेति कदा वद देशिक मेऽङ्घ्रिजुषे कृपया ॥**

ப்ருவதே நிகமா பஹுவாரமிதம் ஜகதப்ரதலாதிஸத்ருக்ஷமிதி
மம தாத்ருசதீ: ஸமுதேதி கதா வத தேசிக மேங்க்ரிஜுஷே
க்ருபயா ॥

**निगमाः**-வேதங்கள், **बहुवारं**-அநேகம் தடவை, **इदं जगत्**-பிரபஞ்சம், **अभ्रतलादिसदृक्षमिति**-ஆகாசத்தில் தோன்றும் (நீலமான) தளத்திற்கு ஸமானமான பொய்த் தோற்றம் என்று, **ब्रुवते**-சொல்லுகின்றன. **मम**-எனக்கு **तादृशधीः**-அப்படிப்பட்ட விவேகம், **कदा**-எப்பொழுது, **समुदेति**-உண்டாகப்போகிறது? **देशिक**-தேசிக, **कृपया**-தயவு செய்து **अंघ्रिजुषे**-தங்கள் பாதத்தை ஸேவிக்கிற **मे**-எனக்கு, **वद**-சொல்லுங்கள்.

இந்த பிரபஞ்சமானது ஆகாசத்தில் தோன்றும் தளம் மாதிரி பொய்த்தோற்றம் என்று வேதங்கள் பல தடவை முறையிடுகின்றன. எனக்கு அப்படிப்பட்ட விவேகம் எப்பொழுது உண்டாகும்? பிரபோ, உங்கள் பாதத்தை ஸேவிக்கிற எனக்கு தயவு, செய்து சொல்லுங்கள்.

ஆகாசம் என்பது வெட்டவெளி. அங்கு ஒன்றுமில்லே. ஆனாலும் நாம் உயரே பார்க்கும்பொழுது நீலதலமாகத் தெரிகிறது கண்ணுக்குத் தோன்றினாலும் அது வாஸ்தவம் அல்ல, பொய்த்தோற்றம்தான் என்பது நமக்குத் தெரியும். இதுபோல்தான் பிரபஞ்சமும், நமக்குத் தோன்றினாலும் அது வாஸ்தவமல்ல. பொய்தான் என்பதை வேதங்களும் சாஸ்திரங்களும் திருப்பித்திருப்பிக் கூறுகின்றன. வேதங்களேயும் சாஸ்திரங்களேயும் நன்கு கற்று அறிந்தவர்கள்கூட பிரபஞ்சத்தை உண்மை என நினைத்துத்தான் வியவஹாரம் செய்கிறார்கள். பொய்த்தோற்றம் என்ற அனுபவம் வருவதில்லே. இதற்கு குருவின் கிருபை வேணடும். குரு சரணங்களே ஸேவித்து அவர் கிருபையைப் பெற்றவர் களுக்குத்தான் அவருடைய உபதேசத்தால் பிரஹ்மம் ஒன்றே ஸத்யமென்பதையும் பிரபஞ்சம் பொய்என்பதையும் நேரில் தெரிந்துகொள்ளமுடியும். (11)

(அ) உறவினர்களே விட்டு குருவையே சரணடைவதற்குக் காரணம் கூறுகிறார்:—

**जननी जनकः सुतदारमुखाः स्वहिताय लषन्ति सदा मनुजम् ।**
**गुरुरेव लषत्यखिलस्य हितं तदहं तव पादयुगं श्रितवान् ॥ १२ ॥**

ஜனனீ ஜனகஸ்ஸுததாரமுகா: ஸ்வஹிதாய லஷந்தி ஸதா மனுஜம் ।
குருரேவ லஷத்யகிலஸ்ய ஹிதம் ததஹம் தவ பாதயுகம் ச்ரிதவான் ॥

**जननी**-தாயார், **जनकः**-பிதா, **सुतः**-மகன், **दारमुखाः**-பார்யை முதலானவர்கள், **सदा**-எப்பொழுதும், **स्वहिताय**-தங்கள் தங்கள் நன்மையின் பொருட்டே, **मनुजम्**-ஒரு மனிதனை, **लषन्ति**-விரும்புகிறார்கள். (ஆனால்) **गुरुरेव**-குரு ஒருவர்தான், **अखिलस्य हितम्**-எல்லோருடைய க்ஷேமத்தையும், **लषति**-விரும்புகிறார், **तत्**-ஆகையால், **अहं**-நான், **तव पादयुगं**-உங்கள் இரு பாதங்களை, **श्रितवान्**-சரணமடைந்திருக்கிறேன்.

உலகில் ஒருவன் பிறரிடம் ப்ரீதிகொள்வது அவன் மூலம்தான் நன்மைபெறுவதற்காகத்தான் தனிகனிடமுள்ள பணத்தைத் தான் பெறுவதற்காகத்தான் ஏழை பணக்காரனிடம் பிரீதி கொள்கிறான். பணக்காரனின் நன்மைக்காக ஏழை பணக்காரனிடம் பிரியம் கொள்வதில்லை அந்தப் பணக்காரன் ஏழைக்குப் பணம் கொடுக்காவிட்டால் இவனுக்கு பிரீதி இருக்காது. த்வேஷம் ஏற்பட்டுவிடும் இதுபோலவே தாய், தந்தை, தனயன், மனைவி முதலானவர்களிடம் ஒருவன் பிரீதிவைப்பதும் அவர்கள் மூலம் தனக்கு ஸந்தோஷம் ஏற்படுவதற்காகத்தான். அது ஏற்படாவிட்டால் அந்த பிரீதி மறைந்துபோகிறது. பிறரின் நன்மைக்காக பிறரிடம் ப்ரீதி கொள்பவர் ஒருவருமில்லை. இந்த விஷயம் பிருஹதாரண்யக உபநிஷத்தில் '**आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति**' என்று விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் குரு ஒருவர் மட்டும் எப்பொழுதும் பிறரின் நன்மையையே கோருபவர். இவர் ஆத்மஞானம் மூலம் ப்ரஹ்மானந்தத்தைப் பெற்றுவிட்டபடியால் உலகில் இவர்

அடையவேண்டியது ஒன்றுமேயில்லே. குரு சிஷ்யனிடம் வாத்ஸல்யம்கொள்வது சிஷ்யனேக் கடைத்தேற்றுவதற் காகவே தவிற அவனிட மிருந்துதான் நன்மைபெறுவதற்காக அல்ல. ஆகையால்தான் எல்லோரையும் விட்டு குருவையே சரணமடைந்திருக்கிறேன். (12)

(அ) பிறரால் காப்பாற்ற முடியாத நிலேயிலுள்ள வனேயும் குரு காப்பாற்றுவார் என்பதைக் காட்டுகிருர்:—

मदमोहमुखान्तरशत्रुगृहं दमशान्तिविरक्तिसुहृद्रहितम् ।
कथमेनमवेर्भवसागरतः किमसाध्यमिदं वद देशिक ते ॥ १३ ॥

மதமோஹமுகாந்தரஶத்ருக்ருஹம் தமஶாந்தி விரக்தி ஸுஹ்ருத்ரஹிதம் I
கதமேனமவேர்பவஸாகரத: கிமஸாத்யமிதம் வத தேஶிக தே

मदमोहमुखान्तरशत्रुगृहं-மதம், மோஹம் முதலான உள்ளேயுள்ள சத்ருக்களின் இருப்பிடமாயும், दमशान्तिविरक्तिसुहृद्रहितम्-தமம் சமம் வைராக்யம் ஆகிய ஆப்தர்களற்ற வனுயும் இருக்கும், एनम्-இந்த என்னே, भवसागरतः-ஸம்ஸார மாகிற ஸாகரத்திலிருந்து, कथं-எப்படி, अवेः-காப்பாற்று வீர்கள். देशिक-குருவே, ते-உங்களுக்கு, इदं-இது, किं असाध्यं-முடியாத விஷயமா ? वद-சொல்லுங்கள்.

ஒரு பிரபலமான சத்ருவிடம் அகப்பட்டுக்கொண்டால் மற்ருெரு ஸஹாயத்தைத் தேடி தன்னேக் காப்பாற்றிக் கொள்வது லோக ரீதியில் ஸஹஜம். அப்படிப்பட்ட லௌகிக ஸகாயமில்லாதவர்களுக்கு தெய்வம்தான் துணே என்று சொல்வதுண்டு. ஈசுவரன் எப்படி ஸர்வ சக்திமாஞே அதேமாதிரி குருவும் ஸர்வசக்தியுள்ளவர் என்னும் தத்வத்தை விளக்கி அவரை பிரார்த்திக்கிருர். ஈசுவரன் அனுதரக்ஷகன் குருவும் அனுதரக்ஷகர்தான் ஈசுவரன்போல் குருவின் சக்திக்கும் எல்லே கிடையாது. (13)

(அ) குரு செய்யும் நன்மைகளேக் கூறுகிருர் :—

धुनुषेऽघचयं पदनन्तृनृणां तनुषे भविकं सकृदीक्षणतः ।
जनुषे सदसच्च यथा न भवेन्मम कर्म तथा कुरु देशिकराट् ॥

துனுஷேऽகசயம் பதநந்த்ரு ந்ருணும் தனுஷே பவிகம்
ஸக்ருதீக்ஷணத: ।
ஜநுஷே ஸதஸச்ச யதா ந பவேன் மம கர்ம ததா
குரு தேசிகராட் ॥

**देशिकराट्**–குருராஜரே, **सकृदीक्षणतः**–ஒருமுறை பார்ப்பதனுலேயே **पदनन्तृनृणाम्**–(உங்கள்) பாதங்களை வணங்கும் மனிதர்களுடைய **अघचयं**–பாபக்குவியலை **धुनुषे**–துலேக்கிறீர் **भविकं**–அப்யுதயத்தை, **तनुषे**–உண்டுபண்ணுகிறீர். **सदसच्च**-நல்லதும் கெட்டதுமான, **मम कर्म**–என்னுடைய கர்மாவானது, **यथा**–எவ்விதம், **जनुषे**–பிறப்பின் பொருட்டு, **न भवेत्**–ஆகாதோ, **तथा**–அவ்விதம், **कुरु**–செய்யுங்கள்.

குருவானவர் தன் பாதத்தில் விழுந்து தன்னை சரணம் அடைபவர்களிடம் தன் கடாக்ஷத்தைச் செலுத்துகிருர். ஒருதடவை நம்மீது குருகடாக்ஷம் விழுவதாலேயே நம் பாபமெல்லாம் விலகி ஸகல மங்களங்களும் ஏற்படுகின்றன. இவ்வித சக்திவாய்ந்த தங்களிடம் நான் வேண்டுவது இதுதான். என்னிடம் நல்ல கர்மாக்களும், (புண்யமும்) கெட்ட கர்மாக்களும் (பாபமும்) குவிந்திருக்கின்றன. இவற்றில் புண்யம் நற்பிறவியையும், பாபம் கெட்ட பிறவியையும் கொடுக்கத் தயாராக இருக்கின்றன. நன்கு விசாரித்துப் பார்த்தால் பாபத்தால் ஏற்படும் பிறவிபோல் புண்யத்தால் ஏற்படும் பிறவியும் துன்பம்தான் என்பது நன்கு தெரியவரும். ஆகையால் எனக்கு ஒரு பிறவியுமே வேண்டாம் ஸர்வ வல்லமையுள்ள தாங்கள் எனக்குப் பிறவி ஏற்படாதபடி அனுக்ரஹம் செய்யவேண்டும். என் பாபங்களைத் துலேத்து சித்த சுத்தியை உண்டுபண்ணி ஞானத்தையும் அருளினுல் எல்லாக் கர்மாக்களும் அழிந்து விடும். பிறகு பிறவியே ஏற்படாது. இவ்விதம் அனுக்ரஹம் செய்யத் தங்களால்தான் முடியும். (14)

समवाप्य सुदुर्लभविप्रजनुर्यतितामपि को नु जनो मदृते ।
व्यवहारवशत्वमुपैति गुरो गतिरेव न मे तव पादमृते ॥ १५ ॥

ஸமவாப்ய ஸுதுர்லப விப்ர ஜனுர் யதிதாம பி
கோ நு ஜநோ மத்ருதே ।
வ்யவஹார வஶத்வமுபைதி குரோ கதிரேவ ந மே
தவ பாதம்ருதே ॥

गुरो-ஹே குரோ! सुदुर्लभविप्रजनुः-மிகவும் சிரமஸாத்ய மான பிராமணகுலத்தில் ஜன்மாவையும், यतितामपि-(அதற்கும் மேல்) ஸன்யாஸாசிரமத்தையும், समवाप्य-பெற்று, मदृते-என்னைத்தவிற, வேறு को नु जनः-எந்த மனிதன் தான், व्यवहारवशत्वमुपैति-லௌகிக வியவஹாரங் களுக்குக் கட்டுப்பட்டிருக்கும் தன்மையை அடைவான்? (ஆகையால்), मे-எனக்கு, तव पादमृते-உங்கள் பாதமாகிற ஆசிரயத்தைத் தவிற வேறு, गतिरेव-சரணமடையக் கூடியதே, न-கிடையாது.

ஞானம் ஸம்பாதிக்கும் மார்க்கத்தில் அநேக படிகளிருக் கின்றன. அவைகளில் ஏறித்தான் ஆகவேணும். முதலா வது நல்ல வேதவித்தான குலத்தில் ப்ராஹ்மண ஜன்மாவை சம்பாதிக்கவேண்டும. அது சிரமஸாத்யம். 'जन्तूनां नरजन्म दुर्लभमतः पुंस्त्वं ततो विप्रता' என்னும் பகவத்பாதாள் வாக்கின்படி ப்ராஹ்மண ஜன்மா துர்லபம். அது மட்டும் போதாது. संन्यस्य श्रवणं कुर्यात् என்ற விதிப்படி ஞான பலனைக்கொடுக்கக் கூடிய சிரவணம் ஸன்யாஸம் செய்து கொண்டால்தான் ஏற்படுகிறது. அந்த ஸன்யாஸிக்கும் ஞானம் சித்திக்க வேண்டுமானால் 'आसुप्तेः आमृतेः कालं नयेद्वेदान्तचिन्तया' என்றபடி லௌகிக விஷயங்களுக்கு இடங்கொடாமல் எப்பொழுதும் வேதாந்த சிரவணம் செய்ய வேண்டும். இந்த விஷயத்தையே இந்த சுலோகத்தில் தெளிவுபடுத்தி இருக்கிறார். (15)

(அ) தன்னை அண்டியவர்களைக் கடைத்தேற்றி வைப்பதில் குருவுக்குச் சிறிதும் சிரமம் கிடையாது என்பதைக் கூறுகிறார் :—

**उददीधर एव बहून्मनुजान्कृपया भवसागरमध्यगतान् ।**
**किमयं तव भारति लोकगुरो न हि भूभृदहेरणुरस्ति भरः ॥**

உததீதர ஏவ பஹூன் மனுஜான்
க்ருபயா பவஸாகர மத்யகதான் ।
கிமயம் தவ பாரதி லோககுரோ
ந ஹி பூப்ருதஹேரணுரஸ்தி பர: ॥

**भवसागरमध्यगतान्** - ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தின் நடுவிலுள்ள, **बहून्मनुजान्**-அநேக மனிதர்களை, **कृपया**-கருணையினால், **उददीधर एव**-நீங்கள் கைதூக்கிவிட்டிருக்கிறீர். (அப்படியிருக்க), **लोकगुरो**-லோகத்திற்கெல்லாம் குருவாயிருப்பவரே, **तव**-உங்களுக்கு, **किमयं भारति** - இது ஒரு பளுவாக இருக்குமா? **भूभृदहेः**-பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கும் ஆதிசேஷனுக்கு, **अणुः**-மிகச் சிறிய வஸ்து, **न हि भरः अस्ति**-பாரமாக இருக்காதல்லவா!

தன்னை ஆசிரயித்தவர்களைக் கைதூக்கிவிடுவதே ஆசார்ய புருஷனுக்கு லக்ஷணமும் ஸ்வபாவமுமாகும். இது அவர்களுக்கு மிகவும் எளிதான காரியம். இதில் அவர்களுக்குச் சிறிதும் சிரமம் கிடையாது இதுவரை எத்தனையோ மனிதர்களைத் தாங்கள் கைதூக்கிவிட்டிருக்கிறீர்கள். பூமி முழுவதையும் தாங்குவதே ஆதிசேஷனின் ஸ்வபாவம். பூமியிலுள்ள ஒரு சிறிய பொருள் ஆதிசேஷனுக்குப் பாரமாகுமா? (16)

(அ) குரு சிஷ்யனைக் கடைத்தேறச் செய்யும் பிரகாரத்தைக் கூறுகிறார் :—

**दमुना यमुनाजनकश्च विधुर्मिलिताः शतशोऽपि न शक्नुवते ।**
**यदपाकरणे तदचित्तिमिरं त्वमपाकुरुषे वचसैव गुरो ॥ १७ ॥**

தமுநா யமுநா ஜநகச்ச விதுர்
மிளிதா: ஶதஶோऽபி ந ஶக்னுவதே ।
யதபாகரணே ததசித்திமிரம்
த்வமபாகுருஷே வசஸைவ குரோ ॥

**दमुनाः**- அக்னியும், **यमुनाजनकः**-யமுனையின் பிதாவான சூர்யனும், **विधुश्च**-சந்திரனும், **शतशो मिलिता अपि**-நூற்றுக் கணக்காக ஒன்று சேர்ந்தாலும், **यदपाकरणे**-எந்த இருட்டை போக்கடிப்பதில், **न शक्नुवते**-சக்தியற்றவர்களாக இருக்கின்றனரோ, **तदचित्तिमिरम्**- அந்த ஜடமான அக்ஞான இருளை, **गुरो**-ஹே குரோ, **त्वं**-நீங்கள், **वचसैव**-உபதேச வாக்கினாலேயே, **अपाकुरुषे**-விலக்கிவிடுகிறீர்கள்.

வெளியிலுள்ள இருட்டைப் போக்கும் சூரியன், சந்திரன் அக்னி இம் மூவரும் மிகுந்த பிரகாசமுள்ளவர்கள். நூற்றுக் கணக்கான சூரியர்களும், சந்திரர்களும், அக்னிகளும் ஏக காலத்தில் தோன்றி பிரகாசித்தாலும்கூட மனதிலுள்ள அக்ஞான இருளைப் போக்கமுடியாது. இந்த அக்ஞானத்தை குரு தன் பேச்சினாலேயே (உபதேசத்தினாலேயே) போக்கடித்து விடுகிறார். குரு சப்தத்தின் பொருளே அக்ஞானத்தைப் போக்குபவர் என்பதுதான். அக்ஞானத்தைப் போக்குவதன் மூலம் நம்மைக் கரையேற்றுகிறார். (17)

(அ) குருவைச் சரணமடைந்தால் அவர் எந்த ஸாதனங்களைக்கொண்டு ஸாதகனுக்கு ஞானத்தையூட்டி அக்ஞானத்தைப் போக்கிக் கரையேற்றுகிறார் என்பதைக் காட்டுகிறார் :—

गुरुशङ्करनिर्मितभाष्यसुधासरिदीशनिमज्जनतृप्तमिमम् ।
प्रविधाय गुरो भववारिनिधेर्लघु तारय मां करुणार्द्रदृशा ॥

குரு ஶங்கர நிர்மித பாஷ்ய ஸுதா
ஸரிதீஶ நிமஜ்ஜன த்ருப்தமிமம் ।
ப்ரவிதாய குரோ பவ வாரிநிதேர்
லகு தாரய மாம் கருணார்த்ர த்ருஶா ॥

**इमम्**—இந்த ஸாதகனை, **गुरुशंकरनिर्मितभाष्यसुधासरिदीश-निमज्जनतृप्तम्** - சங்கரகுருவால் அருளப்பட்டிருக்கிற பாஷ்ய மாகிற அமிருத பூர்ணமான ஸமுத்திரத்தில் நன்ருக மூழ்குவதால் திருப்தியடைந்தவஞக, **प्रविधाय** – செய்து, **भववारिनिधेः**—ஸம்ஸாரமாகிற சமுத்திரத்திலிருந்து, **लघु**—எளிதில், **मां**—என்னை, **गुरो**—ஹே குரோ, **करुणार्द्रदृशा**—கருணை ரஸத்தால் நனைந்த பார்வையால், **तारय**—கடைத்தேற் வையுங்கள். (18)

ஞாநப்யாஸத்திற்கு முக்கியமான ஸாதனம் பகவத் பாதாள் அருளிய உபநிஷத் முதலியவைகளின் பாஷ்யங் கள். அவைகளின் மூலம் தான் ஒருவன் ஜனன மரண ரூப மான ஸம்ஸாரத்திலிருந்து காப்பாற்றப்பட்டு அமிருதமான சாசுவத இன்பத்தையடையக்கூடும். ஆனல் அந்த பாஷ்யங்களின் தாத்பர்யம் பூர்ணமாகவும் தெளிவாகவும் ஒருவன் மனதில் பிரகாசிக்கவேணுமாஞல் குரு கிருபை அவசியம். அதற்குக் குரு பக்தி முக்ய ஸாதனம். (18)

(அ) குருகடாக்ஷத்தின் பெருமைகளை வர்ணிக்கிருர்:-

**पदनम्रजनौघपुमर्थकरी प्रबलाघसमुद्रनिमग्नतरी ।**
**मयि देशिक ते श्रुतिमूर्धचरी प्रसरेन्नु कदा सुकटाक्षझरी ॥**

பத நம்ர ஜநௌக புமர்த்தகரீ
ப்ரபலாக ஸமுத்ர நிமக்ன தரீ ।
மயி தேஶிக தே ச்ருதி மூர்த்தசரீ
ப்ரஸரேத் நு கதா ஸுகடாக்ஷ ஜரீ ॥

**देशिक**-குருவே, **पदनम्रजनौघपुमर्थकरी**-தங்கள் பாதத்தை வணங்குகின்ற ஜனக் கூட்டங்களுக்கு புருஷார்த்தங்களைக் கொடுக்கக்கூடியதும், **प्रबलाघसमुद्रनिमग्नतरी**—வலிமையுள்ள பாபமாகிற ஸமுத்திரத்தில் மூழ்கினவர்களுக்கு ஓடமாக விளங்குகிறதும், **श्रुतिमूर्धचरी**—வேதங்களின் சிரஸ்ஸான உபநிஷத்துக்களில் ஸஞ்சாரம் செய்கிறதுமான, **ते**—உங்களுடைய, **सुकटाक्षझरी**—கடாக்ஷமாகிற அருவி, **कदा**—எப்பொழுதுதான், **मयि**—என்மேல், **प्रसरेन्नु**—பிரஸரிக்குமோ.

ஆத்ம ஞான நிஷ்டனுண குருவின் கிருபா கடாக்ஷம் விழுந்தால் எதுதான் கிடைக்காது? தர்மம் அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்குவித புருஷார்த்தங்களும் ஸித்திக்கும் எல்லாப்பாபங்களும் விலகிவிடும், ஞானத்தைக் கொடுக்கும். (19)

(அ) இவ்வளவு மஹிமை உள்ள குருகிருபையைப் பெறுவதுதான் மிகவும் அரிது என்று கூறுகிருர்:—

बहुजन्मशतार्जितपुण्यवशाद्भवदीयदया समवापि मया ।
भवबन्धनतो न बिभेमि गुरो करणीयमपीह न मेऽस्त्यपरम् ॥

பஹு ஜன்ம ஶதார்ஜித புண்யவஶாத்
பவதீய தயா ஸமவாபி மயா ।
பவ பந்தனதோ ந பிபேமி குரோ
கரணீயமபீஹ ந மே஽ஸ்த்யபரம் ॥

**बहुजन्मसमार्जितपुण्यवशात्** - அநேக ஜன்மாக்களில் சேகரிக்கப்பட்ட புண்ய நிமித்தத்தால், **भवदीयदया**- உங்களுடைய தயை, **मया**-என்னுல், **समवापि**-அடையப் பட்டிருக்கிறது. **गुरो**-ஹே குரோ! **भवबन्धनतः**-ஸம்ஸார மாகிற பந்தத்திலிருந்து, **न बिभेमि**-நான் பயமடையவில்லை. **इह**-இங்கே, **मे**-எனக்கு, **करणीयमपि**- செய்யக்கூடியதான காரியமும், **अपरम्** - வேறு, **नास्ति**-கிடையாது.

குருகிருபைக்குப் பாத்திரமாகி ஞானத்தைப்பெற்று விட்டால் கர்மபந்தத்திலிருந்து விடுவிக்கப்பட்டவனுகிருன். கர்மாவிற்குக் காரணம் காமம், அதாவது ஆசை. காமத்திற்குக் காரணம் அவித்யை. இந்த பரம்பரையில் மூல காரணமான அவித்யை நசித்துப்போனுல் அதன் கார்யங்களாகிற காமமாவது, கர்மாவாவது கிடையாது என்பது தாத்பர்யம். இம்மஹிமையுள்ள குரு ஸம்ஸர்க்கம் கிடைப்பது அரிது. அதை வீணுக்கக்கூடாது என்று நமக்கு எடுத்துக்காட்டுகிருர். (20)

(அ) குருவின் பெருமைகளை மறுபடியும் கூறி வணங்கி இந்த ஸ்தோத்ரத்தை உபஸம்ஹாரம் செய்கிருர் :-

स्वरवेऽघगिरेर्भजतां दिविषत्तरवे प्रतिभाजितगोगुरवे ।
पुरवैरिपदाब्जनिविष्टहृदे करवै प्रणतिं जगतीगुरवे ॥ २१ ॥

ஸ்வரவேzக கிரேர் பஜதாம் திவிஷத்
தரவே ப்ரதிபா ஜித கோகுரவே ।
புரவைரி பதாப்ஜ நிவிஷ்டஹ்ருதே
கரவை ப்ரணதிம் ஜகதீகுரவே ॥

**अघगिरेः**–பாபமாகிற மலேக்கு, **स्वरवे**–வஜ்ராயுதமாயும் **भजतां**-சரணமடைந்தவர்களுக்கு, **दिविषत्तरवे**–கல்பக விருக்ஷமாயும், **प्रतिभाजितगोगुरवे**–மேதையில் பிருஹஸ்பதியைக்கூட ஜயித்தவரும், **पुरवैरिपदाब्जनिविष्टहृदे**–திரிபுர ஸம்ஹாரியான பகவானின் பாதாரவிந்தத்தில் ஈடுபட்ட மனதுள்ளவருமான, **जगतीगुरवे**–ஜகத்குருவிற்கு, **प्रणतिं करवै**-நமஸ்காரம் செய்கிறேன்.

ஞானமார்க்கத்திற்கு முதல் பிரதிபந்தகம் பாபம். அனுதிகாலமாக ஒவ்வொரு பிறவியிலும் பாபங்களை மேலும் மேலும் செய்துகொண்டே வருவதால் அவை நம்மிடம் மலே மலேயாகக் குவிந்துள்ளன. வஜ்ராயுதம் சிறகை வெட்டி மலேகளை வீழ்த்தியதுபோல குருவும் நம்மிடமுள்ள பாபங்களின் வலுவைப் போக்கிவிடுகிறுர். ஞானனந்தத்தையே கொடுக்கும் குருநாதர் அதற்குக் கீழ்ப்பட்ட விஷயானந்தங்களையும் தருகிறுர். “புரவைரி” என்று சொன்னதால், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி இம்மூன்று அவஸ்தைகளையும் தாண்டி கேவலம் துரீயமான ஆத்மபதார்த்தத்தில் நிஷ்டரான ஸ்வரூபம் என்று சொல்லப்பட்டதாக எடுத்துக் கொள்ளலாம். அவர்தான் ஜகத்குரு சப்தத்திற்கு முக்யார்த்தம்.

இவ்வித உத்கிருஷ்டமான தத்வத்தை அனுஸந்தானம் செய்வதால் ஸகலவிதமான சிரேயஸ்ஸும் கிடைக்கும் என்பதில் ஸந்தேஹம் கிடையாது. (21)

தோடக ஸ்தோத்ரம் முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ पादावलम्बनस्तुतिः ॥

## ஸ்ரீ பாதாவலம்பன ஸ்

[ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை அடைவதே மோக்ஷ மெனப்படும். அது ஒவ்வொரு ஜீவனுக்கும் ஸ்வரூப ஸித்த மான நிலை அதன் ஸ்வரூபம் ஸத், சித், ஆனந்தம் எனப்படும். அதைத் தெரிந்துகொள்ளவொட்டாமல் எல்லோரையும் தன் வசத்திற்கடிமைப்படுத்தி வைத்திருப்பதையே மாயை என்றும் அவித்யை என்றும், பிருகிருதி என்றும் பலவிதமாகச் சொல் வார்கள். அதை நிவிருத்தி செய்துகொள்ளும் மார்க்கத்தைக் காட்டி நம்மை உத்தாரணம் செய்துவைக்கும் தத்வமே "குரு" என்னும் பதத்தால் சொல்லப்படுகிறது. மனதிலுள்ள அந்தகாரமாகிற அவித்யையை விலக்கி ஸ்வரூபபூதமான ஆத்ம தத்வத்தைப் பிரகாசப்படுத்துவதால் அவருக்கு "குரு" என்னும் பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் மோக்ஷ மார்க்கத்தில் பிரவிருத்திப்பவர்களுக்கு குருபக்தி அவசிய மானது. சிருங்ககிரி ஸ்ரீசாரதாபீடத்தை அலங்கரித்து ஜீவன் முக்தராக விளங்கிவந்த நமது ஜகத்குரு அருளிய பாதா வலம்பன ஸ்துதி அவ்வித குருபக்தியை ஊட்டக்கூடியது]

(அ) பந்தத்திற்குக்காரணம் மனது. அந்த மனது எந்த தத்வத்தை அவலம்பித்தால் துக்க நிவிருத்தி ஏற்பட்டு ஸதா ஆனந்த ஸ்வரூபத்தில் லயித்து இருக்கக்கூடியது என்பதை முதல் சுலோகத்தில் ஸ்ரீமதாசார்யாள் உபதேசிக் கிறார்:—

स्थितेऽनुकम्पामकरन्दपूर्णे जगद्गुरोः पादसहस्रपत्रे ।
किमन्यतो धावसि चित्तभृङ्ग प्रयाहि तत्रैव रमस्व नित्यम् ॥

ஸ்திதேऽநுகம்பா மகரந்த பூர்ணே
ஜகத்குரோ: பாத ஸஹஸ்ர பத்ரே ।
கிமந்யதோ தாவஸி சித்த ப்ருங்க
ப்ரயாஹி தத்ரைவ ரமஸ்வ நித்யம் ॥

**अनुकम्पामकरन्दपूर्णे**-தயையாகிற மகரந்தம் நிறைந்திருக்கிற, **जगद्गुरोः**-ஜகத்குருவினுடைய, **पादसहस्रपत्रे**-பாதமாகிற தாமரைப்புஷ்பம், **स्थिते**-இருக்கும்போது, **चित्तभृङ्ग**-ஹே மனதாகிறவண்டே, **अन्यतः**-அன்யபதார்த்தங்களிடம், **किं धावसि**-ஏன் ஓடுகிருய், **तत्रैव**-அதனிடமே, **प्रयाहि**-செல்வாய், **नित्यं**-சாசுவதமாக, **रमस्व**-ஆனந்தத்தை அடைவாயாக.

வண்டு வாசனையினுல் இழுக்கப்படுகிறது என்பது பிரஸித்தம். நல்ல வாசனையுடன் பரிமளிக்கும் மகரந்தம் தாமரையில் இருப்பதால் வண்டு அதையடைந்து ஆனந்தத்தை அனுபவிக்கிறது. அதேபோல் நிரதிசயமான ஸுகத்தையே மனிதன் எப்பொழுதும் தேடுகிருன். அதை அடையும் மார்க்கத்தைத் தெரிந்து கைக்கொள்ளாததாலேயே அவன் அதை அடைகிறதில்லை. அந்த மார்க்கத்தைக் காண்பிக்கக்கூடியவர் நிரதிசய ஆனந்தரூபியான பகவான் ஒருவர்தான். அவரே குருமூர்த்தியாக பிரபஞ்சத்தில் தோன்றி மார்க்கத்தை உபதேசிப்பதால் அவரை சரணமடைவது தான் நலம் என்று உபதேசித்து மனதை அவரிடம் ஈடுபடும்படி செய்ய நாம் முயற்சி எடுக்க வேண்டும். (1)

(அ) குருவைச் சரணடைவதற்கு முன் அவன் கைக்கொள்ள வேண்டிய ஸாதனங்களை குருவர்ணனை மூலம் காட்டுகிருர் :—

**योगिवर्य यमिराजनताङ्घ्रे भोगिराजनवनीयचरित्र ।**
**रागिभिन्नमनुजाप्यपदाब्ज देशिकेन्द्र मम देह्यवलम्बम् ॥ २ ॥**

யோகி வர்ய யமிராஜ நதாங்க்ரே
போகி ராஜ நவநீய சரித்ர ।
ராகி பிந்ந மநுஜாப்ய பதாப்ஜ
தேசிகேந்த்ர மம தே[illegible]யவலம்பம் ॥

**योगिवर्य**-யோகிகளுக்குள் சிரேஷ்டரே, **यमिराजनताङ्घ्रे**-யோகி சக்ரவர்த்திகளால் வணங்கப்பட்ட பாதங்களை

உடையவரே, भोगिराजनवनीयचरित्र-ஆதிசேஷனால் வர்ணிக்கத்தகுந்த மாஹாத்ம்யத்தை உடையவரே, रागिभिन्नमनुजाप्य पदाब्ज-ராகத்வேஷங்களை விலக்கின மனிதர்களால் அடையக்கூடிய பாதாரவிந்தத்தை உடையவரே, देशिकेन्द्र-குருசிரேஷ்டரே, मम-எனக்கு, अवलम्बम् – (பாதத்தை) ஆச்ரயமாக देहि-கொடுங்கள்.

ஸம்போதனங்களில் மனதை அடக்கியிருக்கும் தன்மை உபதேசிக்கப்பட்டிருக்கிறது. யோகம் என்பது மனோ விருத்திகளை நிரோதம் செய்வது. அவ்விதம் செய்திருப்பவர்களே யோகி எனப்படுவர். மனது அடக்கப்பட்டால் விஷய சுக துக்கங்கள் விலகிவிடுகிறது. ஸ்வரூப பூதமான ஆனந்தம் பிரகாசிக்கிறது. ஆனால் அவ்விதம் அடக்குவதற்கு முக்கிய ஸாதனம் வைராக்யம் என்பதைத்தெளிவு படுத்துவதற்காக விஷய வைராக்யம் உள்ளவர்களால் மட்டும் குருவின் பூர்ணமான அனுக்ரஹத்தை அடைய முடியும் என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் பற்றற்று மனதை அடக்கின யோகியின் மாஹாத்ம்யம் ஒருவராலும் எடுத்துக்கூற முடியாது. நிரதிசயமான தத்வத்தை ஆதிசேஷனால்கூட வர்ணிக்கமுடியாது. ஆகையால் நிரதிசய ஸுகஸாதனங்களைக் காண்பிவித்து நம்மைக் கைதூக்கி விடக்கூடிய குருவை சரணமடைய வேண்டுமானால் வைராக்யமும், மனோநிக்ரஹமும் அவசியம் என்று உபதேசிக்கப்படுகிறது. (2)

(அ) குருகிருபையால் கிடைக்கும் முக்தி தேவாமிருதத்தைவிடச் சிறந்தது என்று காட்டுகிறார் :—

यद्वचोमधुरिमापजितेमं लोकमेव विससर्ज सुधाऽपि ।
पादपद्मनतमुक्तिद स त्वं देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥

யத்வசோ மதுரிமாபஜிதேமம்
லோகமேவ விஸஸர்ஜ ஸுதாऽபி ।
பாதபத்ம நத முக்தித ஸ த்வம்
தேஹி தேசிக மமாங்க்ர்யவலம்பம் ॥

**सुधा अपि**-அமிருதமும் கூட, **यद्वचोमधुरिमापजिता**-எவருடைய வாக்கின் மாதுர்யத்தால் ஜயிக்கப்பட்டு, **इमं लोकमेव**-இந்த பூலோகத்தையே, **चिसस्रज**-விட்டுவிட்டதோ, **पादपद्मनतमुक्तिद** - பாத கமலத்தை வணங்கியவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிற, **देशिक**-ஹே குரோ! **स त्वं**-அந்த தாங்கள், **मम**-எனக்கு, **अङ्घ्रयवलम्बम्**-தங்கள் பாதத்தை ஆச்ரயமாக, **देहि**-கொடுங்கள்.

உலகில் எந்த விஷயத்திலும் தனக்குப்போட்டியாகத் தன்னைவிடச் சிறந்தவனுக ஒருவன் வந்துவிட்டால் அவன் மூலம் ஏற்படும் அவமானத்தைத் தாங்காது அவனிருக்கும் இடத்தையே விட்டு வேறிடம் செல்வது உலக இயல்பு. இந்த ரீதியில் தன்னைவிடச் சிறந்த மாதுர்ய ரஸமுள்ளவன் வேறு ஒருவனுமில்லை, தானே உயர்ந்தவன் என்ற கர்வம் அமிருதத்திற்கு இருந்தது. தன்னைவிடச் சிறந்த ஆசார்யாளின் வாங்மாதுர்யத்தைக்கண்டதும் அமிருதம் வெட்கிப் போய் இந்தலோகத்திலேயே இருக்க மனமில்லாமல் தேவ லோகத்துக்கே போய்விட்டது. தனக்குப்போட்டியான ஆசார்யவாங்மாதுர்யம் பூலோகத்தில் இருப்பதுதான் அமிருதம் பூலோகத்திற்கு வராமல் தேவலோகத்திலேயே நிலைத்திருப்பதற்குக் காரணம். ஆசார்யாளுடைய உபதேச வசனத்தை சிரவணம் செய்பவர்களுக்கு அமிருதபானத்தால் தேவர்களுக்கு ஏற்படும் ஆனந்தத்தைவிட மேலான ஆனந்தம் உண்டாகிறது. இது மட்டுமல்ல. உபதேசம் மூலம் ஞானத்தையருளி நிரதிசயமான சாச்வதமான மோக்ஷானந்தத்தையும் அளிக்கிறுர் குருநாதர். (3)

(அ) விரக்தர்களுக்கு முக்தியைக் கொடுத்தாலும் ஸகாமர்களுக்கு அவரவர் வேண்டும்பொருளைக் கொடுப்பார் என்பதைக் காட்டுகிறுர் :—

दातृभावमवगम्य महान्तं कर्ण आप जनकर्णपथं ते ।
दारिताखिलदरिद्रजनार्तें देहि देशिक ममाङ्घ्रयवलम्बम् ॥

தாத்ருபாவம் அவகம்ய மஹாந்தம் கர்ண ஆப
ஜநகர்ணபதம் தே ।
தாரிதாகில தரித்ர ஜநார்த்தே தேஹி தேசிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

**दारिताखिलदरिद्रजनार्ते** - எல்லா ஏழை ஜனங்களுடைய துன்பங்களைப் போக்குகின்ற, **देशिक** - குருவே, **ते** - உங்களுடைய, **महान्तम्**-சிறந்த, **दातृभावम्**-கொடுக்கும் தன்மையை, **अवगम्य**-தெரிந்து கொண்டு, **कर्णः**-(கொடையில் பெயர்போன) கர்ணன், **जनकर्णपथं**-ஜனங்களின் காதுகளால் கேள்விப்படுகிற நிலையை, **आप**-அடைந்துவிட்டான். **मम**-எனக்கு, **अङ्घ्र्यवलम्बं**-உங்கள் பாதங்களை ஆச்ரயமாக, **देहि**-கொடுங்கள்.

குருவின் வாங்மாதுர்யத்தைக் கண்டு அமிருதம் இவ்வுலகில் இருக்கப்பிடிக்காமல் தேவலோகம் போய்விட்டதை முன் சுலோகத்தில் கூறினர். இந்த சுலோகத்தில் குருவின் ஔதார்யத்தை வர்ணிக்கிருர். தன்னிடம் வருபவர் யார் எந்தப்பொருளைக் கேட்டாலும் உடனே கொடுத்துவிடுவார். உலகில் கர்ணனைத்தான் கொடையில் சிறந்தவனுகக் கூறுவது வழக்கம். ஆசார்யாளோ கர்ணனைக் காட்டிலும் மேலானவர். தன்னைவிடச் சிறந்த கொடையாளியைக் கண்டதும் கர்ணன் இங்கு இருக்கப் பிடிக்காமல் மறைந்து விட்டான். இவ்வுலகைவிட்டுச் சென்றவனை நாம் கண்ணுல் பார்க்கமுடியாது. அவனைப்பற்றிப் பிறர் கூறுவதை நாம் காதால் கேட்கலாம். அந்த நிலையை அதாவது கண்ணுல் பாக்கமுடியாமல் காதால் மட்டும் கேள்விப்படும் நிலையைக் கர்ணன் அடைந்துவிட்டான். இதற்குக் காரணம் ஆசார்யாளுடைய ஔதார்யம்தான். ஏழை ஜனங்கள் யாவருக்கும் அவர் வேண்டும் பொருள்களைக் கொடுத்து அவர்களின் துன்பங்களைப் போக்குகிருர் குருநாதர்.

இந்த ஸ்துதிக்கு லக்ஷ்யமான ஸ்ரீ நரஸிம்ம பாரதியின் யாத்ரா மார்க்கத்தில் மதுரையில் நடந்த ஸம்பவம் இது.

ஒரு ஏழை பிராஹ்மணர் தன் பெண் விவாஹத்திற்காக ஸந்நிதானத்திடம் யாசித்தார். ஸந்நிதானம் ஸ்ரீமட அதிகாரியிடம் குறிப்பிட்ட திரவியத்தைக் கொடுக்கும்படி ஆக்ஞாபித்திருந்தார். ஆனால் அந்த அதிகாரி அவ்வளவு கொடுக்கவில்லை. தீர்த்தப்ரஸாதம் கொடுக்கும்பொழுது அந்தப்ராஹ்மணரிடம் விஷயத்தைத் தெரிந்துகொண்டார். அவரைச் சற்று அவ்விடத்திலேயே இருக்கும்படி உத்திர விட்டு தீர்த்தப்ரஸாதம் கொடுத்து முடிந்தவுடன் தீர்த்த காணிக்கை போட்டிருந்த பெரிய வெள்ளித் தாம்பாளத்தை அதிலிருந்த காணிக்கையுடன் அந்தப்ராஹ்மணரின் கையில் கொடுத்துவிட்டு பக்கத்திலிருந்த அதிகாரியைக் கூப்பிட்டு ராத்திரி பூஜைக்குள் அந்தத் தட்டின் விலையைப் ப்ராஹ்மணரிடம் கொடுத்துத் தட்டை மீட்டிவரவேண்டும் என்று உத்திரவிட்டார் என்று கேள்வியுற்றிருக்கிறோம்.

(அ) மூன்றுவது சுலோகத்தில் முக்தியைத் தருபவர் என்று கூறப்பட்டது. முக்தியைக்கொடுக்கும் பிரகாரத்தை இந்த சுலோகத்தில் காட்டுகிறுர் :—

**शान्तिदान्तिविरतीरपवर्गप्रापिकाः सुदृढमाशु वितीर्य ।**
**जन्ममृत्युभयरोगयुतस्य देहि देशिक ममाङ्घ्रयवलम्बम् ॥ ५ ॥**

ஶாந்தி தாந்தி விரதீரபவர்க்க ப்ராபிகா: ஸுத்ருடமாஶு விதீர்ய ।
ஜன்ம ம்ருத்யு பய ரோக யுதஸ்ய தேஹி தேஶிக மமாங்க்ர்யவலம்பம் ॥

**जन्ममृत्युभयरोगयुतस्य**-ஜனனம், மரணம், பயம் ரோகம் இவைகளுடன் கூடிய, **मम**-எனக்கு, **अपवर्गप्रापिकाः**-மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைவிக்கின்ற, **शान्तिदान्तिविरतीः**-சமம், தமம், வைராக்யம் இவைகளை, **सुदृढम्**-மிகவும் திடமாக, **आशु**-சீக்கிரம், **वितीर्य**-கொடுத்து, **देशिक**-ஹே குரோ! **अङ्घ्रयवलम्बम्**- தங்கள் பாதாவலம்பத்தை, **देहि**-கொடுங்கள்.

உலகில் யாவரும் பிறவி, மரணம், பிணி இவற்றால் ...ர்கள். இவைகளை அடியோடு போக்குவது

ஆத்மஞானம்தான். ஆத்மஞானத்தை அதிகமாக யாரும் விரும்புவதில்லை. உலகில் செல்வம் முதலான எல்லாப் பொருள்களையும் பெற்று நீண்ட காலம் வாழவேண்டுமென்று தான் யாரும் விரும்புகிறார். இவ்வித ஸகாமர்களுக்கு அவர்கள் வேண்டும் பொருள்களைக்கொடுக்கிறார். பிறவி மரணங்களைத் துன்பமாகக்கருதி இவை அடியோடு நீங்க ஆசைப்படுபவர்களுக்கு ஞானத்தைத் தருகிறார்.

உபதேசத்தால் மட்டும் எல்லோருக்கும் ஞானம் உண்டாகிறதில்லை. அதற்கும் அதிகாரம் தேவைப் படுகிறது. ஒரு கிருஹத்திற்கு வெளிச்சம் தேவையானால் மின்சார சக்தி பிரவஹித்து வரும் கம்பியின் ஸம்ஸர்க்கம் மட்டும் போதாது. அதற்கு முன் அந்த வீட்டிற்கு அநேக விதமான ஸம்ஸ்காரங்கள் செய்து அந்த மின்சார சக்தி யால் பிரகாசம் உண்டாவதற்குத் தயார் செய்யவேண்டி யிருக்கிறது. அதுபோல் ஞானம் ஏற்படவேண்டுமானால் ஸாதன சதுஷ்டயம் பெற்றிருக்கவேண்டும். விவேகம், வைராக்யம், சமம், தமம் சிரத்தை திதிக்ஷை, உபரதி, ஸமாதானம், முக்தியடையவேண்டுமென்ற தீவ்ர இச்சை இவைதான் ஸாதன சதுஷ்டயம். இவைகள் பலமாக இருந்தால்தான் குருவின் உபதேசம் ஸபலமாகி ஞானம் ஏற்பட்டு பிறவித் துன்பம் நீங்கும். ஞானத்தைத் தரும் ஆசார்யர்தான் அதற்கு முன் ஞான ஸாதனங்களான சமதமாதிகள் நிலைத்திருக்கும்படி அருளுகிறார். (5)

(அ) இவ்விதமான ஸாதனங்கள் ஸாதகனிடம் எவ்வாறு குருஸம்ஸர்க்கத்தால் ஏற்படுகின்றன என்பதைக் கூறுகிறார்:—

दर्शनात्किल दुरध्वगमर्त्याः यस्य जातु बहवः कृतकृत्याः ।
सूक्तितस्तु किमु वाच्यमयं त्वं देहि देशिक ममाङ्घ्रयवलम्बम् ॥

தர்ஶநாத் கில துரத்வக மர்த்யா: யஸ்ய ஜாது பஹவ:
க்ருதக்ருத்யா: ।
ஸூக்திதஸ்து கிமு வாச்யமயம் த்வம் தேஹி தேஶிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

**जातु**-ஒரு தடவை, **यस्य**-எவருடைய, **दर्शनात्किल**-தர்சனத்திருலேயே, **दुरध्वगमर्त्याः**-கெட்ட வழியில் செல்லும் மனிதர்கள், **बहवः**-பலர், **कृतकृत्याः**-கிருத கிருத்யர்களாக ஆகிவிடுகிருர்களோ (அவருடைய) **सूक्तितस्तु**-உபதேசத்தால் உண்டாகும் பயனை, **किमु वाच्यम्**-சொல்ல வேண்டுமா? **देशिक**-ஹே குரோ **अयं त्वं** - அவ்விதமான நீங்கள், **मम**-எனக்கு, **अंघ्रयवलम्बम्**-பாதாவலம்பத்தை, **देहि**-கொடுங்கள்.

நாம் பெரியோர்களை தர்சித்து அவர்களின் கருணு கடாக்ஷம் நம்மீது விழுந்தமாத்திரத்திலேயே கிருதகிருத்யர்களாக ஆகிவிடலாம். கெட்ட மார்க்கத்தில் செல்பவர்கள் பலர் ஒரு தடவை ஆசார்யாளை தர்சித்தமாத்திரத்திலேயே நல்வழியில் திரும்பி விவேகம் முதலான ஸாதனங்கள் பெற்று ஞானமடைந்துவிடுகிருர்கள். தர்சனத்திற்கே இத்தனைச் சிறப்பு இருக்கும்பொழுது அவர்களின் உபதேசமும் கிடைத்துவிட்டால் அவன் கிருத கிருத்யனுவதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? (6)

(அ) இதுவரை பொதுவாக ஆசார்ய மஹிமைகளைக் கூறிவிட்டு தன் குருநாதரின் குறிப்பிட்ட சில மஹிமைகளைக் காட்டுகிருர்:—

भस्मदानपरिपूरितनम्राकांक्षितार्थ परमात्मविदग्र्य ।
विस्मयावहतुरीयकयात्र देहि देशिक ममाङ्घ्रयवलम्बम् ॥

பஸ்மதாந பரிபூரித நம்ராகாங்க்ஷிதார்த்த பரமாத்ம விதக்ர்ய ।
விஸ்மயாவஹ துரீயகயாத்ர தேஹி தேசிக மமாங்க்ர்யவலம்பம் ॥

**भस्मदानपरिपूरितनम्राकांक्षितार्थ**- தன்னைச் சரணமடைந்தவர்களின் மனோபீஷ்டங்களை விபூதி ப்ரஸாதம் கொடுப்பதாலேயே பூர்த்தி செய்கிறவரே, **परमात्मविदग्र्य**-பரமாத்மஞானம் அடைந்தவர்களுக்குள் உத்கிருஷ்டமானவரே, **विस्मयावह-तुरीयकयात्र**-எல்லோரும் அதிசயிக்கக்கூடிய வகையில் நாலாவது ஸஞ்சார யாத்திரையை நடத்தினவரே, **देशिक**-ஹே

குரோ! **मम**-எனக்கு, **अंघ्र्यवलम्बम्**-பாதாவலம்பத்தை, **देहि**-கொடுங்கள்.

தன் குருவான ஸச்சிதானந்த சிவபிநவ நரஸிம்மபாரதீ ஸ்வாமிகளின் சில அஸாதாரணமான சக்தி விசேஷங்களை நமக்கு உபதேசிக்கிறார். எந்த வியாதியானாலும் எவ்வித பீடையானாலும் விபூதி ப்ரஸாதத்தை அனுக்கிரஹித்துக் கொடுப்பதாலேயே அவை நீங்கி கணக்கற்றவர்கள் ஸ்வஸ்த மடைந்திருக்கிறார்கள் என்பது பிரஸித்தம். ஸாதனம் விபூதி யானாலும் ஸாதிக்கப்பட்ட விஷயம் பெரியது. அதோடு ஞானிகளுக்குள் உத்கிருஷ்டமானவர். ஆத்மஞானத்தைத் தன் அனுபவத்தில் மட்டும் வைத்துக்கொள்ளாமல் மற்ற வர்களுக்கும் லகுவாக போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் படைத்தவர். இன்னும் ஜகத் பிரஸித்தமாக ஆதிசங்கர பகவத்பாதாள் பிறந்து வளர்ந்த இடமான காலடி என்னும் க்ஷேத்திரத்தைத் தன் ஞான திருஷ்டியினாலேயே கண்டு பிடித்து அவ்விடத்தில் இரு ஆலய நிர்மாணம் செய்து சாசுவதமாக பகவத்பாத பக்தி ஜகத்தில் வியாபித் திருக்கும்படி செய்யத் தானே நான்காவது முறையாக யாத்திரை செய்து தன் ஸங்கல்பத்தைப் பூர்த்தி செய்து கொண்டது ஒரு அமானுஷ்யமான லீலை என்றே சொல்ல வேண்டும். (7)

(அ) தன் குருவின் மாஹாத்ம்யத்தை ஸ்மரணம் செய்து அந்த ஸ்தானத்தை வகிக்கும் பொறுப்பைத் தனக்கு ஏற்படுத்தியிருப்பதால் அதற்கு அனுகூலமானதும் ஆவசியமானதுமான சில யோக்யதாம்சங்களையும் தனக்கு அருளவேண்டுமென்று பிரார்த்திக்கிறார். ஸாமான்யமாக ஞானமார்க்கத்தில் அப்யாஸம் செய்கிறவர்களும் அந்த யோக்யதைகளை ஸம்பாதித்துக்கொள்ளவேண்டும். முதலாவது ஜீவ யாத்ரையின் முக்ய நோக்கம் எது என்பதை விளக்குகிறார்:—

**ईहितं वितर सच्चितिसंज्ञ मोहितस्य जगदीश्वरशक्त्या ।**
**को हितं मम तनोति विना त्वां देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥**

ஈஹிதம் விதர ஸச்சிதிஸம்ஜ்ஞ மோஹிதஸ்ய ஜகதீச்வர
ஶக்த்யா ।
கோ ஹிதம் மம தநோதி விநா த்வாம் தேஹி தேஶிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

सच्चितिसंज्ञ-ஸத், சித் என்பதை பெயரில் கொண்டவரே ईहितं-அபீஷ்டத்தை, वितर-கொடுங்கள், जगदीश्वरशक्त्या-உலகங்களுக்கு ஈசுவரனை பரமாத்மாவின் சக்தியான மாயையால், मोहितस्य-மோஹத்தை அடைந்த, मम-எனக்கு, त्वां विना-உங்களைத் தவிற, कः-வேறு யார், हितं-நன்மையை, तनोति-செய்வார்? देशिक-குருவே, मम-எனக்கு, अङ्घ्र्यवलम्बं-திருவடியை ஆச்ரயமாக, देहि-கொடுங்கள்.

மனுஷ்ய ஜன்மாவில் முக்யமாக அடையவேண்டியது ஆத்மஞானம். ஆத்மா என்பது ஸத்ரூபம், சித்ரூபம், ஆனந்தரூபம் இதுதான் ஒவ்வொருவருக்கும் நோக்கமாக இருக்கவேண்டியது. இதை மறைத்திருப்பதைத் தான் அவித்யை என்றும், மாயை என்றும் சொல்வார்கள். மாயா சக்தியைக் கையாளுகிறவர்தான் ஈசுவரன். மாயாவிலாஸம் தான் ஜகத். ஜீவராசிகள் அந்த சக்திக்கு உட்பட்டவர்கள். ஈசுவரன் அதற்கு அதீனர் இல்லை. அது அவருக்கு அதீனம். ஆகையால் ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் இவைகளுக்கு அவர்தான் காரண வஸ்து. ஸ்வரூபம் என்பது இவைகளுக்கு அதீதமான தத்வம். இதை உபதேசித்து ஸ்வரூப ஞானம் கொடுக்கக்கூடியவர் குரு ஒருவர்தான். ஆகையால் ஸச்சிதானந்தத்தையே தம் பெயரில் கொண்ட குருநாதரிடம் பிரார்த்திக்கப்படுகிறது. (8)

(அ) ஆத்ம ஸாக்ஷாத்காரம் உபதேசத்தாலும் வேதாந்த சாஸ்திர விசாரத்தாலும் ஏற்படுகிறது. வேதாந்த சாஸ்திர விசாரத்திற்கு மற்றவைகளான வியாகரணம் பூர்வ மீமாம்ஸை நியாயம் வைசேஷிகம் முதலான சாஸ்திரங்கள் அனுகூலமாகின்றன. மேலும் ஆதிசங்கர பகவத்பாதாள் பிரதிஷ்டை செய்த தக்ஷிணாம்னாய பீடத்தை

அலங்கரிப்பதற்கு ஸர்வக்ஞராகவே இருக்கவேண்டும். ஸகல சாஸ்திர பாண்டித்யமும் அவசியம் என்பது அடுத்த இரண்டு சுலோகங்களில் காட்டப்படுகிறது:—

शंकरार्यकृतसर्वनिबन्धप्रोक्तिपाटवमतीव वितीर्य ।
अश्रुतेऽपि परिभाषणदाक्ष्यं देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥

ஶங்கரார்ய க்ருத ஸர்வ நிபந்த ப்ரோக்தி பாடவமதீவ விதீர்ய ।
அச்ருதேபி பரிபாஷண தாக்ஷ்யம் தேஹி தேஶிக மமாங்க்ர்யவலம்பம் ॥

**शंकरार्यकृतसर्वनिबन्धप्रोक्तिपाटवम्** - பகவத்பாதாள் அருளியிருக்கிற ஸகல கிரந்தங்களிலுமுள்ள எல்லா தத்வங்களேயும் அறிந்து பிரவசனம் செய்யும் ஸாமர்த்யத்தை, **अतीव**- மிகவும், **वितीर्य**-கொடுத்து, **अश्रुतेऽपि**-அந்த கிரந்தங்களில் வாச்யமாக இல்லாமல் இதுவரையில் கேள்விப்படாததாயும் துரூஹமாயும் அந்தர்கதமாயுமிருக்கும் விஷயங்களிலும், **परिभाषणदाक्ष्यं** - பிரக்ஞையுடன் பிரவசனம் செய்யும் ஸாமர்த்யத்தையும் (கொடுத்து) **देशिक**-குரோ, **मम**-எனக்கு, **अङ्घ्र्यवलम्बम्**-உங்கள் பாதாரவிந்தத்தின் அனுக்ரஹத்தை **देहि**-கொடுங்கள்.

தக்ஷிணம்நாய மடம் பகவத் பாதாளால் அத்வைத மதப்பிரசாரத்திற்காக ஏற்பட்டது. வேதாந்தத்திலுள்ள அத்வைத தத்வங்களே பகவத் பாதாள் தம் கிரந்தங்களில் விளக்கியிருக்கிருர்கள். அவைகளேப் பிரசாரம் செய்ய வேண்டியது முக்யமான தர்மம். மேலும் குருபக்தி மேலிட்டவனுக்குத் தானுகவே வாச்யமாய்ச் சொல்லாவிட்டாலும், அதில் அடங்கியுள்ள விசேஷ தாத்பர்யங்கள் மனதில் ஸ்புரிக்கும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. அந்த உண்மையும் வெளியாகிறது. பகவத்பாதாள் எவ்விதம் ஸர்வக்ஞராக விளங்கி அத்வைதம் மட்டுமல்ல, மற்றும் சகலவிதமான வைதிக சாஸ்திரங்களிலும் பூர்ண ஞானம் பெற்றிருந்தாரோ அவ்விதமே அந்தப்பீடத்தை

அலங்கரிப்பவர்களும் ஸர்வக்ஞர்களாக இருக்கவேண்டியது அவசியம். (9)

**व्यासजैमिनिकणादपदाक्षैः पाणिनिप्रभृतिभिर्मुनिवर्यैः ।**
**प्रोक्तशास्त्रपरिपक्वमनीषां देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥**

வ்யாஸ ஜைமினி கணாத பதாக்ஷை: பாணினி ப்ரப்ருதிபிர் முனிவர்யை: ।
ப்ரோக்த ஶாஸ்த்ர பரிபக்வ மநீஷாம் தேஹி தேஶிக மமாங்க்ர்யவலம்பம் ॥

**व्यासजैमिनिकणादपदाक्षैः**–வியாஸர், ஜைமினி, கணாதர், அக்ஷபாதர் ஆகியவர்களாலும், **पाणिनिप्रभृतिभिः मुनिवर्यैः** பாணினி முதலான முனி சிரேஷ்டர்களாலும், **प्रोक्तशास्त्रपरिपक्वमनीषाम्**–பிரகாசிக்கப்பெற்ற சாஸ்திரங்களில் பரிபக்வமடைந்த ஞானத்தைக் கொடுத்து, **मम**-எனக்கு, **देशिक**-குரோ, **अङ्घ्र्यवलम्बम्**–தங்கள் பாதங்களின் அவலம்பத்தை, **देहि**-கொடுங்கள்.

வியாஸர் ப்ரஹ்மஸூத்ரம் செய்து உபநிஷத் ரஹஸ்யங்களை பிரகாசம் செய்தவர். ஜைமினி வேதத்தின் கர்மகாண்ட சாஸ்திரமாகிற பூர்வ மீமாம்ஸையை எழுதியவர். கணாதர் நியாய சாஸ்திரப் பிரகாசம் செய்தார். அக்ஷபாதர் வைசேஷிக சாஸ்திரகர்த்தா. பாணினி வியாகரண சாஸ்திரத்தை வெளியிட்டவர். இந்த சாஸ்திரங்களின் பரிசயம் பூர்ணமாக இருந்தால்தான் வாதங்களில் எல்லோரையும் ஜயித்து அத்வைத மதத்தை நிலைநிறுத்த முடியும். மேலும் இவைகள் உத்தர மீமாம்ஸை என்னும் வேதாந்த சாஸ்திரத்தைச் சரிவரத் தெரிந்துகொள்ள அனுகூலமாக இருப்பவை. (10)

(அ) இவ்விதமாகத் தன் ஸ்தானத்திற்கு உகந்த யோக்யதை அவசியம் என்பதைக் காண்பிவித்து முக்யமாக ஞானமார்க்கத்தில் பிரவர்த்திப்பவர்களுக்கு அவசியமான

சில அதிகார ஸம்பத்தையும் விசேஷ சக்தியையும் உபதேசிக்கிறார் :—

मारमत्तगजचण्डमृगेन्द्र दारबन्धुममतागकुठार ।
तारयाशु भववारिनिधेर्मां देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥

மார மத்த கஜ சண்ட ம்ருகேந்த்ர தார பந்து மமதாக
குடார ।
தாரயாசு பவ வாரிநிதேர் மாம் தேஹி தேசிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

मारमत्तगजचण्डमृगेन्द्र–காமம் என்னும் மத யானைக்கு பயங்கரமான சிம்மமாகஇருப்பவரே, दारबन्धुममतागकुठार–பார்யை, பந்து இவர்களின்பேரில் என்னுடையவர்கள் என்று வைத்திருக்கும் அபிமானமாகிற மரத்திற்கு கோடாலியாக விளங்குகிறவரே, मां–என்னை, भववारिनिधेः–பிறவி என்னும் கடலிலிருந்து, आशु – சீக்கிரம், तारय – தாண்டிவைக்க வேண்டும். मम–எனக்கு, अङ्घ्र्यवलम्बम् –தங்கள் பாத அவலம்பத்தை, देशिक–குரோ, देहि–கொடுங்கள்.

காமனை அல்லது ஆசை என்பது ஒரு பெரிய சத்ரு. விஷயங்களில் என்னுடையது என்று வைக்கும் அபிமானத்தால் தான் ஸகல விபரீதங்களும் ஏற்படுகின்றன. இவை இரண்டையும் நீக்கினல் எளிதில் முக்தியடையலாம் என்று உபதேசம் செய்யப்படுகிறது. (11)

(அ) தன் குருநாதரின் மஹிமையை மேலும் அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார் :—

पादधूलिपरिपावितलोक भेदवादवनदावकृशानो ।
मोदमान परमात्मनि नित्यं देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥

பாத தூளி பரிபாவித லோக பேத வாத வந தாவ
க்ருசானோ ।
மோதமாந பரமாத்மனி நித்யம் தேஹி தேசிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

**पादधूलिपरिपावितलोक**-தன் பாததூளியினால் லோகத்தை பரிசுத்தம் செய்கிறவரே, **भेदवादवनदावकृशानो**-பேத வாத மாகிற காட்டிற்கு தாவாக்னிபோன்றவரே, **नित्यं**-ஸதா, **परमात्मनि**-பரமாத்மாவிடம், **मोदमान**-ஈடுபட்டு ரமிக்கிறவரே, **मम**-எனக்கு, **अंघ्र्यवलम्बम्**-பாதாவலம்பத்தை, **देहि**-கொடுங்கள், **देशिक**-ஹே, குரோ!

ஆசார்யாள் பாததூளிபடுமிடமெல்லாம் பாவனமாகி விடுகிறது ஆசார்யாள் ஸந்நிதியில் யாரும் ஜீவன் வேறு ப்ரஹ்மம் வேறு பிரபஞ்சம் வேறு என்ற பேதவாதத்தை எடுத்துப்பேச முடியாது தகுந்த பிரமாணங்களைக் கொண்டு பேதவாதத்தை நிராகரித்து அத்வைதவாதத்தை நிலைநிறுத்துவார்கள் எப்பொழுதும் அத்வைத பரமாத்ம வஸ்துவில் மனம் ஈடுபட்டு நிலை நின்று ஆனந்தமாக இருப்பதால் தாம் அனுபவிக்கும் அத்வைதாநந்தத்திற்கு விருத்தமான பேதவாதத்தை ஆசார்யாளால் தான் நிராகரிக்க முடியும். (12)

(அ) இவ்விதம் சொல்லிவிட்டு முக்யமாக எல்லோருக்கும் வினயஸம்பத் அவசியம் என்பதைக் காட்டு[illegible]ரா.

**ब्राह्मणत्वमतिदुर्लभमाप्तं ह्याश्रमश्च समवापि तुरीयः ।**
**नास्ति रागरहितत्वमपीषद्देहि देशिक ममाङ्घ्र्यवलम्बम् ॥**

ப்ராஹ்மணத்வம் அதிதுர்லபமாப்தம் ஹ்யாச்ரமச்ச
ஸமவாபி துரீய: ।
நாஸ்தி ராக ரஹிதத்வமபீஷத் தேஹி தேசிக
மமாங்க்ர்யவலம்பம் ॥

**अतिदुर्लभं**-மிகவும் துர்லபமான, **ब्राह्मणत्वम्**-ப்ராஹ்மண ஜன்மா, **आप्तं हि**-அடையப்பட்டதல்லவா. **आश्रमश्च तुरीयः**-(மேலும்) துரீயாசிரமம் என்னும் ஸந்யாஸமும், **समवापि**-அடையப்பட்டது (ஆனால்), **ईषदपि**-கொஞ்சங்கூட, **रागरहितत्वम्**-ஆசையற்ற வைராக்யம், **नास्ति**-இல்லை.

**मम**-எனக்கு, **अङ्घ्र्यवलम्बम्**-தங்கள் பாதாவலம்பத்தை, **देहि**-கொடுங்கள் **देशिक**-தேசிகரே.

ஜன்மாக்களில் மானிடஜன்மா மிக அரிது அதிலும் பிராஹ்மண ஜன்மா வெகு துர்லபம். அதற்கு மேல் ஸந்யாஸாசிரமம் ஸித்திப்பது மஹா அபூர்வம். அநேக ஜன்ம புண்ய பலத்தால்மட்டும் இது கிடைக்கக்கூடியது என்று உபதேசித்து, அதற்கு அடிப்படையான அதிகார ஸம்பத் வைராக்யம் என்றும் உபதேசிக்கப்பட்டது. ஆகையால் சிரமப்பட்டு இவ்வளவும் கிடைத்திருப்பதால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடையாமல் ஜன்மாவை வியர்த்தமாக்கக்கூடாது என்று எச்சரித்தாற்போல் உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. (13)

ஸ்ரீ பாதாவலம்பன ஸ்துதி முற்றும்.



# ॥ देशिकोत्कर्षमञ्जरी ॥
# தேசிகோத்கர்ஷ மஞ்ஜரீ

[அம்பிகையை உத்தேசித்து ஆசார்ய பாதாள் "வாண்யுத்கர்ஷ மஞ்ஜரீ" என்னும் ஸ்தோத்திரம் செய்துள்ளார்கள். அப்பிரகாரமே தம் குருநாதரைப்பற்றி இந்த ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இதிலும் தனக்கு நீலகண்ட தீக்ஷிதரவர்களின் கிருதிகளில் உள்ள விசேஷப் பற்றுதலைக் காண்பித்திருக்கிறார்.]

यद्वक्त्राब्जनिरीक्षणादनुपमः पापी भवेद्धार्मिको
यद्वाचामृतसेचनादपि जडः स्यात्तत्त्वबोधे गुरुः ।
यत्सांनिध्यबलादियं वसुमती चाभूत्सतामास्पदं
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

யத்வக்த்ராப்ஜ நிரீக்ஷணாதநுபம: பாபீ பவேத் தார்மிகோ
யத்வாசாம்ருத ஸேசநாதபி ஜட: ஸ்யாத் தத்வ போதே குரு:।
யத்ஸாந்நித்ய பலாதியம் வஸுமதீ சாபூத் ஸதாமாஸ்பதம்
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**यद्वक्त्राब्जनिरीक्षणात्**–எவருடைய தாமரைபோன்ற முகத்தின் பார்வையினால், **अनुपमः पापी**–நிகரற்றதான பாபியும், **धार्मिकः**–தார்மிகனாக, **भवेत्** – ஆகிவிடுவானோ, **यद्वाचामृतसेचनात्**-எவருடைய வாக் என்னும் அமிருதத்தினால் நனைக்கப்படுவதால், **जडः अपि**–அதிமூடனும்கூட, **तत्त्वबोधे**-தத்வத்தை அறிந்துகொள்வதில், **गुरुः** – பிருஹஸ்பதியாக, **स्यात्** – ஆகிவிடுவானோ, **यत्सांनिध्यबलात्**–எவருடைய ஸாந்நித்ய பலத்தால், **इयं वसुमती च**–இப்பூமண்டலமும், **सतां** – ஸத்புருஷர்களுக்கு, **आस्पदं** – இருப்பிடமாக, **अभूत्** – இருந்ததோ, **स स्वामी**–அந்த மஹானே, **मम देशिकः**–என் குருநாதர், **तदितरः**–மற்றவர், **नाम्नापि** – பெயரால்கூட, **नाम्नायते**–சொல்லப்படுகிறதில்லை.

நாம் பரதத்வத்தை அறிந்துகொள்ளாமைக்குக் காரணம் பாபங்களே. இவை விலக நாம் குருநாதரின் முகாரவிந்தத்தை தர்சித்தால் போதும். நம் குருநாதரும் முதலில் தம் கடாக்ஷ பாதத்தால் சிஷ்யனின் பாபங்களைப் போக்கிவிடுகிறார். அவருடைய திவ்ய திருஷ்டியானது நம் மனதிற்குள் புதந்து அங்குள்ள கல்மஷங்களையெல்லாம் போக்கிவிடுகிறது. அவன் பரிசுத்தனாகிறான். பிறகு உபதேசம் செய்கிறார். உபதேசாமிருதத்தால் நனைந்த மனதிலுள்ள எல்லாத் தாபங்களும் விலகிவிடுகின்றன. அவன் எவ்வளவு மூடனாயிருந்தாலும் குருவின் உபதேச பலத்தால் பிருஹஸ்பதிபோல் சிறந்த தத்வஞானியாகிறான். இம்மட்டுமா? பிறநுக்கு உபதேசிக்கும் குருஸ்தானத்தையும் அடைகிறான். இது தம் ஸமீபம் வந்த சிஷ்யனுக்கு குரு செய்யும் அனுக்ரஹம். அவர் பூமியில் இருந்த காரணத்தாலேயே பூமி முழுவதிலும் எத்தனை தூரத்திலிருந்த போதிலும் ஜனங்களின் மனதில் நல்ல எண்ணங்கள் ஏற்பட்டு எல்லோரும் ஸாதுக்களாகவே விளங்கி வந்தனர். இவ்வாறு தன் ஸான்னித்யத்தாலும், கடாக்ஷத்தாலும், உபதேசத்தாலும், உலகம் முழுவதற்கும் பரமானுக்ரஹம் செய்யும் இவர்தான் என்க்குக் குரு. வேறு ஒருவரையும் நான் குருவாக வழிபடமாட்டேன். (1)

(அ) சக்தி ஏற்பட்டதற்குக் காரணம் கூறுகிறார் :—

यो बाल्ये विधिवद्विधूय कुतुकात्कर्माणि कर्मन्दिराट्
भूत्वा द्राक्समतीतरन्नतजनान्संसारवारांनिधिम् ।
यस्यासीत्करुणा विशेषमनिशं प्राणिष्वशेषेष्विह
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

யோ பால்யே விதிவத் விதூய குதுகாத் கர்மாணி
கர்மந்திராட்
பூத்வா த்ராக் ஸமதீதரந்நதஜநான் ஸம்ஸார வாராம் நிதிம்|

யஸ்யாஸீத் கருணா விஶேஷமநிஶம்
ப்ராணிஷ்வஶேஷேஷ்விஹ
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ||

यः-எவர், बाल्ये-பால்யத்திலேயே, विधिवत्-சாஸ்திர முறைப்படி, कुतुकात्-உத்ஸாஹத்துடன், कर्माणि-கர்மாக்களை, विधूय-தியாகம் செய்துவிட்டு, कर्मीन्द्रराट्-யதீசுவரராக, भूत्वा-ஆகி, नतजनान्-தன்னை வணங்கின ஜனங்களை, द्राक्-சீக்கிரம், संसारवारांनिधिं-ஸம்ஸாரமாகிற கடலை, समतीतरत्-நன்ருகத் தாண்டும்படி செய்து வைத்தாரோ, यस्य - எவருடைய, करुणा - கருணையானது, अनिशं-எப்பொழுதும், इह-இங்கே, अशेषेषु प्राणिषु-எல்லாப் பிராணி வர்க்கங்களிலும், विशेषं-விசேஷமாக, आसीत्-பிரகாசித்து வந்ததோ, स स्वामी-அந்த மஹானே, मम-என், देशिकः-குரு, तदितरः-அவரன்றி மற்றவர், नाम्नापि-பெயரினுல்கூட, नाम्नायते-சொல்லப்படுகிறதில்லை.

வைராக்யம் ஞான ஸாதனம், ஞானியின் லக்ஷணமும் கூட. ஜன்மாந்தரங்களில் செய்யப்பட்ட ஸுக்ருத விசேஷங்களால் பால்யத்திலேயே வைராக்யம் ஏற்பட்டு ஸன்யாஸம் பெற்ருர் என்று சொல்லப்படுகிறது. அதுவும் ஸாமான்ய ஸந்யாஸி அல்ல. ஸந்யாஸி ராஜா என்று சொன்னதால் ஞானி என்று ஏற்படுகிறது. மேலும் மற்றவர்களைக் காப்பாற்றி பவ சமுத்திரத்தைத் தாண்டுவிப்பதால் தான் ஒரு ஞானி என்றும் ஏற்படுகிறது. அதோடு பகவத் குணமான கருணையும் மனதில் நிறைந்து எல்லாப் பிராணிகளின் விஷயத்திலும் பிரவஹிக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலேயிருந்து தவறி கீழே விழுந்து பிராணனையிழந்த ஒரு பல்லியின் துக்கத்தைக்கூட ஸகிக்காது அதை உஜ்ஜீவித்த மஹானல்லவா! இந்த இரண்டு குணங்களுமே முதல் சுலோகத்தில் விவரித்த சக்திக்குக் காரணமென்று காட்டப்படுகிறது. (2)

(அ) குருநாதரின் கருணு விலாஸத்தை விவரிக்கிருர் :—

यः स्वानुग्रहकाङ्क्षया निजपदाम्भोजातयुग्मं मुदा
संप्राप्तान्विविधार्तिपीडितजनान्प्रीत्याऽनुगृह्णन्स्थितः ।
यद्वक्त्रं नतकष्टबोधसमये शुष्कं भवेदञ्जसा
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

யஃ ஸ்வானுக்ரஹ காங்க்ஷயா நிஜபதாம்போஜாத யுக்மம் முதா
ஸம்ப்ராப்தான் விவிதார்த்தி பீடித ஜநான் ப்ரீத்யானுக்ருஹ்ணன் ஸ்தித: ।
யத்வக்த்ரம் நத கஷ்ட போத ஸமயே ஶுஷ்கம் பவேதஞ்ஜஸா
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

यः–எவர், स्वानुग्रहकाङ्क्षया–தன்னுடைய அனுக்ரஹம் தேவை என்னும் நோக்கத்துடன், निजपदाम्भोजातयुग्मं–தன்னுடைய பாதகமலத்வந்த்வத்தை, संप्राप्तान्–அடைந்த, विविधार्तिपीडितजनान्–பலவிதமான துக்கங்களால் பீடிக்கப்பட்ட ஜனங்களை, प्रीत्या–பிரீதியுடனும், मुदा–ஸந்தோஷத்தோடும், अनुगृह्णन्स्थितः–அனுக்ரஹித்துக்கொண்டு, இருந்தாரோ, यद्वक्त्रं–எவருடைய முகம், नतकष्टबोधसमये–சரணமடைந்தவர்களின் கஷ்டங்களை அறியும்பொழுது, अञ्जसा–உடனே, शुष्कं–வாட்டமடைந்ததாக, भवेत्–ஆகுமோ, स स्वामी–அந்த மஹானே, मम देशिकः–என் குரு, तदितरः–மற்றவர், नाम्नापि–பெயரால்கூட, नाम्नायते–குறிப்பிடப்படுகிறதில்லை.

இந்த சுலோகத்தில் விவரிக்கப்பட்டிருக்கிற அபூர்வ குணம் பகவதம்சம் பொருந்திய ஒரு ஜீவன்முக்தரிடம்தான் காணக்கூடியது. பரிசுத்தமானதாயும், தெளிவாயும், அசைவற்றதாயும் உள்ள ஒரு கண்ணாடியைத் திருஷ்டாந்தமாகச் சொல்லலாம். கண்ணாடியில், முன் நிற்கிறவர்களுடைய முகத்தில் பிரகாசிக்கிற ஸந்தோஷ துக்கத் தோற்றங்கள் பிரகாசிக்கின்றன. ஆனால் கண்ணாடிக்கு

அவைகளில் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. கண்ணுடியின் நிலை எப்பொழுதும் அசைவற்றதாயும், நிர்மலமாயும்தானிருக்கிறது. இதுபோல பிராணிகள் படும் துக்கத்தைக் கண்டு முகம் வாட்டமடைந்து துக்கக் குறிகள் தென்பட்டபோதிலும், அவர்களின் துக்கங்களை நிவர்த்தி செய்தபோதிலும் குருநாதரின் மனம் கண்ணுடிபோல் ஸ்வச்சமாகத்தானிருக்கிறது. मुदा (முதா) என்னும் விசேஷணத்தால் தன் ஆத்மானந்த நிஷ்டையிலிருந்து பிரச்யுதியில்லை, அவர் மனது அசஞ்சலமான ஆத்ம நிஷ்டையிலிருந்து அசையவில்லை என்று காண்பிக்கப்படுகிறது. பார்க்கிறவர்கள் ரீதியாக, அவர்கள் ஸமாதானத்திற்காக அவ்விதத் தோற்றம் பிரதிபலிக்கிறதே தவிர அவர் ஸ்வரூபானந்தத்தில் மாறுதல் ஏற்படவில்லை என்று தெளிவாகிறது. (3)

(அ) அவருக்கு குருவிடமும் சாஸ்திரத்திலுமுள்ள அபார பக்தியைக் காட்டுகிருர் :—

भक्तिर्यस्य गुरौ नितान्तमभवद्यस्याः प्रभावात्सदा
संतुष्टः स्वसमीपमागतवतस्तुष्टान्तरङ्गान्व्यधात् ।
यस्यासीच्च दृढा मतिः श्रुतिततौ तन्मार्गसंरक्षणे
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

பக்திர் யஸ்ய குரௌ நிதாந்தமபவத் யஸ்யா: ப்ரபாவாத் ஸதா
ஸந்துஷ்ட: ஸ்வஸமீபமாகதவதஸ் துஷ்டாந்தரங்கான் வ்யதாத் ।
யஸ்யாஸீச்ச த்ருடா மதி: ச்ருதிததௌ தன் மார்க ஸம்ரக்ஷணே
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**यस्य**–எவருக்கு, **गुरौ**–குருவினிடத்தில், **भक्तिः**–பக்தி, **नितान्तं**–அபரிமிதமாக, **अभवत्**–இருந்ததோ, **यस्याः**–எந்த பக்தியின், **प्रभावात्**–மஹிமையினுல், **सदा**–எப்பொழுதும்,

**सन्तुष्टः**-தான் ஸந்துஷ்டராகவே இருந்துகொண்டு, **स्वसमीपमागतवतः**-தன் ஸமீபம் வந்தவர்களையும், **तुष्टान्तरङ्गान्**-திருப்தியடைந்த மனோநிலையுடையவர்களாக, **व्यधात्**-செய்து வந்தாரோ, **यस्य**-எவருக்கு, **श्रुतिततौ**-வேத ஸமூஹத்திலும், **तन्मार्गसंरक्षणे च**-அந்த வேதமார்க்கத்தைக் காப்பாற்றுவதில் **दृढा मतिः**-உறுதியான மனோநிச்சயம், **आसीत्**-இருந்ததோ, **स स्वामी**-அந்த மஹானே, **मम देशिकः**-என் குரு, **तदितरः** அவரன்றி மற்றவர், **नाम्नापि**-பெயரால்கூட, **नाम्नायते**-குறிப்பிடப்படுகிறதில்லை.

பக்தியின் மஹிமையால், தான் ஞானநிஷ்டனாவது ஒன்று. தன் அருகில் வருகிறவர்களையும் அந்த ஆனந்தத்தில் பங்கு அடையும்படி செய்விப்பது மற்றொன்று. மேலும் அந்த பக்தியே வேதவிச்வாஸம், தர்ம ப்ரசாரம், தர்ம மார்க்க ஸ்தாபனம் முதலிய காரியங்களையும் செய்விக்கிறது. (4)

(அ) தன் குருநாதரின் மற்ற குணாதிசயங்களை விவரிக்கிறார் :—

कीर्तिर्यस्य दिगङ्गनाप्रियसखी मूर्तिश्च हेमाकृतिः
स्फूर्तिर्देवगुरुं सदोपहसतीवार्तिं नतानां जवात् ।
पूर्तिश्चापि दयारसस्य हरते सूक्तिः सुधास्यन्दिनी
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

கீர்த்திர்யஸ்ய திகங்கனா ப்ரியஸகீ மூர்திஶ்ச ஹேமாக்ருதி:
ஸ்பூர்திர்தேவ குரும் ஸதோபஹஸதீவார்த்திம் நதானாம் ஜவாத் ।
பூர்த்திச்சாபி தயாரஸஸ்ய ஹரதே ஸூக்தி: ஸுதாஸ்யந்தினீ
ஸ ஸ்வாமீ மம தேஶிக ஸ்ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**यस्य**-எவருடைய, **कीर्तिः**-கீர்த்தி, **दिगङ्गनाप्रियसखी**-திக்குகளாகிற பெண்களின் பிரியமான தோ ழியா.

(அதாவது எல்லா திசைகளிலும் பரவியிருக்கிறதோ) **मूर्तिश्च** சரீர அமைப்பும், **हेमाकृतिः**-ஸ்வர்ணரூபமானதோ, **स्फूर्तिः**-புத்தி கூர்மை, **सदा**-எப்பொழுதும், **देवगुरुं**-பிருஹஸ்பதியை **उपहसतीव**-பரிஹஸிப்பது போல் பிரகாசிக்கிறதோ, **नतानां**-தன்னை வணங்குவோர்களின், **आर्तिं**-குறைவை, **जवात्**-உடனே, **दयारसस्य**-தயையாகிற ரஸத்தின், **पूर्तिश्चापि**-பரவுதலே, **हरते**-நீக்குகிறதோ, **सूक्तिः**-நல்வாக்கு, **सुधास्यन्दिनी** அமிருதத்தைப்பொழிகிறதோ, **स स्वामी**-அந்த மஹானே, **मम देशिकः**-என் குரு, **तदितरः**-மற்றெவரும், **नाम्नापि**-பெயரால்கூட, **नाम्नायते**-குறிப்பிடப்படுகிறதில்லை.

இந்த சுலோகத்தில் அமைந்திருக்கிற பிராஸமும் கவனிக்கத்தக்கது. கீர்த்தி, மேதை, தயை, வாக், ஆகிய முக்யமான அம்சங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. (5)

(அ) தன் குருநாதருக்குப் பிரியமான தினசர்யையை வர்ணிக்கிறார் :—

तुङ्गातीरलसत्तपोवनभुवि स्वैरं चरन्नन्वहं
गङ्गावारिलसज्जटाविलसितं चित्ते मुदा भावयन् ।
तुङ्गानन्दविधायकः प्रणमतां शृङ्गाद्रिवासप्रियः
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

துங்காதீர லஸத் தபோவன புவி ஸ்வைரம் சரன்னன்வஹம்
கங்கா வாரி லஸஜ்ஜடா விலஸிதம் சித்தே முதா பாவயன் ।
துங்கானந்த விதாயக: ப்ரணமதாம் ச்ருங்காத்ரிவாஸ ப்ரிய:
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**तुङ्गातीरलसत्तपोवनभुवि** - துங்காநதிக்கரையில் விளங்கும் தபோவனப்ரதேசத்தில், **स्वैरं**-உத்ஸாகமாகத் தடையின்றி, **अन्वहं**-பிரதி தினமும், **चरन्**-ஸஞ்சாரம் செய்து கொண்டு **गङ्गावारिलसज्जटाविलसितं** – கங்கா ஜலத்துடன் பிரகாசிக்கிற ஜடையழகுடையவரை (பரமசிவனை) **चित्ते**-தன் சித்தத்தில்

**मुदा**–ஆனந்தமாக, **भावयन्**–தியானம் செய்து கொண்டு **प्रणमतां**-தன்னை வணங்குகிறவர்களுக்கு, **तुङ्गानन्दविधायकः**– உத்கிருஷ்டமான ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டு, **शृङ्गाद्रिवासप्रियः**–சிருங்ககிரியில் வாஸம் செய்வதில் பிரிய முள்ளவராக விளங்கும், **स स्वामी**–அந்த மஹானே, **मम देशिकः**–என்குரு, **तदितरः**–அவரன்றி மற்றவர், **नाम्नापि**– பெயரால்கூட, **नाम्नायते**–குறிப்பிடப்படுகிறதில்லை.

சிருங்ககிரி என்னும் ரிச்யசிருங்கர் ஆசிரமம் சாந்தமான ஸ்தலம். அவ்விடம் துங்கா நதியின் இடது கரையில் பகவத்பாதாள் சாரதாம்பிகையை பிரதிஷ்டை செய்திருக் கிருர். துங்கா நதியின் வலது கரையில் நரஸிம்ம தபோவனம் விளங்குகிறது. அங்கு தபஸ் செய்து கொண்டு காலம் முழுவதையும் கழிப்பதிலேயே குருநாதருக்கு நோக்கம் இருந்தது என்பது அவர் செய்திருக்கும் ஸ்தோத்திரங்களி லிருந்து தெரியவருகிறது ஒரு யாத்திரையில் அம்பிகையை விட்டு தான் விலகியிருக்க வேண்டியிருப்பதை எண்ணி **कदा द्रक्ष्यामि शारदाम्** எப்பொழுது சாரதாம்பாளை தர்சிப்பேன் என்று கூறுகிருர். **शृङ्गाद्रिवासप्रियः** என்னும் விசேஷணம் எவ்வளவு பொருத்தமானது என்பது அவை களில் துலங்கும்.

(6)

(அ) தன் குருநாதர் ப்ரஹ்மவித்தாயும், ஜீவன் முக்தராயுமிருந்தாலும், ஒரு புராதனமான மடத்திற்கு அதிபதியாக இருக்கும் நிலையில் ஒரு கர்மயோகியாயும் விளங்கிஞர் என்பதை அடுத்த சுலோகத்தில் பிரகாசப் படுத்துகிருர் :—

यस्यास्तिक्यमभूदशेषजनताविस्मापकं भूतले
यत्कर्माचरणप्रवृत्तिरभवन्मुख्यं प्रमाणं नृणाम् ।
यत्क्षान्त्या वसुधा मुमोच तरसा सर्वंसहत्वप्रथां
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

யஸ்யாஸ்திக்யமபூதசேஷ ஜநதா விஸ்மாபகம் பூதலே
யத்கர்மாசரண ப்ரவ்ருத்திரபவன் முக்யம் ப்ரமாணம் ந்ருணாம் ।
யத்க்ஷாந்த்யா வஸுதா முமோச தரஸா ஸர்வம்ஸஹத்வ ப்ரதாம்
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**भूतले**-பூமண்டலத்தில், **यस्य**-எவருடைய, **आस्तिक्यं**-வேதம், சாஸ்திரம் முதலியவைகளில் நம்பிக்கை, **अशेषजनताविस्मापकं**-எல்லா ஜனங்களுக்கும் ஆச்சர்யகரமாக, **अभूत्**-இருந்ததோ, **नृणाम्**-ஜனங்களுக்கு, **यत्कर्माचरणप्रवृत्तिः**-எவருடைய கர்மாக்களைச் செய்து காட்டும் வழி, **मुख्यं प्रमाणं**-முக்யமான ப்ரமாணமாக, **अभवत्**-இருந்ததோ, **यत्क्षान्त्या**-எவருடைய பொறுமை குணத்தினால், **वसुधा**-பூமி தேவியே, **सर्वंसहत्वप्रथां**-எல்லாவற்றையும் ஸஹிக்கும் தன்மை வாய்ந்தவள் என்னும் கீர்த்தியை, **तरसा**-உடனே, **मुमोच**-விட்டுவிட்டாளோ, **स स्वामी**-அந்த மஹானே, **मम देशिकः**-என் குரு, **तदितरः**-மற்றவர், **नाम्नापि**-பெயரால்கூட, **नाम्नायते**-குறிக்கப்படுகிறதில்லை.

ஸன்மார்க்கத்திற்கு அஸ்திவாரம் ஆஸ்திக்யம். அது என்ன என்பதை குருநாதரே விளக்கியிருக்கிறார். அதாவது ஈசுவரன் ஒருவர் உண்டு, பிராணி வர்க்கங்கள் அவரவர்களின் கர்மபலனாக பலவிதமான ஜன்மாக்களை அடைகிறார்கள். பாபம் என்பது உண்டு. சுக துக்கங்களைக் கொடுக்கக்கூடியதாக வேறு லோகங்கள் உண்டு. சாஸ்திரம், குரு வாக்யங்கள் ஸத்தியம. இவ்வித நம்பிக்கையே ஆஸ்திக்யம். இந்த நம்பிக்கையின் முக்யபலன் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மாக்களை அவைகளில் சொல்லியபிரகாரம் சிரத்தையுடன் செய்வது. கர்மா செய்வதற்குப் பொறுமை வேண்டும். இந்த மூன்று அம்சங்களும் தன் குருநாதரிடம் பூர்ணமாயிருந்ததால் **रामो विग्रहवान् धर्मः** (ராமோ விக்ரஹவான் தர்ம:) என்று வால்மீகி சொல்லியபிரகாரம் தற்காலத்தில் ராமர்போல் தன் குருநாதர் விளங்கிவந்தார் என்று சொன்னதாக ஆகிறது. (7)

(அ) தன் குருநாதரின் ஞானுனுபவ நிலையைக் காட( ?ர்:—

आत्मानात्मविवेचनेऽतिचतुरो मिथ्यात्वमापादय-
न्द्वैतस्यात्मनि सत्यतामतिदृढं संपादयन् शास्त्रतः ।
यस्तत्त्वं मनसा विचिन्त्य नितरां लेभेऽनुभूतिं निजां
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते ॥

ஆத்மாநாத்ம விவேசநேऽதிசதுரோ மித்யாத்வமாபாதயன்
த்வைதஸ்யாத்மனி ஸத்யதாமதித்ருடம் ஸம்பாதயன்
ஶாஸ்த்ரத: ।
யஸ்தத்வம் மநஸா விசிந்த்ய நிதராம் லேபேऽநுபூதிம்
நிஜாம்
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ்ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

यः-எவர், आत्मानात्मविवेचने—ஆத்மா எது அநாத்மா எது என்று பகுத்தறிந்து கொள்வதில், अतिचतुरः-மிகவும் தேற்சியடைந்தவராக, द्वैतस्य-(இரண்டாக, அல்லது நானுவாகத் தோன்றும்) த்வைதத்தின், मिथ्यात्वं-மித்யை என்னும் உண்மையை, आपादयन्-நிரூபித்து, आत्मनि-ஆத்ம பதார்த்தத்தில், सत्यतां-ஸத்யத்தன்மையை, अतिदृढं-பலமாக, शास्त्रतः-சாஸ்திர பிரகாரம், संपादयन् – அடைந்து, मनसा—மனதினுல் तत्वं—ப்ரஹ்ம தத்வத்தை, नितरां—நன்ருக, विचिन्त्य—மனனம் செய்து, निजां—தனக்குரிய தான, अनुभूतिं-ஆத்மானுபூதியை, लेभे—அடைந்தாரோ, स स्वामी—அந்த மஹானே, मम देशिकः-என் குரு. तदितरः-மற்றெவரும், नाम्नापि-பெயரினுல் கூட, नाम्नायते—குறிப்பிடப்படுகிறதில்லை.

शास्त्रतः – (சாஸ்திரங்களினுல்) என்ற விசேஷணத்தால் யுக்தி பலத்தால் மட்டும் அத்வைதமான ஆத்ம பதார்த்தத்தில் ஸத்ய புத்தி அடையமுடியக்கூடியதில்லை என்று தெளிவாவதோடு தன் குருநாதருக்கு சாஸ்திரானுஸாரமான யுக்தியே ஆத்மஞானத்தைக் கொடுத்தது என்று தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. (8)

(அ) கர்ம மார்க்கத்தில் இருந்துவருபவர்களுக்கு அனுக்ரஹம் செய்ததைக் கூறி, ஞான மார்க்கத்தில் செல்பவர்களுக்கும் தன் குருநாதர் அனுக்ரஹம் செய்ததைக் கூறுகிறார் :—

शास्त्रार्थान्बहुधा विचार्य विबुधैः साकं विनेयानलं
संबोध्य श्रुतिभिस्तदङ्गनिचयैस्तर्कैस्तदन्तर्गतैः ।
निश्चित्य स्वयमात्मतत्त्वमखिलांश्चक्रे सुबोधान्सुखं
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते ॥

ஶாஸ்த்ரார்த்தான் பஹுதா விசார்ய விபுதை: ஸாகம் விநேயாநலம்
ஸம்போத்ய ச்ருதிபிஸ்ததங்க நிசயைஸ் தர்க்கைஸ் ததந்தர்கதை: ।
நிச்சித்ய ஸ்வயமாத்ம தத்வமகிலாம் ச்சக்ரே ஸுபோதான் ஸுகம்
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

शास्त्रार्थान्–சாஸ்திரங்களின் தாத்பர்யங்களை, विबुधैः साकं–வித்வான்களோடு கூடி, बहुधा–பலவிதமாக, विचार्य–விசாரணை செய்து, विनेयान्–சிஷ்யர்களுக்கு, अलं–போதுமானவரை, संबोध्य–நன்ருகக் கற்பித்து, श्रुतिभिः–வேத ப்ரமாணங்களாலும், तदङ्गनिचयैः–வேதங்களின் அங்கங்களாகிற சாஸ்திரக் கூட்டத்தாலும், तदन्तर्गतैः–அந்த வேத சாஸ்திரங்களுக்கு அனுஸரணையான, तर्कैः–யுக்திகளாலும், स्वयं–தான், आत्मतत्त्वं–ஆத்ம தத்வத்தை, निश्चित्य–தீர்மானித்துக்கொண்டு, अखिलान्–எல்லோரையும், सुखं–எளிதாக, सुबोधान्–நன்ருகத் தெரிந்தவர்களாக, चक्रे–செய்தாரோ, स स्वामी–அந்த மஹானே, मम देशिकः–என்குரு, तदितरः–மற்றெவரும், नाम्नापि–பெயரால் கூட, नाम्नायते–குறிப்பிடப்படுகிறதில்லை.

தான் சாஸ்திர விதிப்படி தெரிந்து நடத்திக்கொண்டு மற்றவர்களையும் அவ்விதமே தெரிந்து நடந்துகொள்ளும்படி

செய்து வைக்கிறவர்தான் ஆசார்யர். தன் குருநாதரிடம் அந்த லக்ஷணம் பூர்ணமாய்ப் பொருந்தியிருப்பதாகவும், அவர் நன்கு விசாரம் செய்து தான் நிச்சயம் செய்து கொண்டு மற்றவர்களுக்கும் உபதேசிக்கும் முறையும் நன்ருகக் காண்பிக்கப்பட்டிருக்கிறது இந்த சுலோகத்தில்.

(அ) தன் குருநாதரின் பிறப்பு மஹிமையைப்பற்றி அடுத்த சுலோகத்தில் விவரிக்கிருர்:—

उत्पद्यात्मविदग्रजन्मभवने गर्भाष्टमे संस्कृतो
यः पूर्वार्जितपुण्यपुञ्जविभवैः संप्राप्ततुर्याश्रमः ।
वैराग्यादिभिरद्भुतैर्गुणगणैः श्रीशंकरार्योऽपरः
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते ॥

உத்பத்யாத்மவிதக்ரஜந்மபவநே கர்பாஷ்டமே ஸம்ஸ்க்ருதோ
யஃ பூர்வார்ஜித புண்ய புஞ்ஜ விபவைஃ ஸம்ப்ராப்த
துர்யாச்ரமஃ ।
வைராக்யாதிபிரத்புதைர் குணகணைஃ ஸ்ரீஶங்கரார்யோ ऽபரஃ
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**आत्मविदग्रजन्मभवने**-பரம்பரையாக ஆத்ம வித்துக்களான ப்ராஹ்மண குடும்பத்தில், **उत्पद्य**-பிறந்து, **गर्भाष्टमे**-கர்ப்பத்திலிருந்து எட்டாவது வயதில், **संस्कृतः**-ப்ரஹ்மோபதேசம் பெற்று, **यः**-எவர், **पूर्वार्जितपुण्यपुञ्जविभवैः**-முன் ஜன்மங்களில் செய்த புண்யக்கூட்ட மஹிமையிஞல், **संप्राप्ततुर्याश्रमः**-நான்காவதான ஸந்யாஸாசிரமம் பெற்று, **वैराग्यादिभिः**-வைராக்யம் முதலிய, **अद्भुतैः गुणगणैः**-அத்புதமான குண ஸமூஹங்களிஞல், **अपरः**-மற்ெருரு, **श्रीशंकरार्यः**-ஸ்ரீ சங்கர பகவத்பாதாளாக (விளங்கிருரோ), **स स्वामी**-அந்த மஹானே, **मम देशिकः**-என் குரு, **तदितरः**-மற்றெவரும், **नाम्नापि**-பெயரால் கூட, **नाम्नायते**- குறிப்பிடப்படுகிறதில்லை.

இவருடைய தகப்பனுர் மஹாவித்வான் சிறந்த ஆஸ்திகர். இவர் இரண்டாவது பிள்ளையாகப் பிறந்த

போதிலும் இவர் கர்பத்திலிருக்கும்பொழுது பும்ஸவனம் செய்தார். சாஸ்திரத்தில் அசையாத நம்பிக்கை இருந்த தால் அன்றையதினமே தனக்குப் பிறக்கப்போவது புருஷ ப்ரஜைதான் என்று தீர்மானித்துத் தன் சிஷ்யனிடம் கலந்துகொண்டு பிறக்கப்போகும் குழந்தைக்குப் பெயரும் தீர்மானித்துவிட்டார். இவர் ஸந்யாஸம் பெறுவதற்கு முன்னாலேயே சின்னஞ்சிறு வயதில் ஸ்ரீ நரஸிம்மபாரதீ ஸ்வாமிகள் இவரிடம் 'உனக்கு என்ன வேண்டும்' என்று கேட்டதற்கு 'अयं दानकालस्त्वहं दानपात्रं भवानेव दाता त्वदन्यं न याचे। भवद्भक्तिमेव स्थिरां देहि मह्यं कृपाशील शंभो कृतार्थोऽस्मि तस्मात्॥' என்ற சிவபுஜங்க சுலோகத்தைச் சொன்ன மஹான் இவர். ஸந்யாஸம் பெற்ற தினம் ராத்திரி தூக்கத்தில் கூட- सर्वोऽहम् என்ற ஞான அனுபவத்தைப் பெற்ற மஹான் இவர். (10)

(அ) இனி இவர் கீதாசார்யர் சுட்டிக்காட்டியிருக்கிற 'பரமயோகி,' 'कृत्स्नकर्मकृत्' (எல்லா காமாக்களையும் சரிவர செய்தவர்) என்னும் குணங்களை விவரிக்கிறார் :—

यः कल्याणपुरे विशालमतुलं निर्माप्य कंचिन्मठं
सद्विद्याप्रचयाय तत्र विदुषः साकं महाध्येतृभिः।
संस्थाप्याशनवस्त्रवासनिलयान्दत्वाऽऽत्मविद्यामपात्
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते॥

ய: கல்யாணபுரே விசாலமதுலம் நிர்மாப்ய கஞ்சின்மடம்
ஸத்வித்யா ப்ரசயாய தத்ர விதுஷ: ஸாகம் மஹாத்யேத்ருபி: ।
ஸம்ஸ்த்தாப்யாசந வஸ்த்ர வாஸ நிலயான் தத்வாZZத்மவித்யாமபாத்
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

ய:-எவர், कल्याणपुरे-பங்களூர் என்னும் கல்யாண புரத்தில், विशालं-விஸ்தாரமானதும், अतुलं-நிகரற்றதுமான कंचिन्मठं-ஒரு மடத்தை, सद्विद्याप्रचयाय-ப்ரஹ்ம வித்யையின்

அபிவிருத்திக்காக, **निर्माप्य**-கிர்மாணம் செய்து, **तत्र**-அவ்விடத்தில், **महाध्येतृभिः साकं**-சிறந்தமாணவர்களோடு கூட, **विदुषः**-வித்வான்களான அத்யாபகர்களை, **संस्थाप्य**-ஏற்படுத்தி, **अशनवस्त्रवासनिलयान्** - போஜனம், வஸ்திரம், ஜாகைகள் முதலியவைகளையும், **दत्वा**-கொடுத்து, **आत्मविद्यां** ஆத்ம (ப்ரஹ்ம) வித்யையை, **अपात्**-ரக்ஷித்தாரோ, **स स्वामी**-அந்த மஹானே, **मम देशिकः**-என் குரு. **तदितरः**-மற்றெவரும், **नाम्नापि**-பெயரால்கூட, **नाम्नायते** - குறிப்பிடப் படுகிறதில்லை.

பங்களூருக்கு கல்யாணபுரி என்னும் பெயர் இந்த மஹான் இட்டதே இந்த வித்யாலயத்தில் முதல் வித்யார்த்தி கோஷ்டியில் சேர்ந்து சிறந்த வித்வானுக வந்தவர் இந்த கிரந்தகர்த்தாவான ஜீவன்முக்தர் என்னும் விஷயம் குறிப் பிடத் தகுந்தது. பூர்வாசிரமத்தில் இவருக்கு நரஸிம்ம சாஸ்திரி என்று பிதா இட்ட பெயர். ஸ்ரீமடம் ஸர்வாதி காரியாயிருந்த ஸ்ரீகண்ட சாஸ்திரிகள் ஒரு முறை பங்களூர் வித்யாசாலையின் மஹிமையைப் பற்றிப் பேசுகையில் "ஒரு நரஸிம்ம சாஸ்திரியைக் கொடுத்த மஹிமையினுலேயே நம் குருநாதர் மனுேபீஷ்டம் நிறைவேறி இந்த வித்யா சாலையும் கிருதார்த்தமாகி விட்டதாகக் கருதலாம்" என்று சிலாகித்தார் என்பது குறிப்பிடத் தகுந்தது. பிரபல வித்வான்களும் ஞானிகளுமான ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி கள், விரூபாக்ஷ சாஸ்திரிகள், வைத்யநாத சாஸ்திரிகள் முதலியோர்கள் முதலாவது அத்யாபகர்கள். கிருஹஸ்த மாணவகர்களுக்கு வீடுகளும் கொடுத்து ஔபாஸனுதி ஸத்கர்மாக்கள் செய்து தர்ம ஸம்ரக்ஷணம் செய்ய வசதி களும் கொடுக்கப்பட்டன. (11)

शुद्धाद्वैतमतप्रचारणकृते वादेन जित्वा तु यां
शृङ्गाद्रौ वरचक्रराजनिलयां चक्रे जगद्देशिकः ।
यस्तस्यै निरमापयद्दृढतरं कान्तं शिलामन्दिरं
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते ॥

ஶுத்தாத்வைத மத ப்ரசாரணக்ருதே வாதேன
ஜித்வா து யாம்
ச்ருங்காத்ரௌ வரசக்ரராஜநிலயாம் சக்ரே ஜகத்தேஶிக: ।
யஸ்தஸ்யை நிரமாபயத் த்ருடதரம் காந்தம் ஶிலாமந்திரம்
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

**शुद्धाद्वैतमतप्रचारणकृते तु**-சுத்தமான அத்வைத மதத்தை பிரசாரம் செய்வதற்காக மட்டும், **वादेन**-வாதத்தில், **यां**-எவளை, **जित्वा**-ஜயித்து, **शृङ्गाद्रौ**-சிருங்ககிரியில், **वरचक्रराजनिलयां**-உத்கிருஷ்டமான சக்ரராஜ யந்திரத்தை அதிஷ்டானமாகக் கொண்டவளாக, **जगद्देशिकः**-ஶ்ரீ சங்கர குருநாதர், **चक्रे** - ஸ்தாபித்தாரோ; **तस्यै** - அவளுக்கு, **दृढतरं** - மிகவும் திடமான, **कान्तं शिलामन्दिरं**-அழகான கல்கட்டிடக் கோயிலை **यः**-எவர், **निरमापयत्**-நிர்மாணம் செய்துவைத்தாரோ, **स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते**-அந்த மஹானே என் குரு, மற்றெவரும் பெயரால்கூட குறிப்பிடப் படுகிறதில்லை.

ஆதி பகவத்பாதாள் சிருங்ககிரியில் அம்பிகைக்கு ஒரு தாரு (மரம்) மயமான விக்ரஹம் செய்து வைத்தார். ஶ்ரீ வித்யாரண்யர் அதை ஸ்வர்ணமயமாக மாற்றினார். வெகு காலத்திற்குப்பிறகு கோவில் ஜீர்ணமாகிவிட்டது தன் குருநாதர் அந்த ஆலயத்தை அழகான கல் கட்டிடமாகக் கட்டிவைத்தார் என்பதைக் குறிப்பிடுகிறார். இந்தக்கோவில் கும்பாபிஷேகத்தை நடத்திவைத்தது இந்த கிரந்தகர்த்தாவாகிய ஞானி என்பது ஞாபகப்படுத்தப்படுகிறது. *(12)*

**यः श्रीशंकरदेशिकेन्द्रजननस्थानं विदित्वा चिरात्**
**कृत्वा चात्मवशं मुदा धनचयैर्निर्माप्य सन्मन्दिरम् ।**
**तत्र स्थापयतिस्म शंकरगुरोर्देव्याश्च मूर्तिं गिरां**
**स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते ॥**

ய: ஶ்ரீ சங்கர தேஶிகேந்த்ர ஜநந ஸ்தானம் விதித்வா சிராத்
க்ருத்வா சாத்மவஶம் முதா தனசயைர் நிர்மாப்ய
ஸன்மந்திரம் ।

தத்ர ஸ்தாபயதிஸ்ம சங்கரகுரோர் தேவ்யாச்ச
மூர்த்திம் கிராம்
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே॥

यः-எவர், श्रीशंकरदेशिकेन्द्रजननस्थानं - ஸ்ரீசங்கரபகவத்பாதாள் பிறந்த இடத்தை, विदित्वा-தெரிந்தெடுத்து, चिरात्-வெகுகாலமாக, आत्मवशं च-தன் ஸ்வாதீனத்திற்குள்ளாக, कृत्वा-செய்துகொண்டு, मुदा-சந்தோஷமாக, धनचयैः- அதிகமான பணத்தால், सन्मन्दिरं - சிறந்த ஆலயத்தை, निर्माय-கட்டி, तत्र-அதில், शंकरगुरोः-சங்கர பகவத்பாதாளுக்கும், गिरां देव्याश्च-வாக்தேவிக்கும், मूर्ति-விக்ரஹத்தை, स्थापयतिस्म-ஸ்தாபித்தாரோ, स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते- அவரே என் குரு, மற்ருெருவரும் பெயரால்கூட குறிப்பிடப்படுகிறதில்லை.

தன் குருநாதர் செய்வித்த பிரஸித்தமான காலடி பிரதிஷ்டை என்பது ஒரு அமானுஷமான செயல். முதலில் பகவத்பாதாளின் ஜனன ஸ்தலத்தைத் தன் தபோ மஹிமையினுலும், ஞான திருஷ்டியினுலும் கண்டுபிடித்தார். மிலேச்சர்களாலும், கிருஸ்தவர்களாலும் அந்த இடம் வியாபிக்கப்பட்டிருந்தது. அனந்தசயனம் ராஜ பரம்பரையின் ஸஹாயத்தால் சிரமப்பட்டு அதைத் தன் ஸ்வாதீனமாக்கிக்கொண்டார். அவ்விடம் சங்கரருக்கும், சாரதாம்பாளுக்கும் ஆலய நிர்மாணம் செய்து விக்ரஹங்களை ஸ்தாபித்து பிரதிஷ்டை செய்வித்தார். ஆர்யாம்பாள் பகவத்பாதாளின் தாயார். பராசக்தியே அவள். அவள் ஞாபகார்த்தமாக ஒரு துளசிமடம் மட்டும் இருந்து வந்தது இப்பவும் இது இருக்கிறது. தன் குருநாதர் சாரதாம்பாளுக்குத் தான் ஔரஸ புத்திரன் என்பதை ஸ்தோத்திரங்களில் விளக்கியிருக்கிருர். இரண்டுபேரிடத்திலும் தனக்கு இருந்த அபேத புத்தியைக் காண்பிவிக்கக் கூடியதாக சாரதாதேவிக்கு ஒரு மூர்த்தி ஏற்படுத்தியிருக்கிருர். அதையே இந்த சுலோகத்தில் குறிப்பிடுகிருர். (13)

இனி அவருடைய ஆத்ம குணங்களை வர்ணிக்கிறார்:—

सत्यं वाचि दया नतेषु पटुता धर्माध्वसंरक्षणे
सौजन्यं सुजने भृशं विमुखता दुष्टेषु यस्याभवत् ।
रक्तिर्ब्रह्मणि निन्दितेषु विषयेष्वासीद्विरक्तिर्दृढा
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

ஸத்யம் வாசி தயா நதேஷு படுதா தர்மாத்வ ஸம்ரக்ஷணே
ஸௌஜன்யம் ஸுஜநே ப்ருஶம் விமுகதா துஷ்டேஷு
யஸ்யாபவத் ।
ரக்திர் ப்ரஹ்மணி நிந்திதேஷு விஷயேஷ்வாஸீத் விரக்திர்
த்ருடா
ஸ ஸ்வாமீ மம தேஶிகஸ் ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

यस्य—எவருக்கு, वाचि—வாக்கில், सत्यं—ஸத்யமும், नतेषु—வணங்குகிறவர்களிடம், दया-கருணையும், धर्माध्वसंरक्षणे-தர்ம மார்க்க ஸம்ரக்ஷணத்தில், पटुता-ஸாமர்த்யமும், सुजने-நல்லவர்களிடம், भृशं सौजन्यं-அதிகமான ஸ்நேகமும், दुष्टेषु विमुखता துஷ்டர்களிடம் ஔதாஸீன்யமும், अभवत्—இருந்ததோ ब्रह्मणि—ப்ரஹ்மத்தில், रक्तिः—ஈடுபடுதலும், निन्दितेषु विषयेषु—நிந்திக்கத்தகுந்த விஷயங்களில், दृढा विरक्तिः—திடமான வைராக்யமும், आसीत्-இருந்ததோ, स स्वामी मम देशिकः-அந்த மஹானே என் குரு, तदितरः—மற்றெவரும், नाम्नापि नाम्नायते—பெயரால் கூட குறிப்பிடப்படுகிறதில்லை.

யோக ஸூத்ரத்தில் கண்ட मैत्रीकरुणामुदितोपेक्षाणां सुखदुःखपुण्यापुण्यविषयाणां भावनातश्चित्तप्रसादनम् என்னும் ஸூத்திரார்த்தத்தைத் தெளிவுபடுத்துகிறது இந்த சுலோகம் நமக்கு. அவர் பேசுவது எல்லாம் ஸத்யமாகத்தானிருக்கும். அவருடைய தயையானது பக்தர்களின் எவ்விதத் துன்பத்தையும் போக்கவல்லது. இக்கலிகாலத்தில் தர்மமார்க்கத்தை நிலைநிறுத்துவதற்கு வேண்டிய உபாயங்களெல்லாம் அறிந்து அதை நடத்துபவர். நல்லோர்களிடம் அன்பும் தீயோர்களிடம் ஔதாஸீன்யமும் கொண்டவர். ப்ரஹ்மம்

ஒன்றிலேயே பற்றுதலுள்ளவர். உலக விஷயங்களில் சிறிதும் பற்றில்லாதவர். இத்தனைச் சிறப்புக்கொண்ட குருநாதரைத் தவிற வேறு யாரைச் சரணமடைவேன்?

(அ) கடைசியாகத் தன் குருவினிடம் காணப்பட்ட பக்தியின் சிறப்பையும் ரீதியையும் குறிப்பிடுகிருர்:—

यस्यासीद्दृढभावना पथि कृतास्वेधोमृदश्मादिभि-
र्देवानां प्रतिमासु दृष्टिविषयं यातास्वकस्मादपि ।
पूजास्तोत्रजपादिकर्मसु दृढा तादात्म्यधीरञ्जसा
स स्वामी मम देशिकस्तदितरो नाम्नाऽपि नाम्नायते ॥

யஸ்யாஸீத் த்ருடபாவநா பதி க்ருதாஸ்வேதோ
ம்ருதச்மாதிபி:
தேவாநாம் ப்ரதிமாஸு த்ருஷ்டிவிஷயம் யாதாஸ்வ
கஸ்மாதபி ।
பூஜாஸ்தோத்ரஜபாதிகர்மஸு த்ருடா தாதாத்ம்யதீ
ரஞ்ஜஸா
ஸ ஸ்வாமீ மம தேசிகஸ்ததிதரோ நாம்நாபி நாம்நாயதே ॥

एधोमृदश्मादिभि:—மரம், மண், கல், முதலியவற்ருல், कृतासु—செய்யப்பட்ட देवानां—தேவதைகளின், प्रतिमासु—விக்ரஹங்கள், अकस्मादपि—எதிர்பாராமலே, पथि—தன் ஸஞ்சார மார்க்கத்தில், दृष्टिविषयं—தன் பார்வைக்குஇலக்காக, यातासु—அடைந்தாலே, दृढभावना—அவைகளில் திடமான தேவதா பாவனையும், पूजास्तोत्रजपादिकर्मसु—பூஜை, ஸ்தோத்திரம் செய்தல், ஜபம் முதலான கர்மாக்களில், अञ्जसा—உடனே, दृढा—பலமாக, तादात्म्यधी:—அந்தந்த தேவதாத்மபாவமும், यस्य—எவருக்கு, आसीत्—ஏற்பட்டதோ, स स्वामी मम देशिकस्तदितरो नाम्नापि नाम्नायते—அந்த மஹானே என் குரு. மற்றெவரும் பெயரால்கூட குறிப்பிடப்படுகிறதில்லை.

தென் இந்தியாவில் நம் குருநாதர் தர்சிக்காத முக்யமான க்ஷேத்திரமோ, தேவதையோ கிடையாது என்று சொல்லலாம். அதே பிரகாரம் அந்தந்த தேவதையை

உத்தேசித்து அவ்வப்பொழுது அவர் துதிப்பதும் வழக்கம். பக்திஸுதா தரங்கிணி என்னும் கிரந்தத்தில் இந்த ஸ்தோத்ரங்களைக் காணலாம். அவைகளில் ஒரு முக்ய அம்சம் என்னவென்றால் அந்தந்த தேவதை தன்னெதிரில் நின்று தன்னுடன் ஸம்பாஷித்து வரும் முறையில் இருக்கும். **दृढभावना, तादात्म्यधीः** என்ற விசேஷணங்களால் இந்த ஆச்சர்யகரமான பக்தியைக் குறிப்பிட்டிருக்கிறார். பூஜை களில் நைவேத்யங்கள் கூட அதிகச் சூடாகவோ, குளிர்ந்த தாகவோ இருக்க ஸஹிக்கமாட்டார். தேவதைகள் போஜனம் செய்வதாகவே அவர் பாவனை. இது விஷயங் களை பக்திஸுதாதரங்கிணியில் அவருடைய ஸ்தோத்ரங் களில் பார்க்கலாம். பொதுவாக அவர் பக்தியின் தன்மை யையும், பக்திக்கு அங்கமாக இருக்கவேண்டிய விஷயங் களையும் சுருக்கமாக அவர் வாக்கிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். உதாஹரணத்திற்காக ஒரு சுலோகம் மட்டும் இங்கு காட்டப்படுகிறது:—

पापौघं ध्वंसयित्वा बहुजनिरचितं किंच पुण्यालिमारा-
त्संपाद्यास्तिक्यबुद्धिं श्रुतिगुरुवचनेष्वादरं भक्तिदार्ढ्यम् ।
देवाचार्यद्विजातिष्वपि मनुनिवहे तावकीने नितान्तं
विद्यां शुद्धां च बुद्धिं कमलजदयिते सत्वरं देहि मह्यम् ॥

பாபௌகம் த்வம்ஸயித்வா பஹுஜனி ரசிதம் கிம் ச
புண்யாளிமாராத்
ஸம்பாத்யாஸ்திக்ய புத்திம் ச்ருதிகுருவசனேஷ்வாதரம்
பக்தி தார்ட்யம் ।
தேவாசார்ய த்விஜாதிஷ்வபி மநுநிவஹே தாவகீநே
நிதாந்தம்
வித்யாம் சுத்தாம் ச புத்திம் கமலஜதயிதே ஸத்வரம்
தேஹி மஹ்யம் ॥

இந்த சுலோகத்தின் தாத்பர்யங்களை விளக்கமாக பிரதி பலிக்கிறது நம் குருநாதாள் வாக்விலாஸம். இதைக் காட்டி லும் அதிகம், நாம் ஜன்மஸாபல்யம் அடைய என்ன தேவை?

# ॥ गुरुप्रार्थनास्तोत्रम् ॥

## குரு ப்ரார்த்தனா ஸ்தோத்ரம்

पृथ्वीमण्डलराजमाननृपमौल्याभात्किरीटोज्ज्वल-
द्रत्नाभाञ्चितपादपद्मयुगलश्रीमद्गुरो सत्वरम् ।
त्वत्पादैकशरण्यमन्दमतयेऽमुष्मै जनाय प्रभो
हस्तालम्बनमादराद्वितर मां दुःसंसृतेस्तारय ॥ १ ॥

*ப்ருத்வீமண்டல ராஜமாந ந்ருப மௌள்யாபாத் கிரீடோ*
*ஜ்வலத்*
*ரத்நாபாஞ்சித பாதபத்ம யுகள ஸ்ரீமத்குரோ ஸத்வரம் ।*
*த்வத் பாதைக ஶரண்ய மந்த மதயேऽமுஷ்மை ஜநாய*
*ப்ரபோ*
*ஹஸ்தாலம்பன மாதராத் விதர மாம் துஸ்ஸம்ஸ்ருதேஸ்*
*தாரய ॥*

**पृथ्वीमण्डल**-பூமண்டலம் முழுவதும், **राजमान**-(கீர்த்தி யுடன்) பிரகாசிக்கிற, **नृप**-அரசர்களின், **मौल्याभात्**-சிரஸில் விளங்கும், **किरीटोज्ज्वलत्**-கிரீடத்தில் பிரகாசிக்கிற, **रत्नाभाञ्चित**-ரத்னங்களின் ஒளியுடன் கூடிய, **पादपद्मयुगल**-இரண்டு திருவடித்தாமரைகளை உடைய, **श्रीमद्गुरो**-சோபையுடன் கூடிய குருவே, **सत्वरं**-சீக்கிரம், **त्वत्पादैकशरण्य**-உங்கள் திருவடிகள் ஒன்றையே ரக்ஷகமாகக் கொண்ட, **मन्दमतये**-புத்தியில்லாத, **अमुष्मै जनाय**-இந்த ஜனத்திற்கு, **प्रभो**-ப்ரபுவே **आदरात्**-அன்புடன், **हस्तालम्बनं**-திருக்கைகளை ஆச்ரயமாக, **वितर**-கொடுங்கள், **दुस्संसृतेः**-கெட்டதான ஸம்ஸாரத்திலிருந்து, **मां**-என்னை, **तारय**-கரையேற்றுங்கள்.

பூவுலகிலுள்ள எல்லா அரசர்களும் உங்கள் திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்கிறார்கள். அப்பொழுது அவர்கள் சிரஸ்ஸில் தரித்துள்ள கிரீடங்களில் பதிக்கப்பட்ட ரத்னங்களின் ஒளி உங்கள் திருவடிகளில்

பட்டு மிகச் சோபையுடன் விளங்குகிறது. ஜகத்குருவான தாங்கள் பூலோகம் முழுவதற்குமே ஆசார்ய ஸ்தானத்தில் இருப்பதாலும் தபஸ்வியாகவும், ஸுசீலராயும் இருந்து அருள்மாரி பொழிவதாலும் இம்மஹிமைகளைக் கேட்டு இப் பூவுலகிலுள்ள பற்பல மஹாராஜர்கள் தமக்கும் தம் தம் தேசத்திற்கும் நன்மைகள் ஏற்பட தங்கள் அனுக்ரஹத்தைப் பெறத் தங்களையண்டித் திருவடிகளை வணங்குகிறார்கள். அவர்கள் எல்லோரும் சிறந்த புத்திமான்கள். நன்மைகளை அடைய பற்பல உபாயங்களை அறிந்தவர்கள். அவற்றில் தங்கள் திருவடிகளில் வணங்குவதையும் ஓர் உபாயமாகக் கைக்கொண்டுள்ளார்கள். அதுவும் இவ்வுலக போகத்திற் காகத்தான். நானோ மந்தபுத்தி. தங்கள் திருவடிகளில் சரணமடைவது ஒன்றையே உபாயமாகக் கொண்டுள்ளேன். இதைத்தவிற வேறொன்றும் எனக்குத் தெரியாது. வாஸ்த வத்தில் என் கோரிக்கை நிறைவேற வேறு உபாயமும் கிடையாது. மற்றவர்களைப்போல நான் விஷய ஸுகத்தை விரும்பவில்லை. பிறவி, மரணம் என்னும் ஸம்ஸார ஸாகரத்தி லிருந்து அக்கரை சேரவே நான் விரும்புகிறேன். இதற்கு ஸத்குரு சரணத்தை சரணமடைவதைத் தவிற வேறு உபாயமே கிடையாது. தங்களைத் தவிற வேறுகதி எனக் கில்லை. தாங்கள் குரு ஸ்தானத்திலிருப்பதால் இதுதான் தங்களுக்கு உகந்ததான காரியம். ப்ரபுவான தங்களுக்கு எல்லா ஸாமர்த்தியமும் உண்டு. ஸம்ஸாரஸாகரத்தில் அமிழ்ந்தித் தத்தளிக்கும் என்னை விரைவில் ப்ரீதியுடன் கை தூக்கிவிட்டால் போதுமானது. (1)

श्रीमच्छंकरदेशिकेन्द्ररचिते पीठे जगद्देशिक
त्वादृक्षाः शिवरूपिणोऽखिलविदो ब्रह्मस्थिता वर्तितुम् ।
युक्तं कोऽहमतीव मन्दधिषणो बाह्येषु सक्तोऽधुना
स्थातुं तद्भगवान्भवान्करुणया मामुद्धरत्वञ्जसा ॥ २ ॥

ஸ்ரீமச்சங்கர தேசிகேந்த்ரரசிதே பீடே ஜகத்தேசிக
த்வாத்ருக்ஷா: சிவரூபிணோऽகிலவிதோ ப்ரஹ்மஸ்திதா
வர்திதும் ।

யுக்தம் கோऽஹமதீவ மந்ததிஷணோ பாஹ்யேஷு
ஸக்தோऽதுநா
ஸ்தாதும் தத்பகவான் பவான் கருணயா
மாமுத்தரத்வஞ்ஜஸா ||

**जगद्देशिक**-லோக குருவே, **श्रीमच्छंकरदेशिकेन्द्ररचिते**-ஆசார்யசிரேஷ்டர்களான ஸ்ரீசங்கரபகவத்பாதரால் ஸ்தாபிக்கப்பட்ட, **पीठे**-ஸ்ரீசாரதாபீடத்தில், **शिवरूपिणः**-சிவஸ்வரூபமாக இருப்பவர்களும், **अखिलविदः**-எல்லாமறிந்தவர்களும் **ब्रह्मस्थिताः**-ப்ரஹ்மத்தில் நிலைத்திருப்பவர்களுமான, **त्वादृक्षाः**-உங்களைப்போன்றவர்கள், **वर्तितुं**-இருப்பதற்கு, **युक्तं**-உசிதம். **अधुना**-இப்பொழுது, **स्थातुं**-இப்பீடத்தில் இருப்பதற்கு, **अतीव**-மிகவும், **मन्दधिषणः**-அல்பமான புத்தியுள்ளவனும், **बाह्येषु**-வெளி விஷயங்களில், **सक्तः**-ஈடுபட்டவனுமான, **अहं**-நான், **कः**-யார்? **तत्**-ஆகையால், **भगवान्**-பகவானான, **भवान्**-தாங்கள், **करुणया**-தயவினால், **अञ्जसा**-சீக்கிரம், **मां**-என்னை, **उद्धरतु**-கைதூக்கிவிடவேணும்.

பரமசிவனே ஸ்ரீ சங்கரபகவத்பாதராக அவதரித்து சிருங்ககிரியில் ஸ்ரீ சாரதாபீடத்தை ஸ்தாபித்து இந்த பீடாதிபதிகளாக ஜகத்குருபரம்பரை விளங்கி வரும்படியாகவும் அனுக்ரஹித்தார்கள். ஸர்வக்ஞர்களாயும் ப்ரஹ்ம நிஷ்டர்களாயும் பரமசிவனைப் போலவே அளவற்ற மஹிமையுள்ளவர்களாயுமிருப்பவர்கள்தான் ஸ்ரீசாரதா பீடாதிபதிகளாக இருந்து உலகத்திற்கு அனுக்ரஹம் செய்ய முடியும். தங்களிடமும், தங்களுக்கு முன்னாலிருந்த எல்லா ஆசார்யர்களிடமும் இவைகளெல்லாம் பூர்ணமாக உள்ளன. ஆதலால் இதுவரை நீங்களெல்லோரும் இந்தப் பீடாதிபதிகளாக இருந்து வந்தது மிகவும் உசிதமே. இப்பொழுது நான் இந்த பீடாதிபதியாக இருந்து வருகிறேன். ஆனால் என்னிடம் இதற்கு வேண்டிய யோக்யதை கொஞ்சமும் இல்லை. உங்களிடமுள்ள மஹிமைகளைப் பார்த்து எல்லோரும் உங்களைப் பரமசிவனாகவே எண்ணினார்கள். (காலடியில் பகவத்பாதர் கொடுத்த சாபத்தை நீக்கி, அதை யாத்திராஸ்தலமாகச் செய்தது முதலான காரியங்

களால் குருநாதரை சங்கர பகவத்பாதரின் அம்ச மென்றே பெரியோர்கள் சொல்வார்கள். மேலும் தகப்பனர் இட்ட பெயரிலும் குருநாதாள் கொடுத்த தீக்ஷாநாமாவிலும் 'சிவ' என்று இருப்பதைக் காணலாம்) அவ்விதமஹிமை என்னிடம் ஒன்றும் இல்லை. நீங்கள் எல்லாமறிந்தவர்கள். நான் ஒன்றுமறியாதவன் நீங்கள் ப்ரஹ்மஸ்வரூபத்தில் நிலைத்து நிற்பவர்கள். நானே வெளி விஷயங்களில் மனதைச் செலுத்துகிறவன். இப்பீடத்தில் இருக்க நான் அர்ஹனில்லை. பகவத் ஸ்வரூபமான தாங்கள் கிருபை புரிந்து இத்தகுதிகளை எனக்கு அருளுவதுடன் விரைவில் இந்த ஸம்ஸாரஸாகரத்திலிருந்தே கைதூக்கி அநுக்ரஹிக்க வேண்டும். (2)

नित्यानित्यविवेकविरक्तिशमादिममुमुक्षुताहीनम् ।
दृष्ट्वा कृपार्द्रदृष्ट्या मुक्त्यध्वनि पथिकमातनुष्व गुरो ॥

நித்யாநித்ய விவேக விரக்தி ஶமாதிம முமுக்ஷுதா ஹீநம் ।
த்ருஷ்ட்வா க்ருபார்த்ர த்ருஷ்ட்யா முக்த்யத்வனி
பதிகமாதநுஷ்வ குரோ ॥

गुरो–ஹே குரோ, नित्यानित्यविवेक–இது நித்யம், இது அநித்யம் என்று பாகுபடுத்தித் தெரிந்துகொள்வது, विरक्ति வைராக்யம், शमादिम–மனோநிக்ரஹம் முதலியவை, मुमुक्षुता–மோக்ஷமடைவதில் தீவ்ர விருப்பம், हीनं–இவைகளற்றவனாயிருப்பதை, दृष्ट्वा–பார்த்து, कृपार्द्रदृष्ट्या–கருணை நனைந்த கடாக்ஷத்தால், मुक्त्यध्वनि–மோக்ஷ வழியில், पथिकं ஸஞ்சரிப்பவனாக, आतनुष्व–செய்யவேணும்.

முதலிரண்டு சுலோகங்களில் கை தூக்கிவிடவேண்டுமென்று பொதுவாகச் சொல்லிவிட்டு இந்த சுலோகத்தில் தனக்கு வேண்டியதைக் கேட்கிறார். விவேகம் முதலான ஸாதன சதுஷ்டயத்தை (நான்கு ஸாதனங்களை)ப் பெற்றிருப்பவன்தான் முக்தியை அடைவிக்கும் வழியில் ஸஞ்சாரம் செய்யமுடியும். நான்கு ஸாதனங்களில் முதலாவது விவேகம். ஆத்மா நித்யம், சாச்வதமானது, ஸத்யம்.

எப்பொழுதும் ஒரேவிதமாக இருப்பது; அனுத்மா அநித்யம் மறைந்துபோகக்கூடியது, பொய் என்று ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்துகொள்வது நித்யாநித்ய விவேகமெனப்படும். அநாத்ம வஸ்துக்கள் எல்லாவற்றிலும் ஆசைகொள்ளாமையே விரக்தி என்ற இரண்டாவது ஸாதனம். சமம் (மனோநிக்ரஹம்) தமம் (இந்திரியநிக்ரஹம்) திதிக்ஷா (பொறுமை) உபரதி (மனதை உள்நோக்கச் செய்தல் அல்லது ஸந்யாஸம்) சிரத்தை (சாஸ்திரத்திலும் குரு வாக்யத்திலும் ப்ராமாண்ய நிச்சயம்) ஸமாதானம் (மனதை நிலை நிறுத்துதல்) இவ்வாறும் மூன்ருவது ஸாதனம். முமுக்ஷுதை (அக்ஞான கல்பிதமான பந்தங்களிலிருந்து விடுதலையடைய தீவ்ரமான விருப்பம்) நான்காவது. இந்நான்கு ஸாதனங்களும் என்னிடம் இல்லையென்பது தங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனால் முக்தி வழியில் செல்ல ஆசை மட்டும் பலமாக எனக்கு இருக்கிறது ஆகையால் தாங்கள் தான் கருணை கடாக்ஷத்தை என்மேல் செலுத்தி இந்நான்கு ஸாதனங்களும் கைகூடி வரும்படி செய்து முக்தி வழியில் செல்லும்படியும் அனுக்ரஹம் செய்யவேண்டும். (3)

(அ) தான் குரு பாதங்களையே சரணமடைந்ததற்குக் காரணம் கூறுகிருர் :—

ज्ञानेतरेष्टदाने चतुराः कल्पद्रुमणिमुखाः सन्तु ।
लोकत्रयेऽपि सत्यं ज्ञानदवस्तु त्वया विना नास्ति ॥

ஞானேதரேஷ்ட தானே சதுரா: கல்பத்ருமணிமுகா: ஸந்து ।
லோகத்ரயே௳பி ஸத்யம் ஞானதவஸ்து த்வயா விநா நாஸ்தி ॥

**ज्ञानेतरेष्टदाने**-ஞானத்தைத் தவிர வேறு விரும்பிய பொருளைக்கொடுப்பதில், **कल्पद्रुमणिमुखाः**-கல்பகவிருக்ஷம், சிந்தாமணி முதலியவைகள், **चतुराः**-திறமையுள்ளதுகளாக **सन्तु** - இருக்கட்டும். **लोकत्रयेऽपि** - மூவுலகிலும், **सत्यं**- உண்மையாக, **ज्ञानदवस्तु**-ஞானத்தைக் கொடுக்கும் வஸ்து, **त्वया विना नास्ति**-உம்மைக் காட்டிலும் வேறு இல்லை.

உலகில் ஒருவர் விரும்பும் பொருளைக் கொடுப்பதற்கு எத்தனையோ வள்ளல்கள் இருக்கிருர்கள். அவர்களால் முடியாவிட்டாலும்கூட தேவலோகத்திலுள்ள கல்ப விருக்ஷத்தையும் சிந்தாமணியையும் வேண்டினுல் நாம் விரும்பும் எப்பொருளையும் பெற்றுவிடலாம். அப்படியிருக்க ஏன் குருவையே சரணமடைகிறீர்கள் என்ருல் அதற்கு பதில் கூறுகிருர். வாஸ்தவம்தான். ஞானத்தைத் தவிற மற்றப் பொருளை விரும்புபவர்கள் கல்பகவிருக்ஷத்தையோ, சிந்தாமணி ரத்னத்தையோ, தேவதைகளையோ பிரார்த்தித்து அவைகளைப் பெறட்டும். அப்பொருள்களைக் கொடுக்கும் திறமை அவைகளுக்குக் கட்டாயம் உண்டு. ஆனுல் எனக்கு அவைகளில் சிறிதும் ஆசை இல்லை ஞானம் ஒன்றைத்தான் நான் வேண்டுகிறேன். ஞானத்தைக் கொடுப்பதற்கோ அவைகளுக்குக் கொஞ்சமும் தகுதியில்லை ஆசார்யர் ஒருவர்தான் ஞானத்தைத் தரமுடியும். ஆகையினுல்தான் நான் உங்களையே சரணமடைந்திருக்கிறேன். (4)

पापीयानिति मत्वा मां यदि लोकैकदेशिक त्यजसि ।
सर्वजनत्यक्तमिमं को वा परिपालयेत्कृपाजलधे ॥ ५ ॥

பாபீயானிதி மத்வா மாம் யதி லோகைகதேஶிக த்யஜஸி |
ஸர்வஜந தயக்தமிமம் கோ வா பரிபாலயேத் க்ருபாஜலதே ॥

**लोकैकदेशिक**-உலகம் முழுவதற்கும் ஒரே ஆசார்யராக இருப்பவரே, **पापीयान्**-(நான்) மிகுந்த பாபம் செய்தவன் **इति**-என்று, **मत्वा**-எண்ணி, **मां**-என்னை, **यदि त्यजसि**-(நீங்கள்) கைவிட்டுவிடுவீர்களேயாஞல், **कृपाजलधे**-கருணைக் கடலே, **सर्वजनत्यक्तं**-எல்லா ஜனங்களாலும் கைவிடப்பட்ட **इमं**-இந்த என்னை, **को वा**-யார்தான், **परिपालयेत्**-காப்பாற்றுவார்?

"பாபம் மிகுந்த உன்னை நான் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்" என்று தாங்கள் கேட்கலாம். தங்களைத் தவிற வேறு யாராவது என்னை ஏற்றுக்கொள்பவர் இருந்தால்

தாங்கள் சொல்வது உசிதமாகலாம். உலகில் எல்லோரும் என்னைக் கைவிட்டுவிட்டார்கள். இந்த நிலையில் தாங்களும் கைவிட்டுவிட்டால் என் கதி என்னவாகும்? 'लोकैकदेशिक' (உலகம் முழுவதற்கும் ஒரே ஆசாரியராக இருப்பவரே) என்பதால் புண்யசாலிகளைப் போல பாபிகளையும் காப்பாற்றுவது தங்கள் பொறுப்பு என்பது காட்டப் படுகிறது. 'कृपाजलधे' (கருணைக்கடலே) என்பதால் தாங்கள் அவசியம் காப்பாற்றுவீர்கள் என்ற உறுதி த்வனிக்கிறது. பாபிகளைக் காப்பாற்றுவதில்தான் தங்கள் கிருபை வெளிப்படுகிறது. (5)

त्वत्पादाम्बुजयुगलं हित्वा नान्या गतिर्हि मे लोके ।
इति मत्वा तव चरणौ शरणं प्राप्तोऽस्मि करुणया रक्ष ॥ ६ ॥

த்வத்பாதாம்புஜயுகளம் ஹித்வா நாந்யா கதிர் ஹி
மே லோகே ।
இதி மத்வா தவ சரணௌ ஶரணம்
ப்ராப்தோऽஸ்மி கருணயா ரக்ஷ ॥

लोके-உலகில், मे-எனக்கு, त्वत्पादाम्बुजयुगलं हित्वा-தங்களுடைய தாமரைபோன்ற இரு திருவடிகளைத் தவிர, अन्या-வேறு, गतिः-கதி, नहि-இல்லை, इति-என்று, मत्वा-எண்ணி, तव-உம்முடைய, चरणौ-திருவடிகளை, शरणं-சரணமாக, प्राप्तोऽस्मि - அடைந்திருக்கிறேன். करुणया-தயவினால், रक्ष-காப்பாற்றும்.

சரணாகதி என்பது அருளைப் பெறுவதற்குச் சிறந்த உபாயம். ஆனால் அனந்யபாவத்துடன் அதாவது "உங்களைத்தவிர வேறுகதியில்லை, நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்" என்ற எண்ணத்துடன் சரணமடைவதுதான் உடனேயே பலனைக் கொடுக்கும். இம்மாதிரியாக ஒருவர் தம் பாதங்களையே சரணமடைந்துவிட்டால் அவர் யாராக இருந்தாலும் எந்த நிலையிலிருந்தாலும் அவரைக் காப்பாற்றுவது மஹான்களின் ஸ்வபாவமாகும். தாங்களோ கருணை நிரம்பியவர்கள். என்னிடம் எந்தவிதமான தகுதியும்

இல்லாவிட்டாலும் வேறு கதியில்லை என்ற எண்ணத்துடன் தங்கள் திருவடிகளையே சரணமடைந்திருக்கிறபடியால் கருணைகொண்டு என்னைக் காப்பாற்றவேண்டும். (6)

(அ) மூன்று சுலோகங்களால் ஸ்ரீசங்கரபகவத் பாதாசார்ய மஹிமைகளைக் காட்டி அவர் போன்றவர் தமது குருநாதர் என்று பின்னுல் கூறுகிறுர் :—

नास्तिक्यतमसि लोके सर्वजनानां हृदम्बुजातानि ।
मलिनीकुर्वति धर्मे प्रायो नष्टे सदाशिवो भगवान् ॥ ७ ॥

गुरुरूपेण धरायामवतीर्याखिलजनानवन्विपदः ।
धिक्कृतसूर्यमहोभिर्नास्तिक्यतमो विनाश्य दुर्वारम् ॥ ८ ॥

कृत्वाऽनेकामानुषकार्याणि जनैः समर्चितो निखिलैः ।
तद्विदितशंकरांशः लेभे स्वं धाम खलु विसृष्टाङ्गः ॥ ९ ॥

நாஸ்திக்ய தமஸி லோகே ஸர்வஜநாநாம்
ஹ்ருதம்புஜாதானி ।
மலிநீகுர்வதி தர்மே ப்ராயோ நஷ்டே ஸதாஶிவோ
பகவான் ॥

குருரூபேண தராயாமவதீர்யாகில ஜநாநவன் விபத: ।
திக்க்ருத ஸூர்ய மஹோபிர் நாஸ்திக்ய தமோ
விநாச்ய துர்வாரம் ॥

க்ருத்வாऽநேகாமாநுஷ கார்யாணி ஜநை:
ஸமர்சிதோ நிகிலை: ।
தத்விதித ஶங்கராம்ஶ: லேபே ஸ்வம் தாம கலு
விஸ்ருஷ்டாங்க: ॥

**लोके** – உலகில், **नास्तिक्यतमसि** – நாஸ்திக்யம் என்ற இருள், **सर्वजनानां**-எல்லா ஜனங்களுடைய, **हृदम्बुजातानि**- மனமென்னும் தாமரைகளை, **मलिनीकुर्वति** – மலினமாகச் செய்யும்பொழுது, **प्रायः**-அநேகமாக, **धर्मे** – தர்மமானது,

नष्टे-நாசமடைந்தபொழுது, भगवान्-பகவானுன, सदाशिवः-ஸதாசிவர், धरायां-பூமியில், गुरुरूपेण - குருஸ்வரூபமாக, अवतीर्य-அவதரித்து, अखिलजनान्-எல்லா ஜனங்களேயும், विपदः - ஆபத்திலிருந்து, अवन् - காப்பாற்றிக்கொண்டு, धिक्कृतसूर्यमहोभिः-சூரியனைப் பழிக்கின்ற தேஜஸ்ஸுகளால் दुर्वारं-விலக்கமுடியாத, नास्तिक्यतमः - நாஸ்திக்யம் என்ற இருளை, विनाश्य-அழித்து, अनेकामानुषकार्याणि-மனுஷ்யர்களால் செய்யமுடியாத பல காரியங்களை, कृत्वा-செய்து, निखिलैः जनैः-எல்லா ஜனங்களாலும், समर्चितः-பூஜிக்கப்பட்டவராய், तद्विदितशंकरांशः-அதனால் சங்கரரின் அம்சமென அறிந்துகொள்ளப்பட்டவராய், विसृष्टाङ्गः-உடலை விட்டுவிட்டு, स्वं धाम-தன் ஸ்தானத்தை, लेभे खलु- அடைந்தார் அல்லவா.

तत्तादृङ्महिमानं लोकानुग्रहनिबद्धदीक्षमहम् ।
वैराग्यदाननिरतं शरणं करवाणि देशिकं भक्त्या ॥ १० ॥

தத்தாத்ருங்மஹிமாநம் லோகாநுக்ரஹநிபத்ததீக்ஷமஹம் ।
வைராக்யதான நிரதம் ஶரணம் கரவாணி தேஶிகம் பக்த்யா ॥

तत्तादृङ्महिमानं-அந்த அப்பேர்பட்ட மஹிமையுள்ளவரும், लोकानुग्रहनिबद्धदीक्षं - உலகிற்கு அநுக்ரஹம் செய்வதையே விரதமாகக் கொண்டவரும், वैराग्यदाननिरतं-வைராக்யத்தைக் கொடுப்பதில் ஈடுபட்டவருமான, देशिकं-குருவை, अहं-நான், भक्त्या-பக்தியுடன், शरणं करवाणि-சரணமடைகிறேன்.

வெகு காலத்திற்கு முன்னல் எல்லாருடைய மனதிலும் நாஸ்திக்யம் குடிகொண்டு அதனுல் தர்மாசரணை குறைந்து அதர்மம் மேலிட்டபொழுது சதாசிவர் குரு உருவத்துடன் பூமியில் அவதரித்து எங்கும் ஸஞ்சரித்து தமது உபதேசங்களால் எல்லோருடைய மனதிலும் குடிகொண்டுள்ள நாஸ்திக்யத்தை விரட்டி எல்லோரையும் ஆஸ்திகர்களாக

ஆக்கி பற்பல அமானுஷ காரியங்களைச்செய்து அதன்மூலம் இவர் சங்கரரின் அவதாரம் என்று அறிந்துகொண்டாடப் பட்டவராக மனித உடலை விட்டு விட்டு ஸ்வஸ்தானமான கைலாஸத்தை அடைந்தார். அப்பேற்பட்ட ஆதிசங்கர பகவத் பாதாளுக்குச் சமமான திவ்ய மஹிமைகள் கொண்டவர் எமது குருநாதர். ஸம்ஸார தாபத்தால் துன்புறும் ஜனங்களுக்கு அருள் செய்வதையே தமது விரத மாகக் கொண்டவர். பக்தர்களின் எல்லா துக்கங்களுக்கும் மூலகாரணமான விஷய ஆசையை நீங்கச்செய்து க்ரமமாக பேரானந்தத்தைத் தருபவர். இந்த குருநாதரை பக்தியுடன் சரணமடைகிறேன். (7—10)

यन्नैसर्गिककरुणालेशमनुप्राप्य मानवा जगति ।
स्वीयाचाररताः स्युस्तं देशिकवर्यमादरान्नौमि ॥ ११ ॥

யந்நைஸர்கிக கருணாலேஶமநுப்ராப்ய மாநவா ஜகதி |
ஸ்வீயாசாரரதா: ஸ்யுஸ்தம் தேஶிகவர்யமாதராந்நௌமி ||

जगति–உலகில், यन्नैसर्गिक–எவருக்கு இயற்கையிலேயே அமைந்த, करुणालेशं–கருணையின் சிறு அம்சத்தை, अनुप्राप्य–அடைந்து, मानवाः–மனிதர்கள், स्वीयाचाररताः–தன்னுடைய தான ஆசாரத்தில் ஈடுபட்டவர்களாக, स्युः–ஆவார்களோ, तं–அந்த, देशिकवर्यं–ஆசார்ய சிரேஷ்டரை, आदरात् –பிரீதி யுடன், नौमि–வணங்குகிறேன்.

ஆசார்யாளுக்குக் கருணை வெளிக்காரணத்தால் ஏற்படக்கூடியதல்ல. இயற்கையாகவே அவர்களுக்கு அமைந்துள்ளது. காரணத்தால் ஏற்படும் கருணை சில சமயம் இல்லாமலுமிருக்கும். இயற்கையாகவே அமைந் துள்ள கருணை எப்பொழுதும் உள்ளது. சிலர் தம் கருணையைச் சிலரிடம்தான் காட்டுவார்கள். ஆசார்யாளோ தம் கருணையை எல்லா மனிதர்களிடமும் காட்டுவார்கள். அவர்களுடைய கருணையைச் சிறிதளவு பெற்றாலும்கூட அவன் எவ்வளவு துராசாரனுயிருந்தாலும் அந்த நிமிஷமே அவற்றைவிட்டு தன்னுடைய ஸதாசாரத்திலீடுபட்டு எல்லா

க்ஷேமங்களையும் பெறுவான். அந்தக்கருணை வெளிப்பட்டு நம் மேல் விழும்படி நாம் அவர்களை அணுகவேண்டியது நம் கடமையாகும். அப்பேற்பட்ட ஆசார்யாளை பக்தியுடன் வணங்குகிறேன். (11)

श्रीमद्देशिकवर्यान्वन्देऽनुदिनं शिवाभिनवपूर्वान् ।
सच्चित्सुखरूपान् सद्विद्यां ददतः स्वपादनम्रेभ्यः ॥ १२ ॥

ஸ்ரீமத்தேஶிகவர்யான் வந்தேऽநுதினம் ஶிவாபிநவ
பூர்வான் ।
ஸச்சித்ஸுகரூபான் ஸத்வித்யாம் ததத: ஸ்வபாதநம்ரேப்ய:

**स्वपादनम्रेभ्यः**-தமது திருவடிகளில் வணங்குபவர்களுக்கு **सद्विद्यां**-ப்ரஹ்ம வித்யையை, **ददतः**-கொடுக்கின்றவரும், **शिवाभिनवपूर्वान्**-சிவ, அபிநவ என்பதை முதலில் கொண்டவர்களும், **सच्चित्सुखरूपान्**-ஸச்சிதானந்தரூபருமான, **श्रीमद्देशिकवर्यान्**-சோபை பொருந்திய தேசிக சிரேஷ்டரை, **अनुदिनं**-தினமும், **वन्दे**-வணங்குகிறேன்.

ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்மபாரதீ என்பது ஆசார்யாளின் திருநாமா. இதில் ஸச்சிதானந்த என்பதும் சிவாபிநவ என்பதும் பெயரில் முன்னால் இருக்கிறது. பெயருக்குத் தக்கபடி இவர்கள் ஸச்சிதானந்த ப்ரஹ்மமாகவே விளங்குகிறார்கள். **स्वीयं साम्यं विधत्ते** குரு சிஷ்யனையும் தன்னைப்போலவே ஆக்கிவிடுகிறார் என்று பகவத்பாதர் கூறியுள்ளார்கள். இந்த ஆசார்யரும் தம் பாதத்தை சரணமென்று அடைந்துள்ள விரக்தர்களான உத்தம சிஷ்யர்களைத் தன்னைப்போல் ஸச்சிதானந்த வஸ்துவாக ஆக்குவதற்காக சாந்தோக்யத்தில் உபதேசித்தபடி **तत्त्वमसि** மஹா வாக்யத்தை உபதேசித்து ஸத்வித்யையை ப்ரஹ்ம ஞானத்தை அருளுகிறார்கள். இவரை தினமும் வணங்குகிறேன். (12)

---

## ॥ श्रीगुरुसुवर्णमालास्तोत्रम् ॥

## ஸ்ரீ குரு ஸுவர்ணமாலா ஸ்தோத்ரம்

---

[குருநாதரின் பெயரிலுள்ள ஒவ்வொரு வர்ணத்தையும் (அக்ஷரத்தையும்) வரிசையாக ஒவ்வொரு சுலோகத்திலும் முதலில் வைத்து இந்த ஸ்தோத்ரம் இயற்றப்பட்டிருப்பதால் இதற்கு 'குரு ஸுவர்ணமாலா ஸ்தோத்ரம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்ரத்திலுள்ள 20 சுலோகங்களின் முதல் அக்ஷரத்தை மட்டும் தனியாக எடுத்துச் சேர்த்துப் பார்த்தால் "श्रीश्रीसच्चिदानन्दशिवाभिनवनृसिंहभारती पातु" என்று வருவதைக் காணலாம். கடைசி சுலோகத்தில் இந்த ஸ்தோத்ரத்தை ஸத்குரு சரணங்களில் ஸமர்ப்பணம் செய்கிறார்.]

श्रीसत्संवित्सुखशिवनूतननरसिंहनामगुरुवर्यम् ।
संसारसिन्धुतारणनावं भक्तिप्रदं सदा वन्दे ॥ १ ॥

ச்ரீஸத் ஸம்வித் ஸுக ஶிவ நூதந நரஸிம்ஹநாம குருவர்யம்
ஸம்ஸார ஸிந்து தாரண நாவம் பக்திப்ரதம் ஸதா வந்தே ॥

**संसार**-ஸம்ஸாரமாகிற, **सिन्धु**-ஸமுத்திரத்தை, **तारण**-கடந்து அக்கரை சேர்ப்பதில், **नावं**-ஓடமாக இருப்பவரும், **भक्तिप्रदं**-பக்தியை அருள்பவருமான, **श्रीसत्संवित्सुख**-ஸ்ரீ ஸச்சிதானந்த, **शिवनूतन**-சிவாபிநவ, **नरसिंह**-நரஸிம்ஹ என்ற, **नाम**-பெயர் கொண்ட, **गुरुवर्यं**-ஆசார்ய சிரேஷ்டரை, **सदा**-எப்பொழுதும், **वन्दे**-வணங்குகிறேன்.

கடலைத்தாண்டி அக்கரை சேரவேண்டுமானால் கப்பலில் ஏறவேண்டும். இது இல்லாமல் முடியாது. பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸாரமும் பெரிய ஸமுத்திரம். இதைத்தாண்டி அக்கரை சேரவேண்டுமானால் அதாவது பிறப்பு இறப்பற்ற நிலையை அடையவேண்டுமானால் எமது குருநாதரை நாட வேண்டும். அவர் பக்தியை அருளி ஸம்ஸாரஸாகரத்தின் அக்கரை சேர்த்துவிடுவார். அவரை வணங்குகிறேன்.

அவருடைய பெயர் மங்களமான அத்வைதமான ஸச்சிதானந்த ப்ரஹ்மத்தைக்குறிக்கிறது. (1)

श्रीकण्ठपूजकं तं श्रीविद्याकीर्तिदानकल्पतरुम् ।
श्रीनिर्भर्त्सितभानुं श्रीशृङ्गगिरौ वसन्तमहमीडे ॥ २ ॥

ச்ரீகண்ட பூஜகம் தம் ச்ரீவித்யா கீர்த்தி தாந கல்பதரும் ।
ச்ரீநிர்பர்த்ஸித பாநும் ச்ரீச்ருங்ககிரௌ வஸந்தமஹமீடே ॥

श्रीकण्ठपूजकं–ஸ்ரீ கண்டரை, ஸ்ரீ சந்திரமௌளீசுவரரை பூஜிப்பவரும், श्रीविद्याकीर्तिं–ஞானத்தையும் கீர்த்தியையும் அல்லது ஞானத்தால் ஏற்படும் கீர்த்தியை, दान–கொடுப்பதில், कल्पतरुं-கல்பகவிருக்ஷம்போலிருப்பவரும், श्रीनिर्भर्त्सितभानुं–தனது சோபையால் சூரியனை அதட்டுபவரும், श्रीशृङ्गगिरौ–சிருங்ககிரி க்ஷேத்திரத்தில், वसन्तं–வஸிக்கிறவரும் ஆன, तं–அந்த ஆசார்யரை, अहं–நான், ईडे–துதிக்கிறேன்.

சூரியனது பிரகாசம்போல் சரீரகாந்தியுடன் கூடிய, சிருங்ககிரியில் வஸிக்கும் குருநாதர் ஸ்ரீ சந்திரமௌளீசுவரரை ஆராதிப்பவர். தன்னை அண்டியவர்களுக்கு தேவலோகத்திலுள்ள கல்பவிருக்ஷம்போல் வேண்டியதையெல்லாம் கொடுப்பார். பிறரால் கொடுக்கமுடியாத ஆத்மஞானத்தையும் தந்து அதன்மூலம் உலகில் புகழைத்தருபவர். (இப்பொழுதும் அமிருதசிலா மூர்த்தியில் ஸாந்நித்யம் கொண்டு பக்தர்களுக்கு அருள்செய்வதால் वसन्तं என்று நிகழ்காலமாகக் கூறுகிறார் (2)

सत्यं ज्ञानमितीमे सर्वे घुष्यन्ति यं हि वेदान्ताः ।
सद्गुरुमुखलभ्यं तं सततं प्रणमामि गुरुवरं भक्त्या ॥ ३ ॥

ஸத்யம் ஞாநமிதீமே ஸர்வே குஷ்யந்தி யம் ஹி
வேதாந்தா: ।
ஸத்குருமுகலப்யம் தம் ஸததம் ப்ரணமாமி குருவரம்
பக்த்யா ॥

**सत्यं ज्ञानमिति**–ஸத்யம் ஞானம் என்ற, **इमे**–இந்த, **सर्वे वेदान्ताः** – எல்லா உபநிஷத்துக்களும், **सद्गुरुमुखलभ्यं**–ஸத் குருவின் முகமாக அடையத்தகுந்த, **यं**-எந்த பரமாத்மாவைப் பற்றி, **घुष्यन्ति**–வியக்தமாகச் சொல்கிறதுகளோ, **तं**–அந்த பரமாத்மரூபியான, **गुरुवरं**–ஆசார்ய சிரேஷ்டரை, **सततं**–எப்பொழுதும், **भक्त्या**–பக்தியுடன், **प्रणमामि**–வணங்கு

'**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म**' இது முதலான உபநிஷத் வாக்யங்களெல்லாம் ஸச்சிதானந்தரூபமான பரமாத்மாவைப் பற்றி விரிவாகவும் வ்யக்தமாகவும் வர்ணிக்கின்றன. ஆனாலும் ஸத்குருவின் உபதேசம் மூலம் தான் சிஷ்யன் ப்ரஹ்மத்தை அறிந்து ஸ்வானுபவம் பெற முடியும். ஏனெனில் ஸத்குருவானவர் ஸச்சிதானந்த பரப்ரஹ்ம மாகவே விளங்குகிறார். அப்பேற்பட்ட ஸத்குருவை பக்தி யுடன் எப்பொழுதும் வணங்குகிறேன். (3)

चिदचिद्दुग्धजले यः चित्तत्रोट्या विभज्य परहंसः ।
चितमेवाङ्गीकुरुते चित्तविशुद्ध्यै द्विजाग्र्यमीडे तम् ॥

*சிதசித்துக்தஜலே யः சித்தத்ரோட்யா விபஜ்ய பரஹம்ஸः ।*
*சிதமேவாங்கீகுருதே சித்தவிஶுத்த்யை*
*த்விஜாக்ர்யமீடே தம் ॥*

**यः** – எந்த, **परहंसः** – பரமஹம்ஸர், **चित्तत्रोट्या**–புத்தி யாகிற மூக்கினால், **चिदचिद्दुग्धजले**-சித்–ஜடம் என்ற பாலை யும் நீரையும், **विभज्य**–பிரித்து, **चितमेव** சித்தை மட்டும், **अङ्गीकुरुते**–ஸ்வீகரிக்கிறாரோ, **तं**–அந்த, **द्विजाग्र्यं**–சிரேஷ்ட மான பக்ஷியை (பிராமண சிரேஷ்டரை), **चित्तविशुद्ध्यै**–மனம் தூய்மையடைவதற்காக, **ईडे** க்கிறேன்.

தனது ஆசார்யருக்கு பரமஹம்ஸர் என்ற பெயர் ஏற்பட்டதின் காரணத்தை இந்த சுலோகத்தில் காட்டுகிறார்.

பாலுடன் தண்ணீர் கலந்திருக்குமானல் ஹம்ஸமானது தனது மூக்கினுல் பாலையும் தண்ணீரையும் வெவ்வேருகப் பிரித்து தண்ணீரை விலக்கிவிட்டுப் பாலை மட்டும் உட்கொள்ளும். இந்தச் சிறப்பு ஹம்ஸத்துக்கு மட்டும்தான் உண்டு. வேருென்றுக்கும் கிடையாது. இம்மாதிரியான இதைவிட மேலான ஓர் சிறப்பு குருநாதரிடம் இருப்பதால் இவரைப் பரமஹம்ஸரென்று, சிறந்த ஹம்ஸமென்று கூறுகிருர்கள். சித்தும் ஜடமும் கலந்ததுதான் இப்பிரபஞ்சம். தண்ணீரும் பாலும் போல ஒன்ருகக் கலந்திருப்பதால் எது சித்து எது ஜடம் என்பது தெரிவதில்லை. சித்தை ஜடமாகவும் ஜடத்தை சித்தாகவும் வியவஹாரம் செய்கிருேம். ஹம்ஸமானது பாலையும் தண்ணீரையும் தனது மூக்கினுல் வெவ்வேருகப் பிரித்து பாலைமட்டும் ஏற்றுக்கொள்வது போல் குருநாதரும் தமது புத்தியால் இதுதான் சித்து, இதுதான் ஜடம் என்று பிரித்துத் தெரிந்துகொண்டு ஜடத்தைத் தள்ளிவிட்டு சித்தையே ஸ்வீகரிக்கிருர். நீர க்ஷீர விவேகத்தால் அந்த சமயத்தில் மட்டும் சிறிது பசி அடங்கி திருப்தி ஏற்படுவதுதான் பலன். சிதசித் விவேகத்தால் பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸாரம் அடியோடு நீங்கி ப்ரஹ்மாநந்தானுபவத்தால் நித்யத்ருப்தி ஏற்படுவதால் இவர் சிறந்த ஹம்ஸமாக வர்ணிக்கப்படுகிருர். இவரை உபாஸித்தால் நம் சித்தமும் பரிசுத்தியடைந்து சிதசித் விவேகம் நமக்கும் ஏற்படும். **द्विजाग्र्यः** என்பது சிறந்த பக்ஷியையும் சிறந்த பிராமணரையும் குறிக்கும். பிராமணஜன்மாவைப்பெற்றதின் பலன் சிதசித் விவேகம் அடைந்து பரமஹம்ஸராக ஆகவேண்டியதுதான் என்பதைக் காட்டுகிருர்.

आसेचनकमुखाम्बुजमानन्ददमाशु भक्तजनतायाः ।
आकण्ठपूर्णनतदयमात्मारामं नमामि लोकगुरुम् ॥ ५ ॥

ஆஸேசநகமுகாம்புஜமாநந்ததமாசு பக்தஜநதாயா: ।
ஆகண்டபூர்ணநததயமாத்மாராமம் நமாமி லோககுரும் ॥

**आसेचनकमुखाम्बुजं**-எத்தனை தடவை பார்த்தாலும் திருப்தியை உண்டுபண்ணுத தாமரை போன்ற முகமுள்ள

வரும், **भक्तजनतायाः** – பக்த ஜனஸமூஹத்திற்கு, **आशु**–விரைவில், **आनन्ददं**–ஸந்தோஷத்தைத் தருபவரும், **आकण्ठपूर्णदयं**-கழுத்துவரை நிறைந்த, வணங்கியவர்களைப்பற்றிய தயைஉள்ளவரும், **आत्मारामं**-ஆத்ம ஸ்வரூபத்திலே ரமிக்கிறவருமான, **लोकगुरुं**-ஜகத்குருவை, **नमामि**–வணங்குகிறேன்.

உலகில் நமது அன்பிற்குகந்த பொருளாயிருந்தாலும் சிறிது நேரம் பார்த்தவுடன் போதும் என்ற எண்ணம் ஏற்பட்டு வேறொரு பொருளைப் பார்க்க விரும்புகிறோம். நம் ஆசார்யாளுடைய முகாரவிந்தம் அப்படிப்பட்டதல்ல. ஒரு தடவை ஒருவன் பார்க்க ஆரம்பித்துவிட்டால் எவ்வளவு நேரம் பார்த்துக்கொண்டிருந்தாலும் 'போதும்' என்ற எண்ணம் ஒருக்காலும் ஏற்படாது. வேறு ஒரு பொருளையும் பார்க்க விரும்பமாட்டான். இதையே எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்க விரும்புவான். இதற்கு என்ன காரணமெனில் பக்தியுடன் தர்சிக்கும் எல்லோருடைய மனதிலும் ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டேயிருப்பது தான். அவருடைய சரீரம் முழுவதிலும் தயா ரஸம் நிறைந்திருப்பதால் அது தம்மை வணங்கும் பக்தர்களிடம் விழுந்து அவர்களின் துன்பங்களைப்போக்கி இன்பத்தைக் கொடுக்கிறது மேலும் அவருக்கு விளையாட்டோ, ப்ரீதியோ எல்லாம் ஆத்மாவில்தான். எப்பொழுதும் அவர் மனம் ஆத்ம ஸ்வரூபத்திலேயே ஆழ்ந்து இன்பமுற்றிருக்கும். இதனால்தான் எல்லோரும் எப்பொழுதும் இவரைப்பார்த்துக் கொண்டிருக்க விரும்புகிறார்கள். இவ்விதமான லோக குருவை வணங்குகிறேன். (5)

**नन्दनशाखी नमतां नश्यति यद्दर्शनाद्धि पापौघः ।**
**नन्दितविश्वजनं तं नन्दं वन्दे समाप्तुमापूर्वम् ॥ ६ ॥**

நந்தந ஶாகீ நமதாம் நச்யதி யத்தர்ஶநாத்தி பாபௌக: ।
நந்தித விச்வஜநம் தம் நந்தம் வந்தே ஸமாப்து மாபூர்வம் ॥

**नमतां**-வணங்குபவர்களுக்கு, **नन्दनशाखी**-நந்தந விருக்ஷமாக (எவர் இருக்கிறாரோ), **यद्दर्शनात्**-எவரை தர்சிப்பதால் **पापौघः** - பாபக்கூட்டம், **नश्यति**-அழிந்துபோகிறதோ, **तं**-அந்த, **नन्दितविश्वजनं**-எல்லா ஜனங்களையும் ஸந்தோஷப்படுத்துகிற குருவை, **आपूर्व नन्दं**-ஆனந்தத்தை, **समाप्तुं**-நன்ருக அடைவதற்காக, **वन्दे**-வணங்குகிறேன்.

நந்தந விருக்ஷம் ஸ்வர்க்க லோகத்திலுள்ளது அதன் ஸமீபம் சென்று யார் எதைக் கேட்டாலும் அதைக் கொடுக்கும் சக்தியுள்ளது. நந்தந விருக்ஷம் போலவே இப்பூவுலகில் விளங்கிய நம் குருநாதரும் தம் அடிகளில் பணிந்துள்ள பக்தர்கள் வேண்டுவதையெல்லாம் கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவர். இது மட்டுமா? நந்தந விருக்ஷத்தைக்காட்டிலும் சிறப்பான அம்சமும் குருநாதரிடம் உள்ளது. புண்யசாலிகள்தான் நந்தந விருக்ஷத்தின் அருகில் சென்று வேண்டியதைப் பெறமுடியும். பாபிகளின் பாபங்களை அழிக்க அம்மரத்திற்கு சக்தியில்லை. குருநாதரை தர்சித்தமாத்திரத்திலேயே எல்லாப்பாபங்களும் விலகிவிடும். அவர்கள் செய்யும் காரியங்கள் எல்லாம் உலகில் யாவரும் இன்புற்றிருப்பதற்காகத்தான் குருநாதர் எதையும் கொடுக்க ஸித்தமாயிருந்தாலும் நான் ஆத்மாநந்தத்தையே வேண்டுகிறேன். **आपूर्व नन्दं** 'ஆ'வை முதலில் கொண்ட நந்தம் என்பது இதன்பொருள் 'ஆநந்தம்' என்ற சொல்லில் முதலில் 'ஆ' என்ற எழுத்து இருப்பதால் இது ஆனந்தத்தைக் குறிக்கிறது. (6)

**दरहासदीप्तवक्त्रं दन्तिवरेण्ये निविष्टचित्तं तम् ।**
**दमशममुखगुणदाने दक्षं प्रणमामि शोकविच्छित्त्यै ॥ ७ ॥**

தரஹாஸ தீப்தவக்த்ரம் தந்திவரேண்யே
நிவிஷ்ட சித்தம் தம் ।
தம ஶம முககுண தானே தக்ஷம் ப்ரணமாமி
ஶோக விச்சித்த்யை ॥

**दरहासदीप्तवक्त्रं** - மந்தஹாஸத்தினால் ஒளியுள்ள முகமுள்ளவரும், **दन्तिवरेण्ये**-சிறந்த யானை உருவங்கொண்ட கணபதியிடம், **निविष्टचित्तं**-மனதைச்செலுத்தியவரும், **दम-शममुखगुणदाने**-தமம், சமம் முதலான குணங்களைக் கொடுப்பதில், **दक्षं**-திறமை உள்ளவருமான, **तं**-அந்த குருநாதரை, **शोकविच्छित्त्यै**-துன்பங்கள் அழிவதற்காக, **प्रणमामि** -

ஆசார்யாளின் முகாரவிந்தம் எப்பொழுதும் மந்தஹாஸ சோபையுடன் விளங்கும். ஸ்ரீ சங்கர பகவத் பாதரால் கொடுக்கப்பட்டு ஸுரேச்வரர் முதல் ஒவ்வொரு ஆசார்யராலும் பூஜிக்கப்பட்டு சிருங்கேரி ஆசார்ய பரம்பரைக்கே உபாஸ்ய மூர்த்தியான ஸ்ரீரத்ன கர்ப்ப கணபதியை மனதில் தியானிப்பவர். தன்னை அண்டிய பக்தர்களுக்கு தமத்தையும் (வெளிப்புலன்களின் அடக்கத்தையும்) சமத்தையும் (உள் இந்திரியமான மனோ நிக்ரஹத்தையும்) அருளுபவர். இப்பேற்பட்ட ஆசார்யரை பிறவித்துன்பம் நீங்க வணங்கு (7)

शिवदो भक्तजनानां शिवरूपो हस्तनिर्जितपलाशः ।
शिथिलयतु भवपाशं शिरसा वेदस्य गीतनिजरूपः ॥

ஶிவதோ பக்தஜநாநாம் ஶிவரூபோ ஹஸ்த நிர்ஜிதபலாஶ: ।
ஶிதில்யது பவபாஶம் ஶிரஸா வேதஸ்ய கீத நிஜரூப: ॥

**भक्तजनानां**-பக்த ஜனங்களுக்கு, **शिवदः**-மங்களத்தைத் தருபவரும், **शिवरूपः**-மங்களமான ஸ்வரூபமுள்ளவரும், **हस्त-निर्जितपलाशः** - கைகளால் ஜயிக்கப்பட்ட இலையை உடையவரும், **वेदस्य**-வேதத்தின், **शिरसा**-சிரோபாகமான உபநிஷத்தால், **गीतनिजरूपः**-போற்றப்பட்ட தன் ஆத்ம ஸ்வரூபத்தை உடையவருமான குருநாதர், **भवपाशं**-ஸம்ஸார பந்தத்தை, **शिथिलयतु**-கழுவும்படி செய்யட்டும்.

ஆசார்யாள் பகவத்பாதரின் அம்சமானபடியாலும், அவரது பெயரில் 'சிவ' என்பது இருப்பதாலும் இவர் சிவ

ஸ்வரூபம். தான் மங்களரூபமாக இருப்பதுடன் தமது பக்தர்களுக்கும் மங்களங்களை அருளுகிறார். அவருடைய கை செடிகளின் இலைபோல் அகன்று சோபையுடன் விளங்கும். வேதத்தின் கடைசி பாகமான உபநிஷத்துக்கள் எந்த ப்ரஹ்மத்தை வர்ணிக்கிறதோ அதுவே நான் என்ற அனுபவமுள்ளவர். ஆகையினால்தான் இந்த நமது குரு நாதர் எனது பிறவிக்கட்டை அறுத்தெரியட்டும் என்று வேண்டுகிறேன். (8)

वारणगमनं भवभयवारणमानन्दबोधघनम् ।
वातादिभूतरूपं वाजिगजैर्बिरुदवन्तमहमीडे ॥ ९ ॥

வாரண கமநம் பவபய வாரணமாநந்த போத கநம் ।
வாதாதி பூதரூபம் வாஜிகஜைர் பிருதவந்தமஹமீடே ॥

वारणगमनं-யானையின் நடைபோன்ற நடையுடையவரும், भवभयवारणं-ஸம்ஸார பயத்தைப்போக்குகிறவரும், आनन्दबोधघनं-கெட்டியான ஞானாநந்த மூர்த்தியாக உள்ளவரும், वातादिभूतरूपं-வாயு ஆகாயம்போல் ஸூக்ஷ்ம ஸ்வரூபமுள்ளவரும், वाजिगजैः-குதிரைகளாலும், யானைகளாலும், बिरुदवन्तं-பட்டங்களோடு (ராஜசின்னங்களோடு) கூடினவருமான குருநாதரை, अहं-நான், ईडे-துதிக்கிறேன்.

ஆசார்யாள் நடந்து சென்றால் யானை நடப்பதுபோல் கம்பீரமாகவும் அழகாகவுமிருக்கும். தன்னையண்டியவர்களுக்கு பிறப்பு இறப்பு என்ற பயத்தைப் போக்குகிறவர். ஞானமும் ஆனந்தமும்தான் கெட்டியாகி ஆசார்ய உருவமாகத் தோன்றுகிறது. ஆத்மநிஷ்டராயிருக்கிறபடியால் வாயு ஆகாயம்போல் ஸூக்ஷ்மமாக விளங்குவார்கள். ராஜசிஹ்னங்களெல்லாம் அவர்களிடமிருப்பதால் அவர்கள் யாத்திரை போகும்பொழுது யானை குதிரை முதலியவைகள் செல்லும். (9)

भिक्षुकवरसंपूज्यं भिषजं संसारदुःखरोगस्य ।
भीनयपुतोऽहमीड्यं भिक्षां याचे विशुद्धविद्यायाः ॥ १० ॥

பிக்ஷுகவர ஸம்பூஜ்யம் பிஷஜம் ஸம்ஸார துக்க ரோகஸ்ய |
பீநயயுதோऽஹமீட்யம் பிக்ஷாம் யாசே விஶுத்த வித்யாயா: ||

भिक्षुकवरसंपूज्यं–சிறந்த ஸந்யாஸிகளால் பூஜிக்கத்தக்க வரும், संसारदुःखरोगस्य–பிறவி மரணத்துன்பம் என்னும் வியாதிக்கு, भिषजं–வைத்தியராக இருப்பவரும், ईड्यं–துதிக்கத்தக்கவருமான ஆசார்யரிடம், भीनययुतः–பயத்தின் நய முள்ள, अहं–நான், विशुद्धविद्यायाः–விசுத்தமான ஆத்ம வித்யையின், भिक्षां–பிக்ஷையை, याचे–வேண்டுகிறேன்.

ஆசார்யாளைப் போன்ற உயர்ந்த ஸந்யாஸிகளும் அவரைப் பூஜிக்கின்றனர். ஸம்ஸாரரோக வைத்யராக இருப்பதுதான் இதற்குக்காரணம். உலகில் வியாதியால் துன்புறுகிறவன் அதைப் போக்கும் வைத்யனைப் பூஜிப்பது வழக்கம். பிறவி மரணம் என்னும் ஸம்ஸாரத்தால் உண்டாகும் துன்பமே பெரியவியாதி. இதை யறிந்து இதைப் போக்கத்தான் ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீகரித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆசார்யாளோ தானும் ஸந்யாஸியாக இருந்து வைத்யர் பிணியைப் போக்குவதுபோல் பிறவி மரணத்துன்பத்தைப் போக்குகிறார்கள். அதனால் தான் ஸந்யாஸிகள் ஆசார்யாளைப் பூஜிக்கிறார்கள். இது தவிற பக்தர்கள் வேண்டுவதையெல்லாம் கொடுப்பதால் எல்லோருமே அவர்களைப் போற்றுகின்றனர். எனக்கு பிறவி மரணங்களைக்கண்டு மிகுந்த பயம் ஏற்பட்டுள்ளது. ஆதலால் வைத்யராயும் ஸந்யாஸியாயுமுள்ள ஆசார்யாளிடம் பவரோகத்தை ஒழிக்க பரிசுத்தமான ஆத்ம வித்யையை பிக்ஷையாக வேண்டுகிறேன். ஸந்யாஸி ஒரு பொருளையும் யாசிக்கக்கூடாது. ஆனாலும் பிக்ஷையை யாசிக்கலாம். அதனால் ஞான பிக்ஷையை யாசிக்கிறேன்.

नखकान्तिरक्तमालं नगस्थिरं मन्मथस्य जेतारम् ।
नवनीतहृदयमनिशं नमामि गुरुराजमाशु मोक्षाय ॥ ११ ॥

நக காந்தி ரக்தமாலம் நகஸ்திரம் மந்மதஸ்ய ஜேதாரம் |
நவநீத ஹ்ருதயமநிஶம் நமாமி குருராஜமாஶு மோக்ஷாய ||

**नखकान्तिरक्तमालं**-நகங்களின் ஒளியாகிற செந்நிறப் புஷ்பமாலையுள்ளவரும், **नगस्थिरं**-மலைபோல் உறுதியான மனமுள்ளவரும், **मन्मथस्य जेतारं**-காமனை ஜயித்தவரும், **नवनीतहृदयं**-வெண்ணை போன்ற மனமுள்ளவருமான, **गुरुराजं**-குருசிரேஷ்டரை, **आशु**-விரைவில், **मोक्षाय**-முக்தி அடைவதற்காக, **अनिशं**-எப்போதும், **नमामि**-வணங்கு கிறேன்.

ஆசார்யாளின் திருவடி நக ஒளி சிகப்பாக இருக்கிறது. இது சிகப்புப் புஷ்ப மாலைபோல் காண்கிறது. மலை அசையாமலிருப்பதுபோல் ஆசார்யாள் மனம் எச்சமயத்திலும் சலிக்காமல் உறுதியாக இருக்கும். காமத்தை ஜயித்தவர். மனதில் காமமே உண்டாகாது. மன்மதனை ஜயித்தவர் பரமசிவன் ஒருவர்தான். இங்கு ஆசார்யாளை மன்மதனை ஜயித்தவராகக் கூறுவதால் பரமேசுவரனின் அவதாரமென்பதையும் காட்டுகிறார். நெருப்பின் உஷ்ணம் பட்டு வெண்ணை உருகுகிறது. ஆசார்யாளின் மனதில் தாபமில்லாவிட்டாலும் பிறர் மனதில் தாபமிருப்பதைக் காதால் கேட்ட மாத்திரத்தில் இவர் மனம் உருகிவிடுகிறது. இந்த குருநாதரை ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைவதற்காக வணங்குகிறேன். (11)

वश्यीकृतसर्वाक्षं वाचस्पतिगर्वहारिवाचालिम् ।
वश्यं भक्तजनानां वटतरुहितरूपसद्गुरुं वन्दे ॥ १२ ॥

வச்யீக்ருத ஸர்வாக்ஷம் வாசஸ்பதி கர்வ ஹாரி வாசாளிம் ।
வச்யம் பக்தஜநாநாம் வடதருஹிதரூப ஸத்குரும் வந்தே ॥

**वश्यीकृतसर्वाक्षं**-எல்லா இந்திரியங்களையும் ஸ்வாதீனமாகச் செய்தவரும், **वाचस्पतिगर्वहारिवाचालिं**-பிருஹஸ்பதியின் கர்வத்தைப்போக்கும் வார்த்தை வரிசையுள்ளவரும், **भक्तजनानां**-பக்த ஜனங்களுக்கு, **वश्यं**-அதீனமாக இருப்பவரும், **वटतरुहितरूप**-ஆலமரத்திற்கு நன்மைபுரிந்த தக்ஷிணாமூர்த்திஸ்வருபரான, **सद्गुरुं**-ஸத்குருவை, **वन्दे**-வணங்குகிறேன்.

கண் காது மனம் முதலான எல்லாப் புலன்களையும் அடக்கியவர். ஆசார்யாளின் பேச்சு தேவகுருவான பிருஹஸ்பதியின் பேச்சைக்காட்டிலும் சிறப்புடன் விளங்குவதால், "தானே பேச்சில் சிறந்தவர்" என்ற பிருஹஸ்பதியின் கர்வத்தை நீக்கிவிடுகிறது. இவ்விதமிருந்தும் பக்த பராதீனராக இருக்கிறார். ஆலமரத்தடியில் ஸநகாதி யோகிகளுக்கு உபதேசித்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே ஸத்குரு ரூபமாக விளங்குகிறார் இந்த குருநாதரை வணங்குகிறேன். (12)

नृहरिगुरुसक्तचित्तो नृवरपशुप्रभृतिसर्ववस्तुसमः ।
नृपवन्दितपादाब्जो नृत्यतु गुरुराण्मदीयचित्ताब्जे ॥ १३ ॥

ந்ருஹரி குருஸக்தசித்தோ ந்ருவர பஶுப்ரப்ருதி
ஸர்வவஸ்து ஸம: ।
ந்ருபவந்திதபாதாப்ஜோ ந்ருத்யது குருராண்
மதீயசித்தாப்ஜே ॥

**नृहरिगुरुसक्तचित्तः**-தனது குருவான ந்ருஸிம்மபாரதீ ஸ்வாமிகளிடம் ஈடுபட்ட மனமுள்ளவரும், **नृवर**-சிறந்த மனிதர், **पशुप्रभृति**-பசு முதலான, **सर्ववस्तुसमः**-எல்லா வஸ்துக்களிலும் ஸமமான பாவனை உள்ளவரும், **नृपवन्दित-पादाब्जः**-அரசர்களால் வணங்கப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவருமான, **गुरुराट्**-குருராஜர், **मदीयचित्ताब्जे**-எனது ஹிருதய கமலத்தில், **नृत्यतु**-நர்த்தனம் செய்யட்டும்.

உக்ரஸ்வாமிகளென்றும் பார்க்காய் ஸ்வாமிகளென்றும் சொல்லப்படும் மஹாதபஸ்வியான தனது குரு ந்ருஸிம்ம பாரதீ ஸ்வாமிகளை எப்பொழுதும் மனதால் தியானிக்கிறவர் மனிதர், பசு முதலான எல்லா பிராணிகளிடமும் ஒரே மாதிரியாக விளங்கும் ஆத்மவஸ்துவைப் பார்க்கிறவர். அரசர்களும் இவருடைய பாதாரவிந்தங்களில் வணங்குகின்றனர். இப்பேற்பட்ட குருராஜர் என்மனதில் நர்த்தனம் செய்யட்டும். (13)

सिंहं द्वैतिमदेभे सितमातन्वानमन्तरं नमताम् ।
सिन्दूरारुणचेलं सितचामरवीजितं गुरुं वन्दे ॥ १४ ॥

ஸிம்ஹம் த்வைதிமதேபே ஸிதமாதந்வாநமந்தரம் நமதாம் ।
ஸிந்தூராருணசேலம் ஸிதசாமரவீஜிதம் குரும் வந்தே ॥

द्वैतिमदेभे-த்வைத வாதிகளாகிற மதயானைகளின் விஷயத்தில், सिंहं-ஸிம்மமாக விளங்குபவரும், नमतां-வணங்குபவர்களுடைய, अन्तरं-மனதை, सितं-வெளுப்பாக (தூய்மையாக), आतन्वानं-செய்கிறவரும், सिन्दूरारुणचेलं-ஸிந்தூரம்போல் சிகப்பான காஷாய வஸ்திரத்தை உடையவரும், सितचामरवीजितं-வெண்சாமரங்களால் வீசி உபசரிக்கப்பட்டவருமான, गुरुं-குருவை, वन्दे-வணங்குகிறேன்.

மதம் பிடித்த யானைகளை ஸிம்மம் அடக்குவது போல் தனது அத்வைத வாதத்தால் த்வைதவாதிகளை அடக்கி விடுகிறார். தன்னை வணங்கும் பக்தர்களின் மனத்திலுள்ள காமம் முதலான கல்மஷங்களை முழுவதும் போக்கி பரிசுத்தமாக்கிவிடுகிறார். இடுப்பில் ஸிந்தூரம்போல் சிகப்பான காஷாய வஸ்திரம் தரித்துக்கொண்டிருக்கிறார். பக்தர்கள் இருபுறமும் நின்று சாமரம் வீசி உபசரிக்கின்றனர். இந்த குருநாதரை வணங்குகிறேன். (14)

हरिदष्टभरितकीर्तिं हन्तारं सर्वलोकहृत्तमसः ।
हंसं परपदपूर्वं हरन्तमीडे समस्तचक्रार्तिम् ॥ १५ ॥

ஹரிதஷ்ட பரித கீர்த்திம் ஹந்தாரம் ஸர்வலோக ஹ்ருத்தமஸ: ।
ஹம்ஸம் பரபதபூர்வம் ஹரந்தமீடே ஸமஸ்த சக்ரார்த்திம் ॥

हरिदष्टभरितकीर्तिं-எட்டு திசைகளிலும் பரவி நிறைந்துள்ள புகழை உடையவரும், सर्वलोक-எல்லா ஜனங்களுடைய, हृत्तमसः-மனதிலுள்ள (அக்ஞானமாகிற) இருளை हन्तारं-அழிக்கிறவரும், समस्तचक्रार्तिं-எல்லா தேசங்களின்

துன்பத்தை, हरन्तं-போக்குகிறவருமான, परपदपूर्वं-'பர' என்ற சொல்லை முன்னால் உடைய, हंसं-ஹம்ஸரை, ईडे-துதிக்கிறேன்.

குருநாதர் செய்துள்ள காலடி உத்தாரம் முதலான லோகோபகாரகமான பல அரிய காரியங்களால் அவருடைய கீர்த்தி எங்கும் பரவியுள்ளது தமது உபதேசங்களால் பக்தர்களின் அறியாமையைப் போக்குவதுடன் அவர்களின் துன்பங்களையும் நீக்கிவிடுகிருர். ஹம்ஸம் பாலையும் நீரையும் பிரிப்பதுபோல உலகில் உண்மைப் பொருளையும் (ஆத்மாவையும்) பொய்யையும் (அநாத்மாவையும்) பிரித்துக்காட்டுவதால் சிறந்த ஹம்ஸமாக விளங்குகிருர். இந்த குருவை துதிக்கிறேன். ஹம்ஸபதம் ஸூரியனையும் சக்ரபதம் சக்ரவாக பக்ஷியையும் குறிக்கும் சூரியன் சக்ரவாக பக்ஷியின் துன்பத்தைப் போக்குகிருன். (15)

भारतिनरसिंहगुरो भाजनमेनं भवत्कटाक्षस्य ।
भाविनमपि कुरुषे नहि भारति लोकस्य खलु दयादृष्टे ॥१६॥

பாரதி நரஸிம்ஹகுரோ பாஜநமேநம் பவத்கடாக்ஷஸ்ய ।
பாவிநமபி குருஷே நஹி பாரதி லோகஸ்ய
கலு தயாத்ருஷ்டே ॥

भारतिनरसिंहगुरो-ந்ருஸிம்மபாரதி குருநாதரே, दयादृष्टे-கருணைகடாக்ஷமுள்ளவரே, भवत्कटाक्षस्य-உமது கடாக்ஷத்திற்கு, भाजनं भाविनमपि-பாத்திரமாக இருக்கிறபோதிலும், एनं-இந்த என்னை, भारतिलोकस्य (भाजनं)-வாக் ப்ரபஞ்சத்திற்கு பாத்திரமாக, नहि खलु कुरुषे-செய்யவில்லையே !

ஹே ந்ருஸிம்மபாரதி குருவே, தங்கள் பார்வை தயை நிரம்பியது இப்பேற்பட்ட தங்களுடைய கருணைகடாக்ஷத்திற்கு நான் இலக்காக ஆகிவிட்டேன். அதாவது தங்கள் கிருபாகடாக்ஷத்தை என்பேரில் செலுத்தி என்னை அனுக்ரஹம் செய்துவிட்டீர்கள். அப்படியிருந்தபோதிலும் பாரதீ ஸ்வரூபமான தாங்கள் என்னை சப்தஞான

முள்ளவனாக ஸர்வசாஸ்த்ரபாரங்கதனாகச் செய்யவில்லையே!
இதையும் அனுக்ரஹிக்கவேண்டும். (16)

रदनविनिर्जितकुन्दं रम्या वाचः प्रसारयन्तमहम् ।
रक्षकमीडे जगतां रजस्तमोहीनमाशु मां तनुताम् ॥ १७ ॥

ரதந விநிர்ஜித குந்தம் ரம்யா வாச: ப்ரஸாரயந்தமஹம் ।
ரக்ஷகமீடே ஜகதாம் ரஜஸ்தமோஹீநமாஶுமாம்
தநுதாம் ॥

**रदनविनिर्जितकुन्दं**-பற்களால் ஜயிக்கப்பட்ட குந்த புஷ்பத்தை உடையவரும், **रम्या वाचः**-அழகிய வார்த்தைகளை **प्रसारयन्तं**-பரப்புகின்றவரும், **जगतां रक्षकं**-உலகத்தைக் காப்பாற்றுகிறவருமான குருநாதரை, **अहं**-நான், **ईडे**-துதிக்கிறேன். (அவர்) **आशु**-சீக்கிரம், **मां**-என்னை, **रजस्तमोहीनं**-ரஜோகுணம் தமோகுணமற்றவனாக, **तनुतां**-செய்யட்டும்.

ஆசார்யாளுடைய பற்கள் குந்தமலர் போல வெண்மையாக அமைந்திருக்கின்றன. அவர் முகத்திலிருந்து வெளிவரும் வார்த்தைகள் எல்லாம் மிக்க அழகாக உள்ளன. எல்லோரையும் அவர் காப்பாற்றுகிறார். அவரிடம் நான் வேண்டுவது இதுதான். என் மனதிலுள்ள ரஜோகுணத்தையும் தமோ குணத்தையும் போக்கி ஸத்வகுணம் மட்டும் ஓங்கும்படி அருளவேண்டும். (17)

तीव्रतपा गुरुचरणस्तीरं यो नयति संसृतौ मग्नान् ।
तीव्राज्ञानमयं मां तीर्थेशो ज्ञानवन्तमातनुताम् ॥ १८ ॥

*தீவ்ரதபா குருசரணஸ் தீரம் யோ நயதி ஸம்ஸ்ருதௌ
மக்நான் ।
தீவ்ராக்ஞாநமயம் மாம் தீர்த்தேஶோ ஞாநவந்த
மாதநுதாம் ॥*

**तीव्रतपाः**-கடுமையான தவமியற்றிய, **यो गुरुचरणः**-எந்த ஆசார்யபாதர், **संसृतौ**-ஸம்ஸாரத்தில், **मग्नान्**-மூழ்கியவர்களை, **तीरं नयति**-கரையை அடையும்படி செய்

கிருரோ (அந்த), **तीर्थेशः**-ஆசார்ய சிரேஷ்டர், **तीव्राज्ञानमयं**-அதிகமான அக்ஞான ஸ்வரூபமாக உள்ள, **मां**-என்னை, **ज्ञानवन्तं**-ஞானியாக, **आतनुताम्**-செய்யவேணும்.

அடிக்கடி பிறந்து வாழ்ந்து இறப்பதுதான் ஸம்ஸாரம் என்பது. இது ஒரு கடல். இக்கடலில் விழுந்தவர்கள் கரை சேர முடியாமல் துன்புறுகின்றனர். இவர்களை மஹா தபஸ்வியான குருநாதர் கரைசேர்த்து விடுகிருர். தபஸ் என்ற சொல் ஞானத்தையும் குறிக்கும். மஹா ஞானியா யிருப்பதால் ஸுலபமாக ஸம்ஸாரஸாகரத்திலிருந்து கரை ஏற்றி விடுகிருர். கடலில் விழுந்தவன் தோணியில் ஏறிக் கரை சேரமுடியும். பிறவிக்கடலிலிருந்து வெளியேற ஞானத்தைத்தவிற வேறு உபாயம் கிடையாது நான் அக்ஞானமயனுக இருக்கிறேன். அச்ஞானமே முழுவதும் குடிகொண்டுள்ள எனக்கு ஞானத்தை உபதேசித்து அக்ஞானத்தை முழுவதும் நீக்கி ஸம்ஸாரஸாகரத்திலிருந்து கடைத்தேறச் செய்யவேணும். (18)

पातकवह्निजलं यः पामरविद्वत्समानदृष्टिश्च ।
पावयिता लोकानां पातु गुरुः सर्वदा समस्तान्नः ॥ १९ ॥

பாதக வஹ்நிஜலம் யஃ பாமர வித்வத் ஸமாந த்ருஷ்டிச்ச ।
பாவயிதா லோகாநாம் பாது குருஃ ஸர்வதா ஸமஸ்தான் நஃ ॥

**यः**-எவர், **पातकवह्निजलं**-பாபங்களாகிற நெருப்புக்குத் தண்ணீராகவும், **पामरविद्वत्समानदृष्टिश्च**-பாமரர்களிடமும் வித்வான்களிடமும் ஸமமான பார்வை உள்ளவராகவும், **लोकानां पावयिता**-ஜனங்களை பரிசுத்தப்படுத்துகிறவருகவு மிருக்கிருரோ அந்த, **गुरुः**-ஆசார்யர், **समस्तान् नः**-நம் எல்லோரையும், **सर्वदा**-எப்பொழுதும், **पातु**-காப்பாற்றட்டும்.

தண்ணீரானது நெருப்பை அணைப்பதுபோல் ஆசார்யாள் பக்தர்களின் பாபங்களைப்போக்கி விடுகிருர். இந்த விஷயத்தில் பாமரன் (படியாதவன்) என்ருே வித்வான் (படித்தவன்) என்ருே வேற்றுமை பாராட்டுவதில்லை,

தன்னை அண்டியவர் யாராயிருந்தாலும் அவர்களின் பாபங்களையும் காமம் முதலான தோஷங்களையும் போக்கி பரிசுத்தப்படுத்துகிறுர். இவர் நம் எல்லோரையும் காப்பாற்றட்டும். (19)

तुहिनांशुसदृशकान्तिः तुच्छं विश्वं विलोकयन् योगी ।
तुलनारहितः शीघ्रं तुष्टिं मह्यं ददातु गुरुवर्यः ॥

துஹிநாம்ஶு ஸத்ருஶ காந்தி: துச்சம் விச்வம் விலோகயன் யோகீ ।
துலநாரஹித: ஶீக்ரம் துஷ்டிம் மஹ்யம் ததாது குருவர்ய: ॥

तुहिनांशुसदृशकान्तिः-சந்திரனுடைய காந்தி போன்ற காந்தியுள்ளவரும், विश्वं-பிரபஞ்சத்தை, तुच्छं-துச்சமாக, विलोकयन्-பார்த்துக்கொண்டிருப்பவரும், योगी-யோகியும், तुलनारहितः—ஒப்பற்றவருமான, गुरुवर्यः — குருசிரேஷ்டர், मह्यं-எனக்கு, शीघ्रं-விரைவில், तुष्टिं-பேரானந்தத்தை, ददातु-கொடுத்தருளட்டும்.

சந்திரனுடைய காந்தி பார்க்கிறவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதைப்போல் ஆசார்யாளுடைய சரீர காந்தியும் ஆஹ்லாதத்தைக் கொடுக்கக்கூடியது. பிரபஞ்சம் பொய் என்ற தீர்மானம் இருப்பதால் உலகப் பொருள்களை ஒரு பொருட்டாகவே எண்ணுவதில்லை. இப்பொழுது தோன்றிக்கொண்டிருந்த போதிலும் பின்னுல் முயல் கொம்புபோல் இல்லாமலே போய்விடும் என்ற நிச்சயம் அவர்களுக்கு உண்டு. மனோவியாபாரங்களை அடக்கிய யோகி அவருக்குச்சமமாக உலகில் ஒருவருமில்லை. இந்த குரு சிரேஷ்டர் விரைவில் எனக்கு ஆத்மானந்தத்தைத் தந்தருளட்டும். (20)

श्रीगुरुशिष्यान्यतमः कश्चन भक्तः सुभक्तिसंयुक्तः ।
श्लोकालीन् श्रीदेशिकपदाब्जयुग्मे समार्पयत् ॥

ஸ்ரீ குருஶிஷ்யாந்யதம: கச்சன பக்த: ஸுபக்தி ஸம்யுக்த: ।
ச்லோகாளீன் ஸ்ரீ தேஶிக பதாப்ஜ யுக்மே ஸமார்பயத் ॥

**श्रीगुरुशिष्यान्यतमः**-ஸ்ரீகுருவின் சிஷ்யர்களில் ஒருவரான, **सुभक्तिसंयुक्तः**—நல்ல பக்தியோடுகூடிய, **कश्चन भक्तः**—ஒரு பக்தர், **श्लोकालीन्**-சுலோக வரிசைகளை, **श्रीदेशिकपदाब्जयुग्मे**-ஆசார்யாளின் தாமரைபோன்ற இரு திருவடிகளில், **समार्पयत्**- அர்ப்பணம் செய்தார்.

ஆசார்யாளுக்கு எண்ணற்ற சிஷ்யர்கள் இருக்கின்றனர். அவைகளில் தானும் ஒருவர். அவர்களிடம் மிகுந்த பக்தி கொண்டவர். பக்திப்பெருக்குடனேயே இந்த சுலோகங்களை இயற்றி இவைகளை ஸத்குருவின் சரணாரவிந்தங்களிலேயே அர்ப்பணம் செய்துவிட்டேன். (21)

---

## ॥ श्रीमदाचार्येन्द्रस्तवः ॥

## ஸ்ரீ மதாசார்யேந்த்ரஸ்தவம்

दृष्ट्वा वाचि सरस्वतीं नयनयोरन्ते च लक्ष्मीं तथा
चित्ते वीक्ष्य समस्तभूतकरुणां काये च हेमप्रभाम् ।
नो युक्तं बहुभामिनीसमुदये वासाय मत्वेति ते
श्रीमद्देशिकराज कीर्तिवनिता नूनं दिगन्तानगात् ॥

த்ருஷ்ட்வா வாசி ஸரஸ்வதீம் நயநயோரந்தே ச லக்ஷ்மீம் ததா
சித்தே வீக்ஷ்ய ஸமஸ்தபூதகருணாம் காயே ச ஹேமப்ரபாம் ।
நோ யுக்தம் பஹுபாமிநீஸமுதயே வாஸாய மத்வேதி தே
ஸ்ரீமத்தேசிகராஜ கீர்த்திவநிதா நூநம் திகந்தானகாத் ॥

**श्रीमद्देशिकराज**-ஆசார்யசிரேஷ்டரே, **ते**-உம்முடைய, **वाचि**-வாக்கில், **सरस्वतीं**-ஸரஸ்வதியையும், **नयनयोरन्ते**-இரு கண்களின் ஓரத்தில், **लक्ष्मीं च**-லக்ஷ்மியையும், **दृष्ट्वा**-பார்த்து, **तथा**-அவ்விதமே, **चित्ते**-மனதில், **समस्तभूतकरुणां**-எல்லா பிராணிகள் விஷயமான கருணையையும், **काये**-

சரீரத்தில், **हेमप्रभां च**-சுவர்ணகாந்தியையும், **वीक्ष्य** பார்த்து **बहुभामिनीसमुदये**-அநேகப் பெண்களின் கூட்டத்தில், **वासाय**-வாஸம் செய்வதற்கு, **नो युक्तं**-உசிதமல்ல, **इति**-என்று, **मत्वा**-எண்ணி, **कीर्तिवनिता**-கீர்த்திஎன்னும் பெண், **दिगन्तान्**-திசைகளின் கோடிகளுக்கு, **अगात्**-சென்று விட்டாள். **नूनं**-நிச்சயம்.

இந்த சுலோகத்தில் ஆசார்யாளின் கீர்த்தி உலகம் முழுவதும் எல்லா திசைகளிலும் கடைசி இடம் வரை பரவி யிருக்கிறது என்பதைக் கூறுகிருர். கீர்த்தி என்னும் பெண் ஆசார்யாளிடம் வாஸம் செய்யலாம் என்ற எண்ணத்துடன் வந்தாள். ஆனல் ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, கருணை, ப்ரபா ஆகிய பல பெண்கள் இருந்து வருவதைப் பார்த்தாள். பொதுவாகப் பெண் பல பெண்களுடன் சேர்ந்து புருஷனிடம் வாழ விரும்பமாட்டாள். ஆதலால் இந்த இடம் தான் வஸிப்பதற்கு யோக்யமானது அல்ல என்று தீர்மானித்து வேறு ஒரு இடமும் தனக்குப் பிடிக்காததால் திசைகளின் எல்லைக்குப் போய்விட்டாளோ என்று தோன்றுகிறது. வாக்கில் ஸரஸ்வதியும் அதாவது வாக் வல்லமையும் நேத்ராந்தத்தில் லக்ஷ்மியும் அதாவது அழகும் எல்லா பிராணிகளைப்பற்றிய இரக்கம் மனதிலும் சரீரத்தில் ஸ்வர்ணம் போன்ற சோபையும் விளங்குகிறது. இங்கு ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, கருணை, ப்ரபா இந்நான்கும் ஸ்திரீ லிங்க சப்தமானதால் பெண்களாக வர்ணித்தார். இப் பெண்களுடன் சேர்ந்து வஸிக்க இஷ்டப்படாமல்தான் கீர்த்தி என்னும் பெண் சென்றுவிட்டாள். (1)

पुरा शंभुः शुभ्रे वसतिमचले कर्तुमनिशं
समिच्छन् रूप्याद्रावुभयगुणयुक्तेऽकृत वसिम् ।
ततस्तं दुर्वर्णं दशवदनहस्तप्रचलितं
विचिन्त्यास्मिन्नित्यां वसतिमकरोत् देशिकहृदि ॥

புரா சம்பு: மு்ப்ரே வஸதிமசலே கர்த்துமநிமும்
ஸமிச்சன் ரூப்யாத்ராவுபயகுணயுக்தேஃக்ருத வஸிம் ।

ததஸ்தம் துர்வர்ணம் தசவதநஹஸ்தப்ரசலிதம்
விசிந்த்யாஸ்மின் நித்யாம் வஸதிமகரோத் தேசிகஹ்ருதி ||

पुरा-முன்னால், शंभुः-பரமசிவன், शुभ्रे-ஒளி பொருந்தியதும், अचले-அசைவற்றதுமான இடத்தில், अनिशं-எப்பொழுதும், वसतिं-வாஸத்தை, कर्तुं-செய்வதற்கு, समिच्छन्-விருப்பமுள்ளவராய்க்கொண்டு, उभयगुणयुक्ते(ஒளி, அசைவில்லாமைஎன்ற) இரண்டு குணங்களுடனும் கூடிய, रूप्याद्रौ-கைலாஸ மலையில், वसिं-வாஸத்தை, अकृत-செய்தார் ततः-பிறகு, तं-அந்த மலை, दुर्वर्णं-ஒளியில்லாமல் இருப்பதையும் (வெள்ளியாயிருப்பதையும்), दशवदनहस्तप्रचलितं-பத்து முகங்களுள்ள ராவணன் கையால் அசைக்கப்பட்டதையும், विचिन्त्य-நினைத்துப் பார்த்து, अस्मिन्-இந்த, देशिकहृदि-ஆசார்யாளுடைய மனதில் नित्यां-நித்யமான, वसतिं-வாஸத்தை अकरोत्-செய்தார்.

முன்னால் பரமசிவன் தாம் வஸிக்குமிடம் ஒளியுள்ளதாகவும் அசைவில்லாமலுமிருக்கவேண்டுமென்று எண்ணி தேடிப்பார்த்து கைலாஸமலைதான் அவ்வித இரு குணங்களுமுள்ளது என்று தீர்மானித்து முதலில் அங்கேயே வாஸம் செய்து வந்தார். பின்னால் இந்த இரு குணங்களும் இதை விட்டு நீங்கிவிட்டன. கைலாஸ மலை வெள்ளியாலாக்கப் பட்டது. வெள்ளிக்கு दुर्वर्ण (துர்வர்ணம்) என்று ஒரு பெயர் உண்டு. அதன் ஒளி மங்கிவிடுகிறது. மேலும் ராவணன் ஒரு சமயம் தனது கைகளால் கைலாஸ மலையை அசைத்துவிட்டான். ஆகவே ஒளி, அசைவில்லாமை என்ற இரு குணங்களும் கைலாஸ மலையிலிருந்து நீங்கிவிட்டன. தாம் விரும்பிய இரு குணங்களும் கைலாஸ மலையைவிட்டு நீங்கிவிட்டபடியால் இனி தாம் வஸிப்பதற்கு இது தகுதியற்றது என்று தீர்மானித்து வேறு இடம் தேடிக்கடைசியில் ஆசார்யேந்திராளுடைய ஹிருதயம் தான் தாம் வஸிக்கத் தகுதியுள்ளது என்று தீர்மானித்து அங்கேயே ஸ்திரமாக வாஸம் செய்து வருகிறார். தாம் விரும்பிய இரு குணங்களும் ஆசார்யாளின் மனதில் உள்ளன. ராகம் த்வேஷம்

முதலான தோஷங்களாகிற கல்மஷம் நிரம்பிய மனம் தான் அழுக்கடைந்து ஒளி குன்றி இருக்கும். ஆசார்யாளுடைய மனத்தில் இவ்வித தோஷங்கள் ஒன்றுமில்லாததால் சிறிதும் அழுக்கில்லாமல் சுப்ரமாக விளங்குகிறது. மேலும் ஆசார்யாளுடைய மனம் லௌகிக விஷயங்களில் செல்லாமல் பரதத்வத்தில் நிலைபெற்றிருப்பதால் அசலமாகவும் இருக்கிறது. சுப்ரமாயும் அசலமாயுமுள்ள ஆசார்யாளுடைய மனதில் பரமேசுவரன் நிலையாக எப்பொழுதும் வாஸம் செய்கிறார்.

(2)

अमृतशिलापरिनिर्मितमूर्तिं श्रीदेशिकस्य मन्येऽहम् ।
शंकरगुरुकृतशृङ्गाचलस्थपीठीयकीर्तिसार इति ॥ ३ ॥

அம்ருதஶிலாபரிநிர்மித மூர்த்திம் ஸ்ரீதேஶிகஸ்ய
மந்யேऽஹம் ।
ஶங்கர குரு க்ருத ச்ருங்காசலஸ்த பீடீய கீர்த்தி ஸார இதி ॥

श्रीदेशिकस्य- ஆசார்யேந்திரருடைய, अमृतशिला- சலவைக்கல்லால், परिनिर्मित-நிர்மாணிக்கப்பட்ட, मूर्ति- விக்ரஹத்தை, शंकरगुरुकृत - ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யாளால் ஸ்தாபிக்கப்பட்ட, शृङ्गाचलस्थ-சிருங்ககிரியிலுள்ள, पीठीय-ஸ்ரீ சாரதா பீடத்தினுடையதான, कीर्तिसार इति- கீர்த்தியின் ஸாரம் என்று, अहं-நான், मन्ये-நினைக்கிறேன்.

சிருங்ககிரியில் துங்காநதியின் அக்கரையில் ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தில் கருங்கற்களால் சிறுகோவில்கட்டி அதில் வெள்ளை சலவைக்கல்லாலான அழகிய குருமூர்த்தி ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அது சுத்த வெண்மை நிறமுள்ளதாயிருப்பதால் கவிகளின் ஸம்பிரதாயப்படி அதை கீர்த்தியாக வர்ணிக்கிறார். ஸ்ரீ சங்கரபகவத்பாதர் காலடியில் அவதரித்து ஆஸேது ஹிமாசலம் ஸஞ்சரித்து வாதத்தில் எல்லோரையும் ஜயித்து எல்லா துர்மதங்களையும் அழித்து அத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து இதன் ஞாபகமாக நான்கு பிரதேசங்களில் நான்கு பீடங்களை

ஸ்தாபித்தார். இவற்றில் தெற்கு திக்கில் சிருங்ககிரியில் ஸ்தாபிக்கப்பட்டது ஸ்ரீ சாரதாபீடம். இதுதான் சங்கரா சார்யாளுடைய கீர்த்தியை நமக்கு எடுத்துக்காட்டுகிறது. ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் ஸ்ரீ சங்கரபகவத்பாதரின் பெருமையையும் ஸ்ரீ சாரதா பீடத்தின் பெருமையையும் உலகெலாம் அறியும்படி செய்தார். ஆசார்யாளுடைய மூர்த்தியைப் பார்க்கும் யாவருக்கும் ஸ்ரீ சங்கரரைப்பற்றியும் ஸ்ரீ சாரதா பீடத்தைப்பற்றியும் ஞாபகம் வருகிறது. ஆகவே ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்த ஸ்ரீ சாரதா பீடத்தின் கீர்த்தி முழுவதும் ஒருங்கு சேர்ந்து அமிருத சிலா மூர்த்தியாக நமக்குக் காக்ஷியளிக்கிறது. (3)

एकादशरुद्राणां एका गौरी भवेन्नालम् ।
इति गौरीकृतवांस्त्वं देशिकवर दशदिशोऽपि निजकीर्त्या ॥

ஏகாதஶ ருத்ராணும் ஏகா கௌரீ பவேத் நாலம் |
இதி கௌரீக்ருதவாம்ஸ்த்வம் தேஶிகவர தஶ திஶோபி
நிஜ கீர்த்யா ||

**एकादशरुद्राणां**–பதினோரு ருத்ரர்களுக்கு, **एका गौरी**-ஒரு கௌரீ, **अलं**–போதுமானதாக, **न भवेत्**–ஆகாது. **इति**–என்று எண்ணி, **देशिकवर**–ஆசார்ய சிரேஷ்டரே, **त्वं**-நீங்கள், **निजकीर्त्या**-தனது கீர்த்தியால், **दश दिशोपि**–பத்து திசைகளையும் **गौरीकृतवान्**– கௌரியாகச் செய்து விட்டீர்கள்.

இந்த சுலோகத்திலும் ஆசார்யாளின் புகழ் வர்ணிக்கப் படுகிறது. ஸ்ரீ சங்கரர் அவதரித்த காலடியைக் கண்டு பிடித்து அதை யாத்ரா ஸ்தலமாக ஆக்கியது, பல இடங் களில் வித்யா ஸ்தானங்கள் ஏற்படுத்தியது, தபஸ் சக்தி முதலியவற்ருல் பத்து திசைகளிலும் ஆசார்யாளின் புகழ் பரவியுள்ளது. கீர்த்தியை வெண்மை நிறமாக வர்ணிப்பது வழக்கம். இது எல்லா இடங்களுக்கும் சென்று பத்து திசைகளையும் வெண்மையாக ஆக்கிவிட்டது. **गौरीकृतवान्** என்ற பதத்திற்கு வெண்மையாக ஆக்கிவிட்டார் என்ற

அர்த்தத்துடன் கௌரியாக ஆக்கிவிட்டார் என்ற அர்த்தமும் கிடைக்கிறது. எதற்காகவெனில் ருத்ரர்கள் பதினேரு பேர்கள் இருக்கிறார்கள். ஆனால் ருத்ர பத்னியோ கௌரி ஒருவள்தான். பதினேரு புருஷர்களுக்கு ஒரு பத்னி போதுமா? பதினேரு பத்னிகள் வேண்டுமல்லவா என்று யோஜித்து தனது கீர்த்தியால் பத்து திசைகளையும் பத்து கௌரிகளாகச் செய்து அவர்களை ருத்ரர்களுக்கு தானம் செய்துவிட்டார். இப்பொழுது பதினேரு ருத்ரர்களுக்கு பதினேரு கௌரிகள் கிடைத்துவிட்டனர். பத்து திசைகளிலும் ஆசார்யாளின் புகழ் பரவியுள்ளது என்பது இதன் கருத்து. (4)

प्रह्लादपोषकत्वं तव सिद्धमथो हिरण्यवैरित्वम् ।
तस्मान्नृसिंहदेशिक हृत्स्तम्भं मे विभिद्य पुर एहि ॥

ப்ரஹ்லாத போஷகத்வம் தவ ஸித்தமதோ ஹிரண்ய வைரித்வம் ।
தஸ்மாத் ந்ருஸிம்ஹ தேசிக ஹ்ருத்ஸ்தம்பம் மே விபித்ய புர ஏஹி ॥

नृसिंहदेशिक-ந்ருஸிம்ஹ பாரதீ ஸத்குருவே, प्रह्लाद-पोषकत्व, ப்ரஹ்லாதனைக் காப்பாற்றும் தன்மையும் (சிறந்த ஆனந்தத்தை போஷிக்கும் தன்மையும்) अथो-பிறகு, हिरण्यवैरित्वं-ஹிரண்யகசிபுவுக்கு எதிரியாக இருக்கும் தன்மையும் (ஸுவர்ணத்திற்கு விரோதியாயிருக்கும் தன்மையும்), तव-உங்களுக்கு, सिद्धं-ஏற்பட்டிருக்கிறது, तस्मात्- ஆகையால், मे-என்னுடைய, हृत्स्तम्भं-மனமாகிற தூணை, विभिद्य நன்ருகப் பிளந்து, पुरः-முன்னால், एहि-வரவேணும்.

மஹாவிஷ்ணு ந்ருஸிம்ஹாவதாரம் எடுத்து ஹிரண்யகசிபுவைக் கொன்றதால் ஹிரண்ய வைரியாகவும், பிரஹ்லாதனைக் காப்பாற்றியதால் பிரஹ்லாத போஷகராகவும் இருந்தார். இவ்விரண்டும் தங்களுக்கு ஸ்வதஸ்ஸித்தமாக ஏற்பட்டிருக்கிறது. ப்ரஹ்லாதம் என்பது சிறந்த

ஆனந்தம் அதாவது ஆத்மானந்தம். இதை நீங்கள் அனுபவிப்பதுடன் பக்தர்களுக்கும் அளித்துக் காப்பாற்றுவதால் நீங்களும் ப்ரஹ்லாத போஷகர்தான். தீவ்ர வைராக்யமுள்ள தங்களுக்கு ஸுவர்ணத்தில் சிறிதும் ஆசையில்லாததால் ஹிரண்ய வைரியாகவும் விளங்குகிறீர்கள். ந்ருஸிம்ஹர் என்ற பெயரும் தங்களுக்கு அமைந்திருக்கிறது. இத்தனை இருந்தாலும் மற்றும் ஒரு காரியத்தைச் செய்தால்தான் தாங்கள் நரஸிம்ஹர்போல் ஆகமுடியும். அதாவது அவர் பக்தனை ப்ரஹ்லாதனின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு தூணைப்பிளந்து வெளியே வந்து காக்ஷி யளித்தார். தாங்களும் பக்தனை என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு என் மனமாகிற உறுதியான தூணைப்பிளந்து என் முன்னால் வந்து தர்சனம் தரவேண்டும். இப்படிச்செய்தால் தான் நீங்கள் நரஸிஹ்மராக ஆக முடியும். அதாவது எனக்கு ஆத்மஞானத்தை உபதேசித்து என் மனதை அழித்து மோக்ஷமடையும்படி அருள் புரியவேணுமென்று பிரார்த்திக்கிறார். (5)

**सर्वज्ञतासकलशक्तियुतत्वहेतोः**
**श्रीशंभुसाम्यमखिला भवतो वदन्ति ।**
**आधिक्यमेव तव देशिक संगिरेऽहं**
**राजाङ्घ्रिरस्ति हि भवान् स तु राजमौलिः ॥ ६ ॥**

ஸர்வஜ்ஞதா ஸகல **ஶ**க்தியுதத்வஹேதோ:
ஸ்ரீ**ஶ**ம்புஸாம்யமகிலா பவதோ வதந்தி ।
ஆதிக்யமேவ தவ தே**ஶி**க ஸங்கிரே**z**ஹம்
ராஜாங்க்ரிரஸ்தி ஹி பவான் ஸ து ராஜமௌளி: ॥

**सर्वज्ञता**–எல்லாம் அறிந்தவராயிருக்கும் தன்மை, **सकलशक्ति-युतत्व**–எல்லா சக்திகளுடனும் கூடியிருக்கும் தன்மை, **हेतोः**–இக் காரணத்தால், **भवतः**–உமக்கு, **श्रीशंभुसाम्यं**–பரமசிவனோடு ஸமமாக இருக்கும் தன்மையை, **अखिलाः**–எல்லோரும் **वदन्ति**–சொல்கிறார்கள். **देशिक**–ஸத்குருவே, **अहं**–நானோவெனில், **तव**–உமக்கு, **आधिक्यमेव**–மேலாயிருக்கும் தன்மையையே, **संगिरे**–சொல்கிறேன். **हि**–ஏனெனில் **भवान्**–தாங்கள், **राजाङ्घ्रिः**–அரசர்களைக் காலில் உடையவராக, **अस्ति**–இருக்கிறீர். **स तु**–அவரோவெனில், **राजमौलिः**–ராஜாவை உடையவர்.

பரமேசுவரன் ஸர்வஜ்ஞர் எல்லாம் அறிந்தவர். ஸர்வசக்தர் எல்லா சக்திகளும் பொருந்தியவர். இவ்விரண்டும் இருப்பதால்தான் பரம சிவனுக்குப் பெருமை. இவ்விரண்டும் தங்களிடமும் உள்ளன. தாங்கள் எல்லாவற்றையும் அறிந்தவரானதாலும் தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லாததினலும் தாங்களும் ஸர்வக்ஞர்தான். காலடியைக் கண்டுபிடித்துக் கும்பாபிஷேகம் நடத்தியது, இறந்துபோன பல்லியை பிழைக்கவைத்தது முதலிய கார்யங்களால் தாங்கள் ஸர்வ சக்தர் என்பதையும் காட்டியிருக்கிறீர்கள். இக்காரணத்தால் தாங்கள் பரமேசுவரனுக்கு ஸமமானவர் என்று எல்லோரும் சொல்கிருர்கள். நான் இத்துடன் திருப்தியடையவில்லை. தாங்கள் பரமேசுவரனைக் காட்டிலும் மேலானவர் என்பதை காரணத்துடன் நிரூபிக்கிறேன். பரமசிவனுக்கு ராஜமௌளி என்று ஒரு பெயருண்டு. ராஜா என்ருல் சந்திரன். சந்திரனை சிரஸில் தாங்கிக்கொண்டிருக்கிருர். அதனுல் அந்தப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. தங்கள் சரணத்தில் அநேகம் அரசர்கள் இருக்கிருர்கள். அதாவது எல்லா அரசர்களும் தங்கள் காலடியில் விழுந்து வணங்குகிருர்கள். ஆகவே **ஒரு** ராஜாவை **தலையில்** வைத்துக்கொண்டிருக்கும் பரமசிவன் பெரியவரா **பல** ராஜாக்களை **காலில்** வைத்துக்கொண்டிருக்கும் தாங்கள் பெரியவரா? நிச்சயம் தாங்கள் தான் பெரியவர் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள்.

ஸ்ரீமதாசார்யேந்த்ரஸ்தவம் முற்றிற்று.

## ॥ नवरत्नमाला ॥

## நவரத்னமாலா

लोकं समस्तमपि मोहमहान्धकार-
नश्यद्दृशं भवमहाजलधौ पतन्तम् ।
स्वोक्त्यञ्जनेन समपालयदाशु यः सः
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ १ ॥

லோகம் ஸமஸ்தமபி மோஹ மஹாந்தகார
நச்யத் த்ருஶம் பவ மஹாஜலதௌ பதந்தம் ।
ஸ்வோக்த்யஞ்ஜநேந ஸமபாலயதாஶு ய: ஸ:
த்ருக்கோசரோ பவது தேஶிகராண்மமாசு ॥

**यः**-எவர், **मोहमहान्धकार**-மோஹமென்னும் பெரிய இருளால், **नश्यद्दृशं**-அழிந்துபோகும் பார்வையையுடையவரும் (அதனுல்), **भवमहाजलधौ**-ஸம்ஸாரமென்னும் பெரிய ஸமுத்திரத்தில், **पतन्तं**-விழுகின்றவருமான, **समस्तं लोकमपि**-எல்லா ஜனங்களேயும், **स्वोक्त्यञ्जनेन**-தமது உபதேசமாகிற மையினுல், **आशु**-விரைவில் **समपालयत्**-காப்பாற்றிஞரோ, **सः**-அந்த, **देशिकराट्**-ஆசார்யவர்யர், **आशु**-சீக்கிரம், **मम**-என்னுடைய, **दृग्गोचरः**-கண்களுக்குப் புலப்படுகிறவராக, **भवतु**-ஆகட்டும்.

நம் கண்களுக்கு வெளிச்சமிருக்கும்பொழுது தான் பார்க்கும்திறமை உண்டு. இருட்டில் நம் கண்களால் ஒன்றையும் பார்க்கமுடியாது. அதிலும் மழை காலத்தில் இரவில் கும்மிருட்டில் வழி நடந்தோமாஞல், கண்களுக்கு ஒன்றும்தெரியாமல் வழி தவறி பாழும் கிணற்றிலும் விழுந்து விடலாம். அச்சமயம் ஓர் மஹா புருஷன் வந்து நம்மை கைதூக்கிவிட்டு இருளிலும் பார்க்கும் சக்தியைத்தரும் மையை கண்ணில் இட்டு வழியும் காட்டிஞல் அந்த மஹோபகாரியை நாம் மறக்க முடியுமா ? அதுபோல சரீராதிகளேயே நான் என்று எண்ணுவதாகிய மோஹத்ததால் ஆத்மாவைப்பற்றிய உண்மை அறிவு நமக்கு ஏற்படவில்லே. சரீராபிமானத்துடன் நாம் செய்யும் கார்யங்களால் திரும்பத் திரும்ப

பிறவி மரணங்களையடைந்து துன்பப்படுகிறோம். தேசிகராஜர் (ஸ்ரீ ந்ருஸிம்மபாரதீ ஸ்வாமிகள்) துன்பப்படும் ஜனங்களிடம் கிருபையால் அவர்களுக்கு ஆத்மதத்வத்தை உபதேசித்து மோஹத்தை நீக்கி கைதூக்கிவிடுகிறார். இவர் இப்பொழுது மறைந்துவிட்டார். ஆனாலும் நான் கண்களால் பார்க்கும்படியாக எதிரில் வந்து தர்சனம் கொடுக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறார். (1)

**पाषण्डमुख्यमतकुम्भिषु केसरीन्द्रः**
**पापाटवीदवविभावसुरानतानाम् ।**
**अद्वैतवारिनिधिपूर्णशशी च यः सः**
**दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ २ ॥**

பாஷண்ட முக்யமதகும்பிஷு கேஸரீந்த்ர:
பாபாடவீ தவ விபாவஸு ராநதாநாம் ।
அத்வைத வாரிநிதி பூர்ணசசீ ச ய: ஸ:
த்ருக் கோசரோ பவது தேசிகராண் மமாசு ॥

**यः**–எவர், **पाषण्डमुख्यमत**–வேதத்தைக் கண்டிக்கிற பிரபலமான நாஸ்திக மதங்களாகிற, **कुम्भिषु**–யானைகளிடம், **केसरीन्द्रः**–சிறந்த ஸிம்மமாகவும், **आनतानां**–வணங்குபவர்களின், **पापाटवी**–பாபங்களாகிற காட்டிற்கு, **दवविभावसुः**–காட்டுத்தீயாகவும், **अद्वैतवारिनिधि**–அத்வைத மாகிற ஸமுத்திரத்திற்கு, **पूर्णशशी च**–பூர்ண சந்திரனுகவும் (இருக்கிறரோ), **सः**–அந்த, **देशिकराट्**–குருராஜர், **आशु**–, சீக்கிரம் **मम**–எனக்கு, **दृग्गोचरः**–கண்களுக்குத் தெரிபவராக, **भवतु**–ஆகட்டும்.

காட்டில் ஸிம்மத்தைக் கண்டால் யானைகள் பயந்து ஓடி மறைந்து விடும். ஸிம்மத்தினிடம் அகப்பட்டுவிட்டால் அவை பிழைக்கமுடியாது. இதுபோல பரம ஆஸ்திகர்களான ஆசார்யரைக் கண்ட மாத்திரத்தில் நாஸ்திகர்கள் ஓடி ஒளிந்துவிடுவார்கள். அல்லது இவருடைய உபதேசத்தைக் கேட்ட மாத்திரத்தில் நாஸ்திக வாதத்தைக் கைவிட்டு ஆஸ்திகர்களாக ஆய்விடுவார்கள். காட்டுத்தீ கிளம்பினால் காட்டிலுள்ள மரங்களையெல்லாம் சாம்பலாக்கிவிடுவதுபோல் தம்மை வணங்கும் பக்தர் களின் எல்லாப் பாபங்களையும் போக்கி விடுவார்கள். பௌர்ணமியன்று ஆகாசத்தில் தோன்றும் பூர்ண சந்திரன் கடலைப் பொங்கி எழச்செய்வது

போல் ஆசார்யாளும் பலவிதத்திலும் அத்வைத ஸித்தாந்தத்திற்கு வளர்ச்சியையுண்டுபண்ணுகிறார். இவர் என் கண்களுக்கு புலப்படவும். (2)

शब्दादिमान् हि विषयान्विषतुल्यकक्ष्यान्
ज्ञात्वापि तत्र बहुरागवतो ममाशु ।
पादानताखिलजनस्य विरक्तिदाता
दृग्गोचरो भवतु देशिकसार्वभौमः ॥ ३ ॥

ஶப்தாதிமான் ஹி விஷயான் விஷதுல்ய கக்ஷ்யான்
ஜ்ஞாத்வாऽபி தத்ர பஹுராகவதோ மமாஶு ।
பாதாநதாகிலஜநஸ்ய விரக்திதாதா
த்ருக்கோசரோ பவது தேஶிக ஸார்வபௌம: ॥

**शब्दादिमान्**-சப்தம் முதலான, **विषयान्**-விஷயங்களை, **विषतुल्यकक्ष्यान्**-விஷத்திற்கு ஒப்பான பிரிவிலுள்ளவைகளாக, **ज्ञात्वापि**-அறிந்திருந்த போதிலும், **तत्र**-அதில், **बहुरागवतः**-அதிகமான ஆசையோடு கூடிய, **मम**-எனக்கு, **पादानताखिलजनस्य**-கால்களில் வணங்கும் எல்லா ஜனங்களுக்கும், **विरक्तिदाता**-வைராக்யத்தைக் கொடுக்கிற, **देशिकसार्वभौमः**-ஆசார்யசக்ரவர்த்தி, **आशु**-சீக்கிரம், **दृग्गोचरः**-கண்களுக்குத் தெரிபவராக, **भवतु**-ஆகட்டும்.

உலகில் நமக்கு ஏற்படும் எல்லாத்துன்பங்களுக்கும் காரணம் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் விஷயங்கள்தான். இவைகளை விஷத்திற்கு ஸமானமாகக் கூறலாம். விஷம் உயிரைக் குடிக்கிறது உயிர் போன்ற நம் எல்லா சக்திகளையும் விஷயம் அழித்து விடுகிறது. 'விஷயம்' என்ற சொல்லில் விஷம் என்ற சொல் அடங்கியுள்ளது. 'ய' என்ற எழுத்து இதில் அதிகமாகவே உள்ளது. இது எல்லாம் நன்கு தெரிந்தபோதிலும் அவற்றில் அளவற்ற ஆசை ஏற்படுகிறது. இதை நீக்க என்றால் முடியவில்லை. தாங்களோ, தங்கள் திருவடிகளில் வணங்கும் பக்தர்களுக்கெல்லாம் விஷய ஆசையை ஒழித்து வைராக்யத்தை அருளுகிறீர்கள். தங்கள் பக்தனான எனக்குத் தாங்கள் தர்சனம் கொடுத்து வைராக்யத்தை அருளி விஷய ஆசையைப் போக்கவேண்டுகிறேன்.

(குறிப்பு) இந்த சுலோகத்தில் தீவ்ர வைராக்யமுள்ள ஆசார்யாள் தனக்கு விஷய ஆசை நிறைய இருப்பதாகக் கூறுகிறார். உண்மையில் அவர்களுக்கு ஆசை கொஞ்சமும் கிடையாது. ஆசை மிகுந்த நாம் வைராக்யத்தைக் கோரவேண்டும் என்று நமக்காகச் செய்யப்பட்ட சுலோகமிது. (3)

**श्रीमन्नृसिंहगुरुपादयुगाब्जभृङ्गः**
**सीमाविलंघिधिषणोऽखिलशास्त्रवेत्ता ।**
**नम्रान्तरान्ध्यविनिवारणचण्डरश्मिः**
**दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ४ ॥**

ச்ரீமந்ந்ருஸிம்ஹ குரு பாதயுகாப்ஜ ப்ருங்க:
ஸீமாவிலங்கி திஷணோऽகில சாஸ்த்ரவேத்தா ।
நம்ராந்தராந்த்ய விநிவாரண சண்டரச்மி:
த்ருக்கோசரோ பவது தேசிகராண் மமாசு ॥

**श्रीमन्नृसिंहगुरु**-ஸ்ரீந்ருஸிம்ஹபாரதீ என்ற தமது குருவின், **पादयुगाब्ज**-இருதிருவடித் தாமரைகளில், **भृङ्ग**-வண்டாக இருப்பவரும், **सीमाविलंघिधिषणः**-எல்லைதாண்டிய புத்தியுள்ளவரும், **अखिलशास्त्रवेत्ता**-எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவரும், **नम्रान्तरान्ध्य**-வணங்குபவர்களின் மனதிலுள்ள இருளை, **विनिवारण**-போக்குவதில், **चण्डरश्मिः** ஸூரியனாக இருப்பவருமான, **देशिकराट्**-குருராஜர், **आशु**-விரைவில், **मम दृग्गोचरो भवतु**-என் கண்களுக்கு விஷயமாக ஆகட்டும்.

ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் குரு ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள். தாமரையை வண்டுகள் மொய்ப்பதுபோல் தமது குருநாதரின் இரு திருவடிகளை பூஜித்து த்யானம் செய்பவர். அவருடைய புத்தி சக்திக்கு எல்லையே கிடையாது. எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவர். சூரியனுடைய உக்ரமான கிரணங்கள் செல்லுமிடத்தில் சிறிதும் இருள் இருக்காது. அதுபோல் ஆசார்யாளும் தமது கடாக்ஷத்தாலும் உபதேசங்களாலும் தம்மை வணங்கும் பக்தர்களின் மனத்தில் குடிகொண்டுள்ள இருளை அதாவது அக்ஞானத்தை அடியோடு போக்கிவிடுகிறார். இந்த குருநாதர் என் கண்களால் பார்க்கும்படி என் முன் தோன்றியருளவேண்டும். (4)

**कामादिशृङ्गिपरिभेदनवज्रपाणिः**
**नामावधूतनिखिलाघचयो महस्वी ।**
**सामादिशीर्षपरिगीतनिजस्वरूपः**
**दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ५ ॥**

காமாதி ச்ருங்கிபரிபேதன வஜ்ரபாணி:
நாமாவதூத நிகிலாகசயோ மஹஸ்வீ I
ஸாமாதி ஶீர்ஷபரிகீத நிஜஸ்வரூப:
த்ருக்கோசரோ பவது தேஶிகராண் மமாஶு II

**कामादि**—காமம் முதலியவைகளாகிய, **शृङ्गि**—சிகரங்களுடன் கூடிய மலைகளை, **परिभेदन**—பிளப்பதில், **वज्रपाणिः**—வஜ்ரத்தைக் கையில் ஏந்திய இந்திரனாக இருப்பவரும், **नामावधूत**—நாமாவினால் போக்கப்பட்ட, **निखिलाघचयः**—எல்லா பாபங்களின் கூட்டத்தை உடையவரும், **महस्वी**—காந்தியுடன் கூடியவரும், **सामादि**—ஸாம முதலான வேதங்களின், **शीर्ष**—சிரஸான உபநிஷத்தில், **परिगीत**—துதிக்கப்பட்ட, **निजस्वरूपः**—தனதுஸ்வரூபத்தை உடையவருமான, **देशिकराट्**—குருராஜர் **आशु**—விரைவில், **मम**—என்னுடைய, **दृग्गोचरो भवतु**—கண்களுக்கு விளங்குபவராக ஆகட்டும்.

ஒருகாலத்தில் மலைகள் இறக்கைகளுடன் ஆகாயத்தில் பறந்து வந்து உலகிற்குத் தீங்கு விளைவித்தன. அப்பொழுது தேவேந்திரன் வஜ்ரத்தைக் கையில் ஏந்தி அதனால் இறக்கைகளை வெட்டி மலைகளை கீழே தள்ளினான். அதுபோல் ஆசார்யாளும் பக்தர்களின் மனதில் மலைபோல் வளர்ந்து அவர்களைப் பறக்கவைக்கும் காமம் கோபம் முதலான தோஷங்களை தமது உபதேசங்களால் அழித்துவிடுகிறார். பகவந்நாமாக்களைப் போல குருநாதர் நாமாவை உச்சரித்தால் எல்லா பாபங்களும் நீங்கிவிடும். சரீராதிகளில் அபிமானத்தை விலக்கி ஸாம வேதத்திலும் மற்றுமுள்ள வேதங்களிலும் சிரோபாகமாக விளங்கும் சாந்தோக்யம் முதலான உபநிஷத்துக்களில் வர்ணிக்கப்பட்ட ப்ரஹ்ம தத்வத்தையே தன் ஆத்மஸ்வரூபமாக அறிந்தவர். மிகுந்த தேஜஸ்ஸுடன் விளங்கியவர். இந்த குருநாதர் எனக்கு தர்சனம் கொடுத்தருளட்டும். (5)

आश्रामवासिवटुमेकमभाषमाणं
संभाषमाणमकरोत्त्वरितं कृपातः ।
श्रीशंकरार्य इव यः स हि हस्तधात्रीं
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ६ ॥

ஆச்ராம வாஸி வடுமேகமபாஷமாணம்
ஸம்பாஷமாணமகரோத் த்வரிதம் க்ருபாத: ।
ஸ்ரீ சங்கரார்ய இவ ய: ஸ ஹி ஹஸ்த தாத்ரீம்
த்ருக்கோசரோ பவது தேசிகராண்மமாசு ॥

**श्रीशंकरार्यः**–ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார், **हस्तधात्रीमिव**-ஹஸ்தாமலகரைப்போல, **यः**–எவர், **कृपातः**-கிருபையினுல், **अभाषमाणं**-பேசாத, **एकं**-ஒரு, **आश्रामवासिवटु**-ஆச்ராமம் என்ற கிராமத்தில் வஸிக்கும் ப்ரஹ்மசாரிச் சிறுவனை, **त्वरितं**-சீக்கிரமாக, **संभाषमाणं**-பேசுகிறவனுக, **अकरोत्**-செய்தாரோ, **सः**-அந்த, **देशिकराट्** குருராஜர் **आशु**–சீக்கிரம் **मम**-என்னுடைய, **दृग्गोचरः**-கண்களுக்குத் தெரிபவராக **भवतु**–ஆகட்டும்.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் தமது ஸஞ்சாரத்தில் ஸ்ரீ பலி என்ற கிராமம் சென்றபொழுது அங்கு பிறந்தது முதல் வாயைத்திறந்து ஒரு வார்த்தைகூட பேசாததால் ஊமை என்றே உலகத்தோரால் நினைக்கப் பட்ட ஒரு பிராமணச் சிறுவனைப் பார்த்து, அவன் தந்தையின் வேண்டு கோளுக்கிரங்கி பேசும்படி செய்தார். இவரேதான் ஹஸ்தாமலகர் என்ற பெயருடன் ஆசார்யாளின் சிஷ்யராக விளங்கினுர். திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தைச்சேர்ந்த 'ஆச்ராமம்' என்ற கிராமத்திலுள்ள ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்ற பண்டிதருக்கு பிறவியிலேயே ஊமை யான 12 வயது பையனிருந்தான். பிதாவின் பிரார்த்தனைக்கு இரங்கி ஆசார்யாள் பையனுடன் அவரை சுசீந்திர கிராமத்திற்கு வரச்செய்து பிதாவுக்கு ஓர் மந்திரத்தை உபதேசித்து இம்மந்திரத்தால் அபிமந்திரணம் செய்த தீர்த்தத்தை தினமும் பையனுக்கு பிராசனம் செய்விக்கும்படி அனுக்ரஹித்தார். இவ்வாறே மூன்று மாதம் விடாமல் செய்துவந்ததில் பையனுக்கு ஜாட்யமும் ஊமைத்தன்மையும் நீங்கிவிட்டது. இவ் வரலாற்றை அந்த பண்டிதர் பின்வரும் சுலோகத்தில் காட்டியிருக்கிறுர்

"आश्रमवासिद्विजराजसूनुमूकत्वविद्रावणपण्डिताभ्याम् ।
आनन्दसन्दायकवैभवाभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥"

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் போலவே ஊமையைப் பேசவைத்த குருநாதர் விரைவில் என்முன் தோன்றட்டும். (6)

विप्रं ह्यपस्मृतियुतं प्रसमीक्ष्य तस्य
मूर्ध्न्यङ्घ्रिमादधदपारकृपाम्बुराशिः ।
यो दक्षिणास्य इव रोगमपानुदत्तं
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ७ ॥

விப்ரம் ஹ்யபஸ்ம்ருதியுதம் ப்ரஸமீக்ஷ்ய தஸ்ய
மூர்த்ந்யங்க்ரிமாததததபாரக்ருபாம்புராஶி: 1
யோ தக்ஷிணாஸ்ய இவ ரோகமபாநுதத் தம்
த்ருக்கோசரோ பவது தேஶிகராண் மமாஶு 11

**अपारकृपाम्बुराशिः**–எல்லையற்ற கருணைக் கடலான, **यः**–எவர், **दक्षिणास्य इव**–தக்ஷிணாமூர்த்திபோல், **अपस्मृतियुतं**–அபஸ்மார வியாதியுடன் கூடிய, **विप्रं**–பிராமணனை, **प्रसमीक्ष्य**–பார்த்து, **तस्य**–அவனுடைய, **मूर्ध्नि**–சிரஸ்ஸில், **अङ्घ्रिं**–சரணத்தை, **आदधत्**–வைக்கிறவராக, **तं रोगं**–அந்த வியாதியை, **अपानुदत्**–போக்கினரோ **देशिकराट्**–(அந்த) குருராஜர், **आशु**–விரைவில், **मम**–என்னுடைய **दृग्गोचरः**–கண்களுக்கு விஷயமாக, **भवतु**–ஆகட்டும்.

கோவில்களில் தக்ஷிணாமூர்த்தித் திரு உருவத்தில் தமது காலால் ஓர் புருஷனை மிதித்துக்கொண்டிருப்பதைக் காணலாம். அவன்தான் அபஸ்மாரம். தக்ஷிணாமூர்த்தி அவனை அடக்கினர். அவரை தியானிப்பவர்களுக்கு இவ்வியாதி வராது. இதுபோலவே ஒரு பிராமணர் அபஸ்மாரம் என்னும் மஹாரோகத்தால் மிகவும் துன்புறுவதைக்கண்டு மனம் ஸஹிக்காமல் எல்லையற்ற கருணைக் கடலான நம் ஆசார்யாளும் மிகுந்த இரக்கம் கொண்டு ஸகலதாபங்களையும் போக்கும் தமது திருவடித்தாமரைகளை அவர்சிரஸ்ஸில் வைத்து அவருடைய மஹாரோகத்தை அடியோடு போக்கிவிட்டார். (7)

ऊर्ध्वस्थलान्निपतितां गृहगोधिकां यः
त्यक्तासुमाशु करकाम्बुकणेन सिक्त्वा ।
सोऽजीवयज्जनसमक्षममेयशक्तिः
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ८ ॥

ஊர்த்வஸ்தலாத் நிபதிதாம் க்ருஹகோதிகாம் ய:
த்யக்தாஸுமாஶு கரகாம்புகணேந ஸிக்த்வா ।
ஸோऽஜீவயஜ்ஜநஸமக்ஷமமேய ஶக்தி:
த்ருக்கோசரோ பவது தேஶிகராண்மமாஶு ॥

**अमेयशक्तिः**- அளவிட முடியாத மஹிமையுள்ள **यः**-எவர், **ऊर्ध्वस्थलात्**-உயரமான இடத்திலிருந்து, **निपतितां**- விழுந்ததும், **त्यक्तासुं**-பிராணனை விட்டதுமான, **गृहगोधिकां**-வீட்டில் சஞ்சரிக்கும் பல்லியை, **करकाम्बुकणेन**-கமண்டலுவிலுள்ள தீர்த்தலேசத்தால், **सिक्त्वा**-ப்ரோக்ஷித்து, **जनसमक्षं**-ஜனங்களுக்கு எதிரில், **आशु**-விரைவில், **अजीवयत्** - பிழைக்கும்படி செய்தாரோ, **सः**-அந்த, **देशिकराट्**-குருராஜர், **आशु**-சீக்கிரம், **मम**-எனக்கு, **दृग्गोचरः**-கண்களுக்குத் தெரிபவராக, **भवतु**-ஆகட்டும்.

ஒரு சமயம் ஆசார்யாள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருக்கும் பொழுது வெகு உயரத்திலிருந்து ஒரு பல்லி கீழே விழுந்து அந்த வேகத்தில் அதன் பிராணன் போய்விட்டது. உடனே ஆசார்யாள் தமது கமண்டலுவிலிருந்து சிறிது தீர்த்தம் எடுத்து அதன் மேல் ப்ரோக்ஷித்தார்கள். உடனேயே இறந்த பல்லி உயிர்பெற்று விட்டது. இவ்வாறு பல ஜனங்களுக்கெதிரில் இறந்த ஜந்துவை பிழைக்கும்படி செய்தாரென்றால் அவருடைய திவ்யசக்திகளை யார்தான் அளவிட்டு கூறமுடியும்? அவர் உலகத்தை விட்டு மறைந்த போதிலும் தமது திவ்ய சக்தியால் என்முன் தோன்றி தர்சனம் கொடுக்க வேண்டும்.

(8)

मर्त्याचिकित्स्यबहुकुष्ठनिपीडितं यः
विप्रं हि कञ्चन तदामयहीनमाशु ।

चक्रे स दत्त इव केवलभस्मदानात्
दृग्गोचरो भवतु देशिकराण्ममाशु ॥ ९ ॥

மர்த்யாசிகித்ஸ்யபஹுகுஷ்டநிபீடிதம் யः
விப்ரம் ஹி கஞ்சந ததாமயஹீநமாஶு ।
சக்ரே ஸ தத்த இவ கேவலபஸ்மதாநாத்
த்ருக்கோசரோ பவது தேஶிகராண் மமாஶு ॥

**यः**–எவர், **मर्त्याचिकित्स्य**-மனிதர்களால் சிகித்ஸைசெய்து போக்க முடியாத, **बहुकुष्ठनिपीडितं**–அதிகமான குஷ்டரோகத்தால் மிகவும் துன்பப்பட்ட, **कञ्चन विप्रं**-ஒரு பிருமணரை, **आशु**–விரைவில், **दत्त इव** தத்தாத்ரேயர்போல், **केवलभस्मदानात्**– விபூதியை மட்டும் கொடுப்பதனுலேயே, **तदामयहीनं**–அந்த வியாதி நீங்கியவராக, **चक्रे**-செய்தாரோ, **सः**–அந்த, **देशिकराट्**–குருராஜர், **आशु**–விரைவில், **मम**-எனக்கு, **दृग्गोचरः**–கண்களுக்குப் புலப்படுபவராக, **भवतु**–ஆகட்டும்.

ஒரு பிராமணர் குஷ்டரோகத்தால் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். செய்யாத வைத்யமில்லை. இந்த வியாதியைப் போக்க முடியாது என்றுசொல்லி சிறந்த வைத்தியர்களும் கைவிட்டுவிட்டார்கள். இந்த நிலைமையில் அதிருஷ்டவசத்தால் நமது ஆசார்யாளின் தர்சனம் கிடைத்து அவரது மஹிமைகளை அறிந்து பாதங்களில் விழுந்து எப்படியாவது வியாதியை போக்கியருள வேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்தார். ஆசார்யாள் கருணையுடன் அபிமந்த்ரணம் செய்த விபூதியைக் கொடுத்து உள்ளுக்கும் வெளியிலும் உபயோகப்படுத்தச் சொல்லி அது ஒன்றினுலேயே அடியோடு வியாதி நீங்கும்படி செய்து விட்டார். தத்தாத்ரேயகுருவும் ஒரு பிராமணருடைய குஷ்ட வியாதியைப் போக்கியுள்ளார். ஸ்ரீசங்கரபகவத்பாதர், ஸ்ரீதக்ஷிணமூர்த்தி, ஸ்ரீதத்தாத்ரேய யோகி இவர்களுக்கு ஸமமானவர் நம் ஆசார்யாள் என்பதை இந்த சுலோகங்களில் குறிப்பிடுகிறுர். (9)

# ॥ आचार्यपदावलम्बनस्तुतिः ॥

# ஆசார்யபதாவலம்பனஸ்துதி

ओमित्यशेषविबुधाः शिरसा यदाज्ञां
संबिभ्रते सुममयीमिव नव्यमालाम् ।
ओंकारजापरतलभ्यपदाब्ज स त्वं
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ १ ॥

ஓமித்யஶேஷவிபுதா: ஶிரஸா யதாஜ்ஞாம்
ஸம்பிப்ரதே ஸுமமயீமிவ நவ்யமாலாம் ।
ஓங்காரஜாபரதலப்ய பதாப்ஜ ஸ த்வம்
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**ओंकारजापरत**-பிரணவத்தை ஜபிப்பதில் ஈடுபட்டவர்களால் (யதிகளால்), **लभ्य** - அடையத்தகுந்த, **पदाब्ज** - பாதாரவிந்தங்களை உடைய, **श्रीशंकरार्य**-ஹே சங்கராசார்யரே, **अशेषविबुधाः**-எல்லா வித்வான்களும் (தேவர்களும்), **सुममयीं**-புஷ்பமயமான, **नव्यमालामिव** புதிய மாலையைப்போல, **यदाज्ञां**-எவருடைய உத்தரவை, **ओमिति**-ஆகட்டுமென்று, **शिरसा**-சிரஸினாலே, **संबिभ्रते**-தாங்குகிறார்களோ, **स त्वं**-அந்த நீர், **मम**-எனக்கு, **पदावलम्बं**-சரணரூபமான பிடிமானத்தை **देहि**-கொடுக்கவேணும்.

நறு மணமுள்ள புதிய மலர்மாலையை தேவதைகளுக்கு சாற்றுகிறோம். அவர்களும் ப்ரீதியுடன் அதை ஏற்றுக்கொள்கிறார்கள். பெரிய ஸபையில் மஹாபண்டிதர்களுக்கு மலர்மாலை அணிவித்து கௌரவிப்பது வழக்கம். அவர்களும் ஸந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்வார்கள். இது போலவே எல்லா பண்டிதர்களும் பகவத் பாதாளின் உத்தரவை மலர் மாலைபோல் மிகுந்த ப்ரீதியுடனும் பக்தியுடனும் சிரஸா வஹித்து உடன் நிறைவேற்றுகிறார்கள். பகவத்பாதர் கிரந்தங்களை இயற்றி வைதிக மதத்தை ஸ்தாபித்ததாலல்லவா பண்டிதர்கள் போற்றப்படும் நிலையையடைந்துள்ளார்கள். ஆசார்ய பாஷ்யங்களை வாசித்துத்தான் பண்டிதர்களும் சிறந்த அறிவைப்பெற்றார்கள். தேவர்

களின் பிரார்த்தனைக்கு இணங்கி பரமசிவனே பகவத் பாதராக அவதரித்திருக்கிறபடியாலும் சிஷ்யர்களும் தேவதாம்சமானபடியாலும் எல்லா தேவதைகளும் அவர் உத்தரவை பக்தியுடன் நிறைவேற்றுவதும் உசிதம் தான். ப்ரணவ ஜபத்தில் ஈடுபட்ட யதிகள்தான் அவர் திருவடிகளை அடையமுடியும். ஹே சங்கராசார்யரே, தங்கள் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு கரையேறும்படி அருள் புரியவேணும். (1)

नम्रालिहृत्तिमिरचण्डमयूखमालिन्
कम्रस्मितापहृतकुन्दसुधांशुदर्प ।
संराट् यदीयदयया प्रभवेद्दरिद्रः
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ २ ॥

நம்ராளி ஹ்ருத்திமிர சண்டமயூகமாலின்
கம்ர ஸ்மிதாபஹ்ருதகுந்த ஸுதாம்ஶுதர்ப்ப 1
ஸம்ராட் யதீயதயயா ப்ரபவேத் தரித்ர:
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் 11

**नम्रालि**-வணங்கும் பக்தர் கூட்டத்தின், **हृत्तिमिर**-ஹிருதயத்திலுள்ள இருளுக்கு, **चण्डमयूखमालिन्**-உக்ரகிரண வரிசைகளுள்ள சூரியனாக இருப்பவரே, **कम्र**-அழகிய, **स्मितापहृत**-புன்சிரிப்பினால் போக்கடிக்கப்பட்ட, **कुन्दसुधांशुदर्प**-குந்தமலர், சந்திரன் இவர்களின் கர்வத்தை உடையவரே, **श्रीशंकरार्य**-ஸ்ரீசங்கராசார்யரே ! **यदीयदयया**-எந்த உம்தயவால், **दरिद्रः**-ஏழை, **संराट्**-சக்ரவர்த்தியாக, **प्रभवेत्**-ஆவானோ (அந்த நீங்கள்), **मम**-எனக்கு, **पदावलम्बं**-திருவடிகளை ஆசிரயமாக, **देहि**-தந்து அருளவேணும்.

சூரியனது கிரணங்கள் எவ்வளவு உக்ரமாக இருந்தபோதிலும் வெளி இருட்டைத்தான் போக்கும். நம் மனதிலுள்ள அக்ஞானமென்னும் இருளைப்போக்க ஸூர்யனுக்கு சக்தி கிடையாது. ஆனால் நமது ஆசார்யாள் தம்மை வணங்கும் எல்லா பக்தர்களுடைய மனதில் உள்ள அக்ஞானத்தைத் தமது உபதேசங்களால் போக்கிவிடுகிறார். உள் இருட்டைப் போக்குவதில் ஆசார்யாள் சூரியனாகவும் அவரது உபதேசங்கள் கிரணங்களாகவும் விளங்குகிறார்கள். வெள்ளை மல்லிகை

மலரும் சந்திரனும் வெண்மை நிறமுள்ளதாக இருப்பதுடன் தாபத்தைப் போக்கி மனதுக்கு ஆனந்தத்தையும் தருவதால் மிகுந்த கர்வம் கொண்டிருந்தன. ஆசார்யாளின் அழகிய மந்தஹாஸத்தைக்கண்டதும் அவற்றின் கர்வம் நீங்கிவிட்டது. லேசாகத் தெரியும் தந்த சோபையால் வெண்மை நிறமுள்ள மந்தஹாஸம் தன்னை தர்சிப்பவர்களின் சரீரத்திலும் மனதிலுமுள்ள தாபங்கள் எல்லாவற்றையும் போக்கி உண்மையான ஆனந்தத்தைத் தருகிறது. ஆசார்யாளின் கருணைக்குப் பாத்திரமாகிறவன் ஏழையாயிருந்தபோதிலும் சக்ரவர்த்திக்குத் துல்யமான ஐசுவர்யத்தைப் பெறுவான். ஹே ப்ரபோ, ஸம்ஸாரக் கடலிலிருந்து வெளியேற தங்கள் திருவடிகளைப் பற்றிக்கொள்கிறேன். செய்யவேண்டும். (2)

मस्ते दुरक्षरततिर्लिखिता विधात्रा
जागर्तु साध्वसलवोऽपि न मेऽस्ति तस्याः ।
लुम्पामि ते करुणया करुणाम्बुधे तां
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ ३ ॥

மஸ்தே துரக்ஷரததிர் லிகிதா விதாத்ரா
ஜாகர்த்து ஸாத்வஸலவோऽபி ந மேऽஸ்தி தஸ்யா: ।
லும்பாமி தே கருணயா கருணாம்புதே தாம்
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**विधात्रा**–ப்ரஹ்மாவினால், **मस्ते**–சிரஸ்ஸில், **लिखिता**–எழுதப்பட்ட, **दुरक्षरततिः**–கெட்ட எழுத்துக்களின் வரிசை, **जागर्तु**–விழித்துக் கொண்டிருக்கட்டும், **तस्याः**–அதிலிருந்து, **मे**–எனக்கு, **साध्वसलवोऽपि**–சிறிதுகூட பயம், **नास्ति**–இல்லை. **करुणाम्बुधे**–கருணைக் கடலே, **ते**–உம்முடைய, **करुणया**–தயவினால், **तां**–அந்த எழுத்தை, **लुम्पामि**–அழித்துவிடுகிறேன். **श्रीशंकरार्य**-ஹே சங்கராசார்யரே, **मम**–எனக்கு, **पदावलम्बं**–திருவடிகளை ஆச்ரயமாக, **देहि**– கொடுக்க வேணும்.

ஒவ்வொரு ஜீவனும் பிறக்கும்பொழுதே அப்பிறவியில் அவன் அடையவேண்டிய இன்ப துன்பங்களை அவன் தலையில் ப்ரஹ்மா, எழுதி விடுவதாகவும் அதை யாரும் மாற்ற முடியாது என்றும் சொல்வதுண்டு. "**ललाटलिखिता रेखा परिमार्ष्टुं न शक्यते**" "அவனவன் தலை

யெழுத்துப்படிதானே நடக்கும். நாம் என்ன செய்யமுடியும்?" "தலை யெழுத்து நன்றாயிருந்தால்தானே" என்றெல்லாம் பாமர ஜனங்கள் சொல்வதை நாம் கேட்கிறோம், ஆனால் இந்த சுலோகத்தில் நம் ஆசார்யாள் "தலையெழுத்தைக்கண்டு யாரும் பயப்படவேண்டியதில்லை, தலையெழுத்தை மாற்றிவிடலாம் இம்மட்டுமா! உருவமே தெரியாதபடி முழுவதும் அழித்துவிடலாம்" என்று நமக்குத் தைரியம் சொல்கிறார்கள். பிறந்தது முதல் கடைசி மூச்சுவரை ஸதா துன்பப்பட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்று அசுபாக்ஷரங்களை என் தலையில் பிரம்மா எழுதியிருந் தாலும் இதைக்கண்டு நான் சிறிதும் பயமோ கவலையோ கொள்ளவில்லை. ஏனெனில் ஹே ஸத்குரோ, உமது திருவடிகளைச் சரணமடைந்து விட்டேன். தங்கள் கருணையோ கடல்போல் எல்லையில்லாதது. அதிலிருந்து சிறிதளவு கருணையை என்னிடம் காட்டி தங்கள் திருவடி களை எனக்கு ஆச்ரயமாகத் தந்தருளிவிட்டால் திவ்ய சரணங்களைப் பிடித்துக்கொண்ட என்னை ப்ரஹ்ம லிபி என்ன செய்ய முடியும்? ஸத்குரு சரண சேவை செய்து அவர் அருளைப் பெற்றவர்கள் வாழ்க்கை யில் துன்பமடையமாட்டார்கள். (3)

शम्पालतासदृशभास्वरदेहयुक्त
संपादयाम्यखिलशास्त्रधियं कदा वा ।
शंकानिवारणपटो नमतां नराणां
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ ४ ॥

ஶம்பாலதா ஸத்ருஶ பாஸ்வர தேஹயுக்த
ஸம்பாதயாம்யகில ஶாஸ்த்ரதியம் கதா வா ।
ஶங்கா நிவாரணபடோ நமதாம் நராணும்
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**शंपालतासदृश**-மின்னல் கொடிக்கொப்பான, **भास्वर**-காந்தி யுள்ள, **देहयुक्त**-சரீரத்துடன் கூடியவரே, **कदा वा**-எப்பொழுதுதான், **अखिलशास्त्रधियं**-எல்லா சாஸ்திரங்களிலும் அறிவை, **संपादयामि**- பெறுவேன்? **नमतां**-வணங்கும், **नराणां**-மனிதர்களுக்கு, **शकानि- वारणपटो**-பயத்தைப் போக்குவதில் திறமையுள்ள, **श्रीशंकरार्य**-ஹே சங்கராசார்யரே, **मम**-எனக்கு, **पदावलम्बं**-திருவடிகளை ஆச்ரயமாக, **देहि**-தந்தருளவேணும்.

மின்னல் போல மிகுந்த காந்தியுடன் விளங்கும் சரீரமுள்ளவரும், ஸர்வ வித்யேசானரான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அவதாரமுமான பகவத்பாதாளிடம் ஆசார்யாள் வேண்டுகிறார்:— "எல்லா சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த அறிவைத்தந்து அருளவேண்டும்" என்று. ஆசார்யாள் ஸர்வ சாஸ்த்ரபாரங்கதர்களாயிருந்தாலும் நம் போன்றோர் வேண்டிக்கொள்வதற்காக இதைக்கூறுகிறார். மற்ற சாஸ்திரங்களின் அறிவு இருந்தால் தான் பகவத்பாதாளின் பாஷ்யாதி கிரந்தங்களை நன்கு தெரிந்துகொள்ள முடியும். குருமுகமாக சிரவணம் செய்த உபநிஷதர்த்த ஞானம் உறுதிப்படும். பகவத்பாதாளை வணங்கி வேண்டிக்கொண்டால் எந்த ஸந்தேஹமும் நீங்கிவிடும். இது மட்டுமா ? தத்வஞானத்தைக்கொடுத்து ஸம்ஸார பயத்தையே நீக்கிவிடுவார். ஹே ப்ரபோ, தங்கள் திருவடிகளை பற்றிக்கொள்கிறேன். (4)

कन्दर्पदर्पदलनं कितवैरगम्यं
कारुण्यजन्मभवनं कृतसर्वरक्षम् ।
कीनाशभीतिहरणं श्रितवानहं त्वां
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ ५ ॥

கந்தர்ப்ப தர்ப்ப தளனம் கிதவைரகம்யம்
காருண்ய ஜந்மபவனம் க்ருதஸர்வரக்ஷம் ।
கீநாஶபீதிஹரணம் ச்ரிதவானஹம் த்வாம்
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**कन्दर्प**–மன்மதனின், **दर्प**–கர்வத்தை, **दलनं**–போக்கடிப்பவரும், **कितवैः**–வஞ்சகர்களால் **अगम्यं**–அடையத்தகாதவரும், **कारुण्यजन्मभवनं**–தயைக்குப் பிறப்பிடமாக இருப்பவரும், **कृतसर्वरक्षं**–எல்லோரையும் காப்பாற்றியவரும். **कीनाशभीतिहरणं**–யம பயத்தைப்போக்குபவருமான, **त्वां**–உம்மை, **अहं**–நான், **श्रितवान्**–ஆச்ரயித்திருக்கிறேன். **श्रीशङ्करार्य**–ஹே சங்கராசார்யரே, **मम**–எனக்கு, **पदावलम्बं**–சரணங்களை அவலம்பமாக, **देहि**–தந்தருளவேண்டும்.

யாருக்குமில்லாத தன் பேரழகைக்கண்டு ஏற்பட்ட காமனின் கர்வம் தன்னைவிட அழகான ஆசார்யாளைக் கண்டதும் நீங்கிவிட்டது. யாரையும் வசீகரிக்கும் தன்மை வாய்ந்தது. ஆனாலும் துஷ்டர்கள்,

வஞ்சகர்கள் முதலானோர் பக்கத்தில் நெருங்கமுடியாது. முகதேஜஸ்ஸைக் கண்டு பயந்து ஓடிவிடுவார்கள். நல்ல எண்ணமுள்ள ஸாதுக்கள் தான் அவரை அண்டி அவரருளைப்பெற முடியும். அவரிடமிருந்துதான் கருணை பிறந்திருக்கிறது. உள்ளத்தில் கருணை நிரம்பியிருப்பதால் சிறிதும் வேற்றுமை பாராட்டாமல் உலகிலுள்ள எல்லா ஜீவர்களையும் காப்பாற்று கிறார். காலகாலனான பரமசிவனின் அவதாரமான பகவத்பாதரை அண்டினவருக்கு யமபயம் கிடையாது. உத்தமாதிகாரிகளுக்கு தத்வ ஞானத்தைக்கொடுத்து பிறப்பு இறப்பு அற்ற நிலையைத்தந்தருள்கின்றார். ஹே ஸத்குரோ, தங்களையேயண்டியிருக்கிறேன். திருவடிகளை அருளவேண்டும். (5)

**राकासुधाकरसमानमुखप्रसर्प-**
**द्वेदान्तवाक्यसुधया भवतापतप्तम् ।**
**संसिच्य मां करुणया गुरुराज शीघ्रं**
**श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ ६ ॥**

ராகா ஸுதாகர ஸமாந முக ப்ரஸர்பத்
வேதாந்த வாக்ய ஸுதயா பவதாபதப்தம் ।
ஸம்ஸிச்ய மாம் கருணயா குருராஜ சீக்ரம்
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**गुरुराज**-குருசிரேஷ்டரே, **राकासुधाकरसमान**-பௌர்ணமீ சந்திரனுக்கொப்பான, **मुख**-முகத்திலிருந்து, **प्रसर्पत्**-வெளிவருகின்ற, **वेदान्तवाक्य**-வேதாந்த வாக்யங்களாகிற, **सुधया**-அமிருதத்தால். **भवतापतप्तं**-ஸம்ஸாரத்தின் தாபங்களால் துன்பமடைந்த, **मां**-என்னை, **संसिच्य**-நன்கு நனைத்து, **करुणया**-கருணையோடு, **शीघ्रं**-சீக்கிரமாக, **श्रीशंकरार्य**-ஹே சங்கராசார்யரே, **मम**-எனக்கு, **पदावलम्बं**-திருவடிகளை ஆச்ரயமாக, **देहि**-உ

வெகு காலத்திற்குமுன் பகவத்பாதாள் சிருங்ககிரி க்ஷேத்ரத்தில் பல வருஷகாலம் வாஸம் செய்துகொண்டு சிஷ்யர்களுக்கு வேதாந்த பாடம் சொல்லிவந்தார் என்ற கதை ஞாபகத்திற்கு வருகிறது. அதை

நினைத்துப்பார்க்கிறார். ஆசார்யாள் முகமாக வேதாந்தபாடம் சிரவணம் செய்யும் பாக்யம் தனக்குக் கிடைக்கவில்லையே என்பதை எண்ணி வருந்துகிறார். பகவத்பாதாளிடமே பிரார்த்திக்கிறார். "ப்ரபோ, ஸம்ஸார தாபத்தால் என் மனம் வாடி வதங்கிப்போய்விட்டது. நெருப்பினாலோ வெய்யிலாலோ உடலுக்கு ஏற்பட்ட தாபத்தைத்தண்ணீரால் போக்கலாம். என் மனதிற்கு ஏற்பட்ட தாபத்தை தண்ணீராலோ, தேவாமிருதத்தாலோ போக்கமுடியாது. பூர்ணசந்திரனுக்கொப்பான தங்கள் திருமுக மண்டலத்திலிருந்து பெருகும் வேதாந்தவாக்யாமிருதம் என் காது வழியாக உள்ளே புகுந்து என்மனம் முழுவதையும் நனைத்தால்தான் பிறவித்தாபம் அடியோடு நீங்கும். தாங்களோ எல்லா குருக்களுககும் தலைவர். நானும் உங்கள் சிஷ்யனல்லவா ! என் மேல் கருணைகொண்டு மறுபடியும் அதே சரீரத்தை எடுத்து என் முன் வந்து வேதாந்தபாடம் சொல்லவேண்டும். நான் கேட்கவேணும். தங்கள் திருவடிகளை மனதில் பற்றிக்கொண்டு வேண்டுகிறேன். சந்திரமண்டலத்திலுள்ள அமிருதத்தைப் பருகியும் அமரர்களுக்கு ஸம்ஸாரதாபம் நீங்குவதில்லை. பூர்ணசந்திரன் போன்ற ஆசார்யாளின் திருமுகத்திலிருந்து பெருகிவரும் உபநிஷத் வாக்யங்களாகிற அமிருதத்தைப் பருகுபவர்களுக்கு அடியோடு ஸம்ஸாரதாபம் நீங்கிவிடுகிறது. ஆசார்ய ஸூக்திகளான பாஷ்யாதிகளை குருமுகமாக சிரவணம் செய்பவர்களுக்கும் இந்த பலன் கிடைக்கும். (6)

यत्नं विना मधुसुधासुरदीर्घिकाव-
धीरिण्य आशु वृणते स्वयमेव वाचः ।
तं त्वत्पदाब्जयुगलं बिभृते हृदा यः
श्रीशंकरार्य मम देहि पदावलम्बम् ॥ ७ ॥

யத்நம் விநா மது ஸுதா ஸுரதீர்கிகாவ
தீரிண்ய ஆசு வ்ருணதே ஸ்வயமேவ வாச: ।
தம் த்வத்பதாப்ஜயுகளம் பிப்ருதே ஹ்ருதா ய:
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் ॥

**यः**-எவன், **त्वत्पदाब्जयुगलं**-உம்முடைய தாமரைபோன்ற இரு சரணங்களையும், **हृदा**-மனதால், **बिभृते**-தரிக்கிருனே, **तं**-அவனே,

**यत्नं विना**-முயற்சி இல்லாமலேயே, **मधुसुधासुरदीर्घिकावधीरिण्यः**-தேன், அமிருதம், தேவநதியான கங்கை இவைகளை அவமதிக்கின்ற, **वाचः**-வாக்குகள், **आशु**-விரைவில், **स्वयमेव**-தானுகவே, **वृणते**-வரிக்கின்றன. **श्रीशंकरार्य**-ஹே சங்கராசார்யரே, **मम**-எனக்கு, **पदावलम्बं**-சரணரூபமான ஆச்ரயத்தை, **देहि**-தந்து அருளவேணும்.

உலகில் தேன், அமிருதம், கங்காஜலம் இவைகள் நாக்கிற்கு இனிமையைக் கொடுக்கக்கூடியவை. இவைகளைப்போலவும் இவைகளுக்கு மேலாகவும் செவிக்கு இனிமையைக் கொடுக்கக் கூடியவை கவிகளின் ஸூக்திகள். கவி ஸூக்திகளின் ரஸத்தை அநுபவிக்கும் பொழுது ரஸிகர்களுக்கு தேன் முதலியவற்றின் இனிமை மிகவும் மட்டமாகவே தோன்றும் அந்தக் கவிகள் அநேக காலம் மிகுந்த சிரமப் பட்டு வித்யாப்யாஸம் செய்தபின்தான் இப்பேற்பட்ட ஸூக்திகளை இயற்றும் சக்தி அவர்களுக்கு ஏற்படுகிறது ஆனல் தங்கள் திவ்ய சரணங்களை எப்பொழுதும் மனதில் தியானித்துக்கொண்டு பாதஸேவை செய்யும் பக்தன் எவ்வளவு முட்டாளாக இருந்தாலும் எந்த முயற்சியும் செய்யாத போதிலும் தங்கள் அநுக்ரஹத்தால் மதுரகவியாக ஆகிருன் ஒரு பெண் தன் மனதிற்குகந்த நாயகனை வரித்து அவனுடன் சேர்ந்திருப் பதுபோல் வாக்குகள் பிறர் தூண்டுதலன்னியில் தாமாகவே வந்து இவன் மனதில் நித்யவாஸம் செய்கின்றன. இவன் சப்தங்களைத் தேடிச் செல்லவேண்டியதில்லை, வச்யவாக்காக ஆகிருன். இதற்கு கிரியையே திருஷ்டாந்தமாகக் கூறலாம். நிரக்ஷரனை கிரி ஆசார்ய சரண ஸேவாப்ரபாவத்தாலல்லவோ தோடக விருத்தத்தில் அழகான சுலோகங்களை இயற்றி கவியாக ஆகிவிட்டார். தன் பக்தருக்கே மதுரவாக்கை அருள்கின்ற பகவத் பாதாளின் ஸூக்திக்கு எவ்வளவு மாதுர்யம் என்பதை யாரால் வர்ணிக்க முடியும் ? அவர்கள் இயற்றிய பாஷ்யங்களையும் ஸ்தோத்ரங்களையும் வாசிப்பவர்களுக்கு அதன் காம்பீர்யமும் மாதுர்யமும் நன்கு தெரியவரும் பகவத்பாத ஸூக்தி மாதுர்யத்தை ஸ்ரீ சங்கர விஜயத்தில் நன்கு வர்ணிக்கிருர்.

विक्रीता मधुना निजा मधुरता दत्ता मुदा द्राक्षया
क्षीरैः पात्रधियाऽर्पिता युधि जिताल्लब्धा बलादिक्षुतः ।

न्यस्ता चोरभयेन हन्त सुधया यस्मादतस्तद्गिरां
माधुर्यस्य समृद्धिरद्भुततरा नान्यत्र सा वीक्ष्यते ॥ ७ ॥

श्रीशंकरार्यकरुणावशतः प्रणीतं
स्तोत्रं तदीयमनुवर्णयुतं तदङ्घ्र्योः ।
भक्त्या समर्पितमिदं पठतां नराणां
विद्यां विरक्तिमतुलां गुरुराट् तनोतु ॥ ८ ॥

**श्रीशंकरार्यकरुणावशतः**— ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாளின் கருணைக்கு அதீனமாக, **प्रणीतं**-இயற்றப்பட்டதும், **तदीयमनुवर्णयुतं**-அவருடையதான மந்திராக்ஷரங்களுடன் கூடியதும், **तदंघ्र्योः**-அவருடைய இரு சரணங்களில், **भक्त्या**-பக்தியோடு, **समर्पितं**-ஸமர்ப்பணம் செய்யப்பட்டதுமான, **इदं स्तोत्रं**-இந்த ஸ்தோத்ரமானது, **पठतां नराणां**-படிக்கும் மனிதர்களுக்கு, **विद्यां**-அறிவையும், **अतुलां**-ஒப்பற்ற, **विरक्तिं**-வைராக்யத்தையும், **गुरुराट्**-குருராஜர், **तनोतु**-விரிவாக அருளட்டும்.

ஸ்ரீசங்கரபகவத்பாதர் என்பேரில் கருணை காட்டினார். அந்த கருணை பலத்தைக்கொண்டுதான் இந்த ஸ்தோத்திரம் என்னால் இயற்றப்பட்டுள்ளது. இந்த ஸ்தோத்ரத்தில் ஓர் சிறப்பு உள்ளது. **ओं नमः शंकराय** என்ற சங்கராசார்ய மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரமும் ஒவ்வொரு சுலோகத்தின் முதல் எழுத்தாக அமைந்துள்ளது. இதிலுள்ள சுலோகங்களின் முதல் எழுத்தை மட்டும் தனியாக எடுத்து வரிசைப்படுத்தி வாசித்தோமானால் "**ओं नमः शंकराय**" என்ற சங்கராசார்ய மந்திரத்தைக் காணலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்தோத்ரத்தை ஸ்ரீ சங்கராசார்ய சரணாரவிந்தங்களில் பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்கிறேன். இந்த ஸ்தோத்திரத்தை அர்த்த ஞானத்துடன் படிப்பவர்களுக்கு சிறந்த அறிவைக்கொடுத்து எல்லாத்துன்பங்களுக்கும் மூலகாரணமான உலகப் பற்றையும் நீக்கிவிடுவார் பகவத்பாதர். இந்த ஸ்தோத்ரம் மூலம் ஸ்ரீசங்கர பகவத்பாதாசார்ய மந்திரத்தையும் ஸ்ரீ ஜகத்குரு நமக்குகாட்டுகிறார். (8)

சுபமஸ்து

॥ श्रीः ॥

## ॥ श्लोकानुक्रमणिका ॥


| | पु-सं |
|---|---|
| **अ** | |
| अन्तरायगिरिकृन्तन | १० |
| अपर्णाख्यवल्ली | ३६ |
| अमन्दैर्मन्दारद्रुम | २९ |
| अमृतशिलापरिनिर्मित | १३४ |
| **आ** | |
| आचूडमाचरण | १९ |
| आत्मानात्मविवेचने | ९४ |
| आधोरणा अंकुशमेत्य | ३ |
| आनम्रनाकिगण | २२ |
| आवाहयामि गणनाथ | १७ |
| आश्रामवासिवटु | १४४ |
| आसेचनकमुखाम्बुज | ११८ |
| **इ** | |
| इत्थं गणाधिपति | २४ |
| इमां चेतःपूजां | ३२ |
| **ई** | |
| ईहितं वितर साधिति | ७८ |
| **उ** | |
| उत्पद्यात्मविदग्र | ९६ |
| उदरीधर एव | ६५ |
| **ऊ** | |
| ऊर्ध्वस्थलान्निपतितां | १४६ |

| | पु-सं |
|---|---|
| **ए** | |
| एकादशरुद्राणां | १३५ |
| **ओ** | |
| ओमित्यशेषविबुधाः | १४८ |
| **क** | |
| कन्दर्पदर्पदलनं | १५२ |
| करणानि समानि भवन्ति | ५२ |
| करुणार्द्रविलोचन | ५५ |
| करोमि स्वामिंस्ते | ३१ |
| कल्याणं नः क्रियासुः | १ |
| कस्तूरिकाघुसु | २० |
| कामादिशृङ्खि | १४३ |
| किरीटानां षट्कं | २९ |
| कीर्तिर्यस्य दिगङ्गना | ९० |
| कृत्वाऽनेकामानुष | १११ |
| कृपावारिराशि | ४० |
| **ख** | |
| खगपपूजित | ५ |
| **ग** | |
| गगनचारिभिरञ्चित | ५ |
| गङ्गादिपुण्यसरितां | १८ |
| गजेन्द्रवदनं | ७ |
| गणेशोऽयं | १२ |

| | पु-सं | | पु-सं |
|---|---|---|---|
| गण्डप्रदेश | ११ | दर्शनात्किल दुरध्व | ७६ |
| गण्डस्रवत्स्वच्छ | ७ | दातृभावमवगम्य | ७३ |
| गलितेऽपघने | ५४ | दृष्ट्वा वाचि सरस्वतीं | १३१ |
| गुकारेण वाच्यं | ३८ | **ध** | |
| गुकारो ह्याख्याति | २५ | धुनुषेऽघचयं | ६३ |
| गुरुरूपेण धरायां | १११ | धृतदण्डकमण्डलु | ५१ |
| गुरुशंकरनिर्मित | ६६ | **न** | |
| **च** | | नखकान्तिरक्तमालं | १२३ |
| चरितं न मयेषदपी | ५३ | नन्दनशाखी | ११९ |
| चिदचिद्दुग्धजले | ११७ | नम्रालिह्वत्तिमिर | १४९ |
| चोष्यैश्च भक्ष्य | २२ | नागाननस्य | ६ |
| जननी जनकः | ६१ | नारोग्यमद्य | २३ |
| जलबुद्बुदवत् | ५० | नास्तिक्यतमसि | १११ |
| जातीचम्पक | २० | नित्यानित्यविवेक | १०७ |
| ज्ञानेतरेष्टदाने | १०८ | नृहरिगुरुसक्त | १२५ |
| **त** | | **प** | |
| तत्तादृङ्महिमानं | ११२ | पक्षोऽनिर्वचनीयो | ४४ |
| तीव्रतपा गुरुचरण | १२८ | पदनम्रजनौघ | ६७ |
| तुङ्गातीरलसत्तपो | ९१ | पातकवह्निजलं | १२९ |
| तुहिनांशुसदृशकान्तिः | १३० | पादधूळिपरि | ८२ |
| त्वत्पादाम्बुजयुगलं | ११० | पापीयानिति मत्वा | १०९ |
| **द** | | पाषण्डमुख्य | १४० |
| दन्ती नटः स्वपुरतो | ८ | पिनाकिपार्वती | ९ |
| दमुना यमुनाजनकश्च | ६५ | पुरा शंभुः शुभ्रे | १३२ |
| दरहासदीप्तवक्त्रं | १२० | पुरेन्दुकोपयुक्त | १३ |

| | पु-सं | | पु-सं |
|---|---|---|---|
| पुष्पाञ्जलिं | २३ | यत्पादपङ्कजमतीव | ११ |
| पृथ्वीमण्डल | १०४ | यद्वक्त्राब्ज | ८५ |
| प्रत्याहृतैरखिल | १९ | यद्वचोमधुरिमा | ७२ |
| प्रलम्बारिमुखस्तुत्यं | ६ | यन्नैसर्गिक | ११३ |
| प्रह्लादपोषकत्वं | १३६ | यस्यासीद्दृढभावना | १०२ |
| ब | | यस्यास्तिक्यमभू | ९२ |
| बहुजन्मशतार्जित | ६८ | योगिवर्यपमि | ७१ |
| ब्राह्मणत्वमतिदुर्लभं | ८३ | यो बाल्ये विधि | ८६ |
| ब्रुवते निगमा | ५९ | यः कल्याणपुरे | ९७ |
| भ | | यः पक्षमनिर्वचनं | ४५ |
| भक्तिर्यस्य गुरौ | ८९ | यः श्रीशंकर | ९९ |
| भस्मदानपरिपूरित | ७७ | यः स्वानुग्रह | ८८ |
| भारतिनरसिंहगुरो | १२७ | र | |
| भिक्षुकवरसंपूज्यं | १२२ | रदनविनिर्जित | १२८ |
| भुजङ्गप्रयातेन | ४१ | राकासुधाकर | १५३ |
| म | | ल | |
| मदंघ्रयर्चकानां | १४ | लोके धनाढ्यो | १५ |
| मदमोहमुखान्तर | ६२ | लोके हस्ततले | ४ |
| मर्त्याचिकित्स्य | १४६ | लोकं समस्तमपि | १३९ |
| मस्ते दुरक्षरतति | १५० | व | |
| माणिक्यमंजुल | १८ | वश्यीकृतसर्वाक्षं | १२४ |
| मारमत्तगज | ८२ | वात्सल्यभाजन | १७ |
| मुक्तिवधूवरणो | १० | वारणगमनं | १२२ |
| य | | विप्रं ह्यपरस्मृतियुतं | १४५ |
| यतः कर्ममार्गो | ३९ | विषयेषु सदा रमते | ५७ |
| यत्नं विना मधुसुधा | १५४ | व्यासजैमिनिकणाद | ८१ |

| | पु-सं |
|---|---|
| **श** | |
| शङ्करार्यकृत | ८० |
| शब्दादिमान् हि | १४१ |
| शम्पालतासदृश | १५१ |
| शरीरेन्द्रियादा | ३५ |
| शान्तिदान्तिविरती | ७५ |
| शास्त्रार्थान्बहुधा | ९५ |
| शिव एव भवानिति | ५६ |
| शिवदो भक्तजनानां | १२१ |
| शुद्धाद्वैतमत | ९८ |
| श्रीकण्ठपूजकं तं | ११६ |
| श्रीगुरुशिष्यान्यतम | १३० |
| श्रीमच्छङ्करदेशिकेन्द्र | १०५ |
| श्रीमद्देशिकवर्यान् | ११४ |
| श्रीमन्नृसिंहगुरु | १४२ |
| श्रीशंकरार्यकरुणा | १५६ |
| श्रीसत्संवित्सुख | ११५ |
| **ष** | |
| षण्मुखं हसन्मुखं | ४६ |
| **स** | |
| सत्यं ज्ञानमितीमे | ११६ |
| सत्यं वाचि दया | १०१ |
| सदसन्मतिरेव | ५८ |
| सद्गुरुराजास्य | १ |
| समन्तात्स्नानीयैः | २७ |
| समवाप्य सुदुर्लभ | ६४ |
| समाजिघ्र स्वामिन् | ३० |
| समाश्लिष्टं वल्ल्या | २५ |
| सर्वज्ञतासकल | १३७ |
| सिन्दूरबन्धुर | २ |
| सिंहं द्वैतिमदेभे | १२६ |
| सुकर्पूरस्वादु | ३० |
| सुब्रह्मण्यो यो | ४३ |
| सुराणां संघातै | २६ |
| सुवासोभिश्चाङ्गं | २८ |
| स्थितेऽनुकम्पा | ७० |
| स्फुरद्विद्युद्वल्ली | ४२ |
| स्मितनिर्जित | ४८ |
| स्मितन्यक्कृतेन्दु | ३४ |
| स्वरवेऽघगिरे | ६९ |
| स्वामिन्ददास्यगरु | २१ |
| **ह** | |
| हरिदष्टभरितकीर्ति | १२६ |
| हृतं गङ्गातुङ्गाद्यखिल | २७ |
| हे हेरम्ब मदीय | १६ |
| ह्रिया लक्ष्म्या वल्ल्या | ३३ |


